எட்கார்

# அல்லன் போவின்

# கதைகள்







புக்ஸ் (இந்தியா) லிமிடெட்

எட்கார்

# அல்லன் போவின்

# கதைகள்

தமிழாக்கம் :

டி. ஆர். அருணசலம்

புக்ஸ் (இந்தியா) லிமிடெட்

135, பவழக்காரத் தெரு : சென்னை - 1.

# உள்ளுறை

# வில்லியம் வில்சன்

என் பெயர் வில்லியம் வில்சன் என்று வைத்துக் கொள்ளுவோம். அப்பெயர் பட்ட பாட்டை என்னென்று சொல்லுவது! வசைக்கும் அருவெறுப்பிற்கும் ஆளான பெயர்! இகழ்ச்சியின் உச்சியிலே நின்ற பெயர்! வெறுக்கப்பட்டது. அடியோடு ஒறுக்கப்பட்டது. நாயினும் கடையாகத் தூற்றப்பட்டது. இவ்வசைக்கும் இகழ்ச்சிக்கும் தூற்றலுக்கும் பின்னால் ஒரு சோகக் கதை அடங்கியுள்ளது.

என் பிற்காலச் சோகக் கதையை—விவரிக்க முடியாத துன்பத்தை—மன்னிக்க முடியாத குற்றத்தை—எடுத்துக் கூறுவதென்பது என்னால் முடியாத காரியம். இழிவும் பழியும் என் பிற்கால வாழ்க்கையின் சிகரமாக இருந்தன. அதனுடைய தோற்றுவாயை விளக்குவதே எனது நோக்கமாகும்.

மனிதன் கெடும்போது வழக்கமாகப் படிப்படியாகக் கெடுகின்றான். நானோவெனில் சடுதியில் நேர்மை நீங்கிக் கயவனாகத் திகழலுற்றேன். ஒரு சம்பவம் நிகழ்ந்ததிலிருந்து என் நற்குணங்களெல்லாம் உடம்பில் அணிந்திருந்த சட்டை அகலுவதுபோல பறந்தோடிவிட்டன. சிறு முளையாகத் தோன்றிய தீய இயல்பு காலப்போக்கில் பெரிய மரமாக வளர்ந்து விட்டது. நன்மையொழிந்து தீமை ஏற்படுவதற்குக் காரணமாக இருந்த அந்தச் சம்பவம் என் கதையை நான் சொல்ல முடியாமல் தடுக்கின்றது.

சாவு நெருங்கிவிட்டது. சாவின் நிழல் என்னை அண்டிவிட்டது, அந்நிழல் என் ஆன்மாவிற்குச் சற்று சாந்தி அளிக்கிறது. நான்சாகத் துடித்துக் கொண்டிருக்கும்

இந்நிலையில் எனது கடைசி ஆசை—என்னைச் சார்ந்தவர்களின் அனுதாபத்தைப் பெறவேண்டும் என்ற ஆசை—நிறைவேறுமா என்று ஏங்கிக்கொண்டிருக்கிறேன். தடுக்க முடியாத — தவிர்க்க முடியாத — சூழ்நிலைகளுக்கு நான் அடிமையாகநேர்ந்தது என்பதை அவர்கள் உணர்ந்தால் போதும்; மன அமைதியோடு மடிவேன். பரந்த பாலை வனத்திலும் சிறு செழுநிலப் பரப்பு இருப்பதில்லையா? அதுபோல் எனது தவறான வாழ்க்கையினூடே ஊழின் பெருவலி உள்ளதை அவர்கள் கண்டறியமாட்டார்களா? என் சோகக் கதையிலிருந்து ஊழின் வலியை அவர்கள் கண்டறியட்டும். 'பேதைப் படுக்கும் இழவூழ்' என்பது எனக்கென்றே கூறப்பட்டது போலும்.

உலகத்தில் ஆசையும் பாசமும் என்றுமே இருக்கின்றன என்றாலும் என்னைப்போல் ஆசைக்கு அடிமையாகி வீழ்ச்சியுற்றவர்கள் யாருமே இருக்க முடியாது. ஆகவே நான் பட்ட துன்பத்தைப்போல் வேறு யாரும் துன்பப் பட்டிருக்க முடியாது. ஊழின் வலி, அறிவை அகற்றிவிடும் என்பார். ஆம்! நான் அறிவிழந்தேன். நினைவிழந்தேன். கனவுலகிலேயே காலத்தைக் கடத்திவிட்டேன். அக் கற்பனை யுலகிலே மிகக் கொடிய ஒரு தோற்றத்தைக் கண்டேன். அதன் விந்தைக்கும் அச்சத்திற்கும் பலியானேன்.

* * *

நான் கற்பனைத் திறனும் கிளர்ச்சியுணர்வும் மிக்கவர்களின் வழிவந்தவன். அக் குலத்தின் இயல்புகள் தொற்று நோய் போல் என்னைப் பிடித்துக் கொண்டன. வயது ஆக ஆக, அவ்வியல்புகளும் என்பால் வளர்ந்தன; என் நண்பர்களின் மன அமைதியைக் குலைத்தன; என்னை மீளாத் துன்பத்திற்கு ஆளாக்கின.

'மனம்போன போக்கெல்லாம் போகவேண்டாம்' என்று சொல்லுவார்கள். இந்த முதுமொழியை நான் அறிந்திருக்கவில்லை. என் இளமை உள்ளத்திற்கு—புயல்காற்

றின் படபடப்பும், வெள்ளப் பெருக்கின் வேகமும் ததும்பிக் கொண்டிருந்த உள்ளத்திற்கு—அவ்வுண்மை எங்ஙனம் புலனுக முடியும்? மனம் போனவாறு நடந்துகொண்டேன். கொடிய உணர்ச்சிகளுக்கு ஆளானேன். அடக்க முடியாத ஆசைகளுக்கு அடிமையானேன். உணர்ச்சிப் பெருக்கை—ஆசை வெள்ளத்தை—அணைபோட்டுத் தடுத்து என்னை நல்வழிப்படுத்த என் பெற்ரேர்களால் முடியவில்லை. முயன்ருர்கள். முயன்று என்ன பயன்? இளகிய பிடியிலே இரும்பு நிற்குமா? பிடி நழுவிக் கீழேதான் விழும். இளகிய இதயம் உடைய என் பெற்ரேர்களின் மென்மையான கண்டிப்பால் என்னைக் கட்டுப்படுத்த முடியவில்லை. அவர்களது முயற்சி தோல்வியுற்றது. அது என் முழு வெற்றியாக முடிந்தது. வீட்டில் நான் இட்டதே சட்டமாயிற்று. என் பேச்சுக்கு மறுபேச்சுக் கிடையாது. பெரியோர்களின் கட்டுப்பாட்டில் இருக்கவேண்டிய இளமைப் பருவத்திலேயே தான்தோன்றியானன். எனக்கு அரசன் நானே. எனக்கு வழிகாட்டியும் நானேதான்.

* * *

காலமுறைப்படி பள்ளியில் சேர்ந்தேன். பள்ளி வாழ்க்கையைப்பற்றிய நினைவுகள் என் நெஞ்சம் நீங்கிலா. இங்கிலாந்தில் ஒரு கிராமம். அங்குப் பழைய வீடுகளே காணப்பட்டன. ஓங்கி வளர்ந்த பெரிய மரங்கள் பல இருந்தன. சாலையின் ஓரங்களைக் குளிர்ந்த நிழல்தரும் சோலைகள் அழகு செய்தன. ஆங்காங்குப் பலவகைச் செடிகளும், கொடிகளும் கொழித்துச் செழித்து வளர்ந்திருந்தன. அவைகளிலே மலர்ந்திருந்த வண்ண மலர்கள் நறுமணம் கமழ்ந்தன. அம் மணம் காற்றிலே கலந்து எங்கும் நீக்கமற நிறைந்திருந்தது. எங்கும் ஓரே அமைதி. அந்த அமைதியினிடையே நன்ருக உறங்கிக் கொண்டிருப்பது போல் காட்சியளித்தது ஓங்கியுயர்ந்த மாதாகோயில். அதன் தூக்கம் நிரந்தரமானதாக இல்லைபோலும். மணிக்

கொருமுறை ஒலித்த அதன் மணியோசை அதன் தூக்கத்தைக் கலைத்துக் கொண்டே இருந்தது.

அந்தக் கிராமத்திலுள்ள பள்ளியில்தான் நான் படித்துக் கொண்டிருந்தேன். பள்ளிக்கூடம் ஒரு பெரிய வீடு. எலிசபெத் அரசி காலத்திய கட்டிடம். வீட்டையொட்டிப் பரந்த காலியிடம் இருந்தது. சுற்றிலும் செங்கல் மதில் சுவர்கள் கட்டப்பட்டிருந்தன. சுவர்களின்மேல் கண்ணாடித் துண்டுகள் பதிக்கப்பட்டிருந்தன. அந்த மதில் சிறைக்குள்ளே தான் எங்கள் நடமாட்டமெல்லாம். சிறைக் கைதிகளைக் காவலர்கள் சில சமயங்களில் சிறையைவிட்டு வெளியே அழைத்துச் செல்லுவதுபோல, எங்களையும் வாரத்தில் மூன்று முறை மட்டும் வெளியே அழைத்துச் செல்லுவார்கள். ஆகவே வாரத்தில் மூன்று முறைதான் பள்ளிக்கூட மதில் சுவருக்கு வெளியேயுள்ள புற உலகத்தைக் காண முடியும்? மற்ற நாட்களிலெல்லாம் பள்ளிக்கூடச் சிறையிலேயே முடங்கிக் கிடக்கவேண்டியது தான்!

சனிக்கிழமை மாலைதோறும் இரு "காவலாளர்கள்" சூழ, பள்ளியை அடுத்துள்ள ஏதாவதொரு கழனிக்கு ஒருவர்பின் ஒருவராக அணிவகுத்துச் சென்று வருவோம். ஞாயிறுதோறும் காலையிலும் மாலையிலுமாக இருமுறை மாதாகோயிலுக்கு அதேபோல அணிவகுத்துச் சென்று வருவோம்.

பள்ளியின் தலைமை ஆசிரியரே மாதாகோயிலின் மதகுரு. கோயில் மண்டபத்தில் ஒரு கோடியிலே நாங்கள் அமர்ந்திருப்போம். தலைமை ஆசிரியர் மதகுருவிற்குரிய உடைகளோடு அடிமேல் அடிவைத்து மெதுவாகச் சொற்பொழிவு மேடைமீது ஏறுவார். அவர் ஏறுவதைக் கண்டாலே என் உள்ளத்தில் திகைப்பும் வியப்பும் தோன்றும். அவருடைய முகத்திலே ஒரு வகையான கடுகடுப்பு இருக்கும். கையில் பூண் தடி மின்னும். சமயச் சொற்பொழிவை

ஆற்றுவார். சமய நெறிகளை எடுத்துக் கூறுவார். ஆனால் அவர் பேசுவது ஒன்றுமே விளங்காது.

* * *

பள்ளிக்கூட மதில் சுவரைத் தாண்டி, வெளியே போவதற்கு ஒரு வாயில்கதவு உண்டு. மதில்சுவரைப்போல் அதுவும் மிகப் பருமனாக ஓங்கி நின்றது. மேற்பாகத்தில் கருக்குள்ள இரும்பு ஈட்டிகள் நீட்டிக் கொண்டிருந்தன. அந்தக் கதவையும் அதில் பொருத்தியிருந்த குமிழ்களையும் ஈட்டிகளையும் பார்க்கும் போதெல்லாம் என் நெஞ்சு அச்சத்தால் படபடக்கும். உள்ளத்திலே ஒருவகைப் பயங்கர உணர்ச்சி எழும். புறஉலகக் காட்சி புரியாதபுதிராக இருந்தது. இந்தக் கதவு நான் மேலே குறிப்பிட்ட மூன்று வேளைகளில்தான்— சனிக்கிழமை மாலையும் ஞாயிறு காலையும் மாலையும்— திறக்கப்படும். மற்றபோது மூடியே கிடக்கும்.

பள்ளிக்கூடக் கட்டிடத்திற்குப் பின்புறத்திலுள்ள பரந்த காலியிடத்தில் அகன்ற ஒதுக்கிடங்கள் பல இருந்தன. அவைகளில் மூன்று அல்லது நான்கு பெரிய இடங்கள் சேர்ந்த பகுதிதான் நாங்கள் விளையாடுமிடம். அது நல்ல சமதளமாக இருந்தது. சரளைக் கற்களால் தளம் போடப்பட்டிருந்தது. அங்கு மரங்கள் கிடையா. பெஞ்சுகள் கூடக் கிடையா. விளையாடுமிடத்திற்கு முன்பக்கத்தில் சிறிய தோட்டம் ஒன்று இருந்தது. அதில் பல பூஞ்செடிகளும் கொடிகளும் பயிர் செய்யப்பட்டிருந்தன. அத்தோட்டத்தின் வழியாகச் செல்லும் வாய்ப்புக் கிடைப்பது அரிது. பள்ளிக்கூடத்தில் சேரும்போதும், விடுமுறைகளில் பெற்றோராவது உறவினராவது வந்து எங்களை அழைத்துச் செல்லும்போதும், பள்ளியைவிட்டு விலகிச் செல்லும்போதுந்தான் அப் புனிதத் தோட்டத்தின் வழியாகச் செல்லக்கூடிய அரிய வாய்ப்புக் கிடைக்கும்!

இனிக் கட்டிடத்திற்குள் சென்று பார்ப்போம். கட்டிடத்தின் அமைப்பே ஒரு தனிவகை! அதை 'ஆனந்தமடம்'

என்று சொல்லுவதா? அல்லது 'இன்பமாளிகை' என்று இயம்புவதா? அதற்கு இணை அதுவேதான்! ஆற்று மணலைக் கூட எண்ணிவிடலாம். ஆனால் அதன் மூலை முடுக்குக்களைக் கணக்கிட முடியாது! பார்த்த பக்கமெல்லாம் திருப்பிடங்கள்! இரண்டடுக்குக் கட்டிடந்தான். ஆனால் எந்த அடுக்கில் நாம் இருக்கிறோம் என்று திட்டமாகச் சொல்ல முடியாது! ஒரு அறையை விட்டு அடுத்த அறைக்குப் போவதென்றாலே ஒரு மாடியிலிருந்து மற்றொரு மாடிக்குச் செல்வது போலிருக்கும். நான்கு படி கீழே இறங்கியாக வேண்டும் அல்லது மேலே ஏறியாக வேண்டும். அப்படியிருக்கும் போது எந்த மாடியில் இருக்கிறோம் என்பது எவ்வாறு அறிய முடியும்! சற்று அங்குமிங்கும் போய்வந்தாலே போதும். கட்டிடத்தைப் பற்றித் தெரிந்து கொண்ட கொஞ்ச விவரமும் மறந்துபோய் விடும்.

நான் அங்கு ஐந்தாண்டுகள் தங்கியிருந்தேன் என்றாலும் எனது அறை, கட்டிடத்தின் எந்தப் பாகத்தில் அமைந்திருந்தது என்பதையோ, மற்ற மாணவர்களின் அறைகள் எங்கிருந்தன என்பதையோ திட்டமாகத் தெரிந்துகொள்ள முடியவில்லை.

பாடம் கற்கும் அறையே அவ் வீட்டின் மிகப் பெரிய அறை. அது அதிக நீளமுடையது. ஆனால் குறுகியது; தாழ்வானது. காத்தியக் (Gothic) கலைமுறையைத் தழுவிய சாளரங்கள் (ஜன்னல்கள்) இருந்தன. ஒரு மருங்கில் கோயிலின் கர்ப்பக்கிரகம் போன்ற 8 அல்லது 10 அடி அகலமுள்ள சதுரமான ஒதுக்கிடம் ஒன்று இருந்தது. அதைக் கண்டாலே அச்சத்தால் நடுங்கி ஒடுங்கிப் போவோம். அதில் தான் எங்கள் 'பெரிய கடவுள்'—தலைமை ஆசிரியர்—வீற்றிருப்பர். அத்தகைய ஒதுக்கிடங்கள் மற்றுமிரண்டு இருந்தன. அவைகளும் எங்களுக்கு அச்சத்தைத் தரக்கூடியனவாகவே இருந்தன. அவைகள் எங்கள் 'குட்டித் தேவதைகள்'—கணக்கு, ஆங்கில ஆசிரியர்கள்—இருக்குமிடம்.

அறையின் குறுக்கு நெடுக்காகக் கணக்கற்ற பெஞ்சுகளும் சாய்வு நாற்காலிகளும் இருந்தன. அவைகளெல்லாம் மிகப் பழையவை. அழுக்குப் படிந்து கருத்துப் போயிருந்தன. அவைகளின்மேல் புத்தகங்கள் அடுக்கடுக்காக வைக்கப்பட்டிருந்தன. மேலும் அவைகளில் மாணவர்களின் கைவேலை அழியாத இடம் பெற்றிருந்தது. மாணவர்கள் கத்தியால் செதுக்கிய விசித்திரமான உருவங்களும், பெயர்களும், பெயரின் முதலெழுத்துக்களும் பிறவும் அவைகளை 'அலங்கரி'த்தன. அறையின் ஒரு கோடியில் ஒரு பெரிய வாளியில் தண்ணீர் வைத்திருந்தது. மற்றொரு கோடியில் மிகப் பெரிய கடிகாரம் சுவரில் தொங்கிக் கொண்டிருந்தது.

*　　　*　　　*

சுற்றிலும் பெரும் சுவர்களால் சூழ்ந்த இந்தக் 'கண்ணியமான' கலைக்கழகத்தில் எப்படியோ மூன்று ஆண்டுகளைக் கழித்து விட்டேன். சலிப்போ, வெறுப்போ ஏற்படவில்லை என்றுதான் சொல்ல வேண்டும். குழந்தை உள்ளத்தில் வெளியுலக நிகழ்ச்சிக்கு இடமேது. பள்ளிக்கூட எந்திர வாழ்க்கை வெளிப் பார்வைக்கு வெறுக்கத் தக்கதாகத் தோன்றினாலும் சிறுவனாகிய எனக்குப் பெரிதும் உற்சாகமும் களிப்பும் ஊட்டக்கூடியதாகவே இருந்தது. அத்தகைய உற்சாகமும் களிப்பும் பின்னால் எனக்கு என்றுமே ஏற்படவில்லை. வாலிபம் முதிர்ந்த பருவத்திலே ஆடம்பரமாக வாழ்ந்தபோதும் நான் அவ்வாறு உற்சாகமாகவோ மகிழ்ச்சியாகவோ இருந்ததில்லை. பெரியவனாக வளர்ந்து பல பாவச் செயல்கள் புரிந்தபோதும் அத்தகைய கிளர்ச்சியை அடையவில்லை.

*　　　*　　　*

எனது மனவளர்ச்சியின் முதற் கட்டமே வழக்கத்திற்கு மாறாக இருந்தது. மக்களில் பெரும்பாலோருக்கு அவரவர் இளமைக்கால நிகழ்ச்சிகளெல்லாம் பெரியவர்களான பின்பு நினைவில் இருப்பது அரிது. தப்பித்தவறி

நினைவு இருந்தாலும், அது அறைகுறையான, தெளிவற்ற, நிச்சயமற்ற நினைவாகத்தான் இருக்கும். நான் இதற்கு விதிவிலக்கு! என் இளமைக்கால நினைவுகளெல்லாம் என் உள்ளத்தில் பசுமரத்து ஆணிபோல்—கல்லின்மேல் எழுத்துபோல்—ஆழமாகவும் தெளிவாகவும் நிலையாகவும் பதிந்துவிட்டன. நான் சிறுவனாக இருந்தபோது வயது வந்தவனுக்கு இருக்கக்கூடிய மன வளர்ச்சியோடு ஒவ்வொன்றையும் உணர்ந்திருக்க வேண்டும். இல்லையென்றால் அவைகளை இன்றும் மனத்தில் வைத்திருக்க முடியுமா!

எனினும், என் இளமைக்கால நிகழ்ச்சிகளை உலகத்தின் கோடிக்கணக்கான நிகழ்ச்சிகளோடு ஒப்பிட்டுப் பார்க்குமிடத்து, அவைகள் மிக மிகச் சிலவே. சிறு மடுவை பெருங்கடலோடு ஒப்பிட முடியுமா? காலையில் துயில் எழுவதுஇரவில் படுக்கைக்குச் செல்வது, பாடம் படித்தல், சுற்றித் திரிதல், விளையாடுதல், அரைநாள் விடுமுறைகளைக் கழித்தல் ஆகிய நிகழ்ச்சிகளை நீண்டகாலமாக நினையாமலிருந்து இப்போது நினைக்கும்போது ஒரு தனிவகை உணர்ச்சியும் பலதிறப்பட்ட கிளர்ச்சியும் மெய்ச்சிலிர்ப்பும் ஏற்படுகின்றன.

என் ஆர்வமும் துடுக்குத்தனமும் ஆதிக்க மனப்பான்மையும் விரைவில் என்னை மற்ற மாணவர்களின்றும் வேறுபடுத்திக் காட்டலாயின. நாளடைவில் எல்லா மாணவர்களிலும் நானே முதல்வனாக ஆனேன். ஆனால் ஒரே ஒரு மாணவன் மட்டும் எனக்குப் போட்டியாக இருந்தான். எதிர்பாரா வகையில் என்னுடைய பெயரே அந்த மாணவனுடைய பெயராகவும் இருந்தது. என்னுடைய பெயரைத் தெரியாத மாணவர்களே இல்லை. எந்தக் கும்பலிலும் என்னுடைய பெயர்தான் 'அடி'படும். என் பெயர் எல்லோருடைய நாவிலும் உறையும் பொதுச் சொத்தாகிவிட்டது. இங்கிலையில் என் பெயரே வேறு ஒருவனுக்கும் பெயராக இருப்பது இடையூறாகப் பட்டது. எனவே 'வில்சன்'

என்றிருந்த என் பெயரை 'வில்லியம் வில்சன்' என மாற்றிக் கொண்டேன். என் தொகுதி மாணவர்களிலே படிப்பிலும் விளையாட்டிலும் எனக்குப் போட்டியாக இருந்தவனும்—எனது செல்வாக்கிற்கு அடிபணிய மறுத்தவனும்—நானே ஏற்படுத்திக்கொண்ட என் சர்வாதிகார ஆட்சியில் தலையிடத் துணிந்தவனும்—என் பெயருள்ள அம்மாணவன் ஒருவனேதான். உலகத்திலேயே மிகப் பெரிய தடையற்ற—தன்மூப்பான ஆட்சி ஒன்று உண்டென்றால், அது திறமைமிக்க மாணவன் ஒருவன், திறமை குறைந்த தன் சகாக்களின்மேல் செலுத்தும் ஆட்சியாகத்தான் இருக்க முடியும்.

வில்சனின் எழுச்சி எனக்கு மிகுந்த தொல்லையாக முடிந்தது. வெளிக்கு அவனை நான் ஊக்கத்தோடு எதிர்த்தாலும் ஏளனம் செய்தாலும் உள்ளுக்குள் எனக்கு அச்சமாகத்தான் இருந்தது. என்னோடு அவன் சமத்துவம் கொண்டாடுவதை நான் விரும்பவில்லை. அவன் ஒருவேளை என்னைவிட உண்மையிலேயே உயர்ந்தவனோ என்ற ஐயம் வேறு என் உள்ளத்தில் எழுந்து சஞ்சலத்தை விளைவித்தது. ஐயமும் அச்சமும் சேர்ந்து கொண்டால் மனிதன் படும் பாட்டைச் சொல்லவும் வேண்டுமோ? அந்த ஐயத்தையும் அச்சத்தையும் எப்படித் தவிர்ப்பது என்றே விளங்கவில்லை. எனினும் அவன் எனக்கு இணையானவன் அல்லது என்னைவிட திறமை மிக்கவன் என்ற கருத்து என்வரையில் தான். நான்தான் எல்லோரிலும் முதன்மையானவன் என்று மற்ற மாணவர்களெல்லோரும் கருதிவந்தனர். அது சரியோ, தவறோ! அதில் அவர்களுக்கு ஐயமேயில்லை. அவனுடைய போட்டியும் எதிர்ப்பும் என் காரியங்களில் அவன் தலையிடுவதும் எங்களுடைய சொந்த விஷயங்களே தவிர, அவைகள் அம்பலத்திற்கு வரவில்லை. என்னுடைய திறமைக்கும் முதன்மைக்கும் காரணமாக இருந்த மனோசக்தியும் ஆர்வமும் அவனிடத்தில் இருந்ததாகத் தெரியவில்லை.

எனினும் அவன் என்னோடு போட்டிபோட்டு என்னைத் திகைக்கச் செய்து என் மதிப்பைக் குலைத்துவிட முடிவு செய்துவிட்டான் என்றே எண்ணினேன். அவன் என்னை அவமதித்தாலும், என் பேச்சை மறுத்தாலும், என் காரியங்களில் குறுக்கிட்டாலும் அவன் நடத்தையிலே 'அன்பு' கலந்திருந்தது. அதைப் பலமுறை அறிந்து நான் வியந்ததுண்டு. என்னோடு போட்டி போட்டான்; அதே சமயத்தில் என்பால் அன்பு உடையனாகவும் தெரிந்தான். இதனுடைய 'மர்மம்' எனக்கு விளங்கவில்லை. ஒருவேளை செருக்கு மிகுதியால் அவன் அப்படி நடந்து கொண்டானோ என்று கூட எண்ணினேன்.

சந்தர்ப்பத்தின் சதியை என்னென்று சொல்வது! வில்சன் என் பெயர்க்காரனாக இருந்ததோடல்லாமல் நான் பள்ளியில் என்று சேர்ந்தேனோ அதே நாளில்தான் அவனும் சேர்ந்தான். இதன் காரணமாக மேல்வகுப்பு மாணவர்கள் நாங்கள் இருவரும் சகோதரர்களென்றே கருதி வந்தனர். கீழ்வகுப்பு மாணவர்களைப் பற்றிய உண்மைகளைத் தீர விசாரித்துத் தெரிந்து கொள்ளும் ஆர்வம் மேல் வகுப்பு மாணவர்களுக்கு என்றுதான் இருந்தது! வில்சனுக்கும் என் குடும்பத்திற்கும் எந்தவகையான தொடர்பில்லாதிருந்தும் நாங்கள் இருவரும் சகோதரர்களெனக் கருதப்பட்டோமே! அதை நினைத்து வியப்பதா, சிரிப்பதா! என்று தெரியவில்லை. நாங்கள் உண்மையிலேயே சகோதரர்களாயிருந்திருந்தால், நாங்கள் இரட்டையராகத்தான் இருந்திருக்க வேண்டும். ஏனெனில், எங்கள் இருவருடைய பிறந்த நாளும் ஒன்றே (19-1-1809). இந்த உண்மையை நான் பள்ளியை விட்டு விலகிய பின்னர் எதிர்பாரா வகையில் அறியவந்தேன். என்னே! எங்கள் பொருத்தம்.

வில்சனின் போட்டியும் சகிக்கமுடியாத மறுப்புணர்ச்சியும் எனக்கு ஓயாத கவலையைத் தந்தபோதிலும் நான் அவனை அடியோடு வெறுக்கவில்லை. அநேகமாக ஒவ்வொரு

நாளும் எங்களுக்குள் ஏதாவதொரு பூசல் இருந்து கொண்டே இருக்கும். எப்படியும் வெற்றியை எனக்கே விட்டுக் கொடுத்துவிடுவான். எனினும் வெற்றிக்குரியவன் தான்தான் என்பதை எப்படியாவது எனக்கு உணர்த்தி விடுவான். நான் தற்பெருமை உள்ளவனுக இருந்தும் அவன் என்பால் வைத்திருந்த உண்மையான மதிப்பின் காரணமாக, நாங்கள் ஒருவருக்கொருவர் பேசிக்கொள்ளும் அளவிற்காவது நண்பர்களாய் இருந்தோம். நாங்கள் இரு வரும் பல வகைகளில் ஒருவரையொருவர் ஒத்திருந்த போதி லும் எங்களிடையே உண்மையான நட்பு வளரவில்லை. காரணம், எங்களுள் நிலவிய தீவிரமான போட்டிப் பான்மையேபோலும்! அவன்பால் நான் எத்தகைய எண் ணம் கொண்டிருந்தேன் என்று சொல்வது! அவனை நான் வெறுத்தேனு, பகைத்தேனு, மதித்தேனு, வியந்தேனு அல் லது போற்றினேனு என்று திட்டமாகச் சொல்ல முடி யாது. எனினும் இவையெல்லாம் கொஞ்சம் கொஞ்சம் சேர்ந்திருந்தன—மனேதத்துவ ஞானிக்கு வில்சனும் நானும் இணைபிரியாத தோழர்கள் என்றே பட்டிருக்கும்.

சந்தர்ப்பம் கிடைத்தபோதெல்லாம் அவனைக் கிண்டல் செய்து மட்டம்தட்டப் பார்த்தேன். ஆயின், எங்களிடையே நிலவிவந்த அசாதாரணத் தொடர்பின் காரணமாக என் கிண்டல் வெறும் கேலியாகவும் ஏளனப் பேச்சாகவும் இருந் ததேயல்லாமல் தீராப் பகையை உண்டாக்கவில்லை. அவ னைக் கேவலப்படுத்த நான் பலதடவை முயன்றபோதிலும் என் முயற்சி பெரும்பாலும் பயன் அளிக்கவில்லை. எவ்வளவு திறமையோடும் தந்திரத்தோடும் அவனைக் கேலிக்கு ஆளாக் கத் திட்டமிட்டாலும் அவன் அதற்குப் பிடி கொடுக்காம லேயே தப்பித்து வந்தான். அவன் மௌனமும் உதாசீன மும் என் திட்டங்களையெல்லாம் விழலாக்கின. எனினும் ஒரு விஷயத்தில் எனக்குப் பிடி கிடைத்தது. அவனுக்குத் தொண்டையில் ஏதோ கோளாறு இருந்தது. அதனுல்

அவன் பேசும்போது குசு குசுவென ஒலிக்குமே தவிர, அவனால் தொண்டையை உயர்த்திக் கலகலப்பாகப் பேசு முடியாது. இதை அடிக்கடி குத்திக்காட்டியும் பழித்துக் காட்டியும் அவனை ஏளனம் செய்திருக்கிறேன்.

ஆனால் என் ஏளனத்திற்கு அவன் பயந்துவிடவில்லை. சரியான முறையில் பழிக்குப் பழிவாங்கிவிட்டான். என் பண்பற்ற பரவணிப் பெயரும் (Uncourtly Patronymic) சர்வசாதாரணமான முதற் பெயரும் எனக்கு அடியோடு பிடிக்காதவை. அப் பெயர்களைக் கேட்டாலே காதுகளில் நாராசத்தைக் காய்ச்சி ஊற்றினால்போல் இருக்கும். அவ்வளவு வெறுப்பு எனக்கு அப்பெயர்களைக் கேட்டால். நான் என்று பள்ளியில் வந்து சேர்ந்தேனோ அன்றே என் பெயர்க்காரப் போட்டி மாணவனும் வந்து சேர்ந்தானல்லவா? எனக்கு எந்தப் பெயர்கள் பிடிக்காதோ அந்தப் பெயர்களே மற்றொருவனுக்கும் இருப்பதைக் கண்டதும் எனக்கு மிகவும் கஷ்டமாயிருந்தது. ஒற்றைக்கு இரட்டையாக அப்பெயர்களையே திருப்பித் திருப்பிக் காதில் கேட்க வேண்டி வருமே! அவன் என் கண்களுக்குப் படும்போதெல்லாம் சினமூட்டும் அப் பெயர்கள் நினைவுக்கு வருமே! மற்றவர்கள் பெயர்ப் பொருத்தத்தின் காரணமாக அவன் செயல்களைத் தவறான என் செயல்களாகக் கொள்ளக் கூடுமே! என்ற எண்ணங்கள் தோன்றி என் மனதைக் குழப்பின. இதனால் அப் பெயர்களை முன்னைவிட அதிகமாக வெறுத்தேன். இதை என் போட்டிக்கார வில்சன் எப்படியோ தெரிந்து கொண்டான். அடிக்கடி அப்பெயர்களைச் சொல்லி என் கோபத்தைக் கிளப்பினான். என்னை வஞ்சம் தீர்த்துக் கொள்வதற்கு அவனுக்குச் சரியான வழி கிடைத்துவிட்டது. இப் பிரச்னையை எப்படித் தீர்ப்பதென்றே தெரியாமல் கலங்கினேன்.

இவ்வாறு அவன் தூண்டிவிட்ட கோப உணர்ச்சியை மேலும் பன்மடங்காகப் பெருக்கின வேறு பல சந்தர்ப்பங்

கள். பெயர்ப் பொருத்தத் தொல்லையை எப்படியாவது பொருத்துக் கொள்ளலாம் என்று மனதைத் தேற்றுவதற்குள் வேறு பல பொருத்தங்களைத் தெரியவந்தேன். அவனும் நானும் ஒரே உயரம்! அவனுக்கும் எனக்கும் ஒரே மாதிரி உடலமைப்பு; பருமனும் ஒன்றே; பெயர் பொருத்தம், (உடல்பொருத்தம், மனப்பொருத்தம்) நாங்கள் இருவரும் உறவினர்கள்—என்ற வதந்தி—இவையெல்லாம் சேர்ந்து என்னை மீளாத் தொல்லைகளுக்கு ஆளாக்கின. வில்சன் பலவகைகளிலும் என்னை ஒத்திருந்ததனால் என் பெருமை குலைந்து விட்டால் என்ன செய்வது என்ற மனப்பிரமை தானே இவ்வளவு தொல்லைகளுக்கும் காரணம்?

மனிதன் ஒரு விந்தையான உயிர்ப்பிராணி. தானே துன்பத்தைத் தேடிக்கொள்கிறான். வீண் கற்பனைகளைப் பண்ணுகின்றான்! அக் கற்பனைகளே அவனுக்குத் துன்பத்தைத் தேடித் தந்துவிடுகின்றன. இக் கற்பனைகளுக்கு நன்றியறிதலே கிடையாதுபோலும்! தம்மைப் படைத்தவனையே படுகுழியில் தள்ளிவிடுகின்றன. எல்லாக் கற்பனைகளுமே இப்படித்தானோ? இல்லை இல்லை. வீண் கற்பனைகளும் விபரீத கற்பனைகளும் தவறான கற்பனைகளும் மாத்திரமே தொல்லை தரக்கூடியவைகள்.

வில்சன் எனக்குப் பிடிக்காத பரவணிப் பெயரைச் சொல்லிக்காட்டிக் கோபமூட்டியதோடு நின்றுவிடவில்லை. பேச்சு, நடையுடை, பாவனை, பழக்கவழக்கங்கள் எல்லாவற்றிலும் என்னைப்போலவே நடிக்க முற்பட்டான். நான் உடுப்பதுபோலவே உடையணியத் தலைப்பட்டான். அது சுலபமான காரியந்தானே! அடுத்தபடியாக என் நடையையும் பாவனைகளையும் தனதாக்கிக்கொண்டான். என் குரலையும் விட்டுவைக்கவில்லை! தொண்டைக் கோளாறின் காரணமாக என்னைப்போல் அவனால் உரக்கப்பேச முடியவில்லை யென்றாலும் என்பேச்சைப்போலவே பேசக் கற்றுக்

கொண்டான். படிப்படியாக 'ஒத்திகை' நடத்தி முழுதிலும் என்போலவே நடிக்கப் பழகிவிட்டான்.

என்னைப் பிரத்தியட்சமாகப் பிரதிபலிக்கும் உருவப் படம் ஒன்றைத் தீட்டி அதற்கு உயிரும் கொடுத்துவிட்டால் எப்படியிருக்குமோ, அப்படி இருந்தது அவனுடைய அற்புதமான நடிப்பு. ஆம்! அவனுடைய நடிப்பிற்கு உருவத்தை உண்மையாகப் பிரதிபலிக்காத கேலிச்சித்திரத்தை உபமானமாகக் கூறுவதைவிட ஒப்பற்ற உயிரோவியத்தை உபமானமாகக் கூறுவதே சரியாகும். அவ்வளவு சிறப்புடையது அவன் நடிப்பு. அவன் தன் நடிப்பின் வெற்றியைக்கண்டு அகமகிழ்ந்தான்; புன்னகை பூத்தான். அப் புன்னகை என்னைப்பார்த்து ஏளனம் செய்வதுபோல் இருந்தது. தன் நடிப்பென்னும் கொடுக்கால் கொட்டிவிட்டான் என்னை.

வில்சன் தன் போலி நடிப்புத்திறமையை தனக்குள்ளாகவே மகிழ்ந்தானேயல்லாமல் மற்றவர்களுக்குக் காட்டி அவர்களின் பாராட்டைப் பெறவில்லை. பிறர் பாராட்டை ஒரு பொருட்டாக மதிக்கவில்லை போலும்! இதனுல் எனக்கு ஒரு பெரும் நன்மை ஏற்பட்டது. வில்சனின் திட்டமும் நடிப்பும் பள்ளியிலே என்னையும் அவனையும் தவிர வேறு யாருமே அறிந்துகொள்ளவில்லை. மற்றவர்களின் கேலிக்கும் சிரிப்புக்கும் இடம் ஏற்படவில்லை. இது எனக்குப் பெரும் ஆறுதலாக இருந்தது.

* * *

வில்சன் அடிக்கடி என் காரியங்களில் அனுவசியமாகத் தலையிடுவதை நான் விரும்பவில்லை என்பதை ஏற்கனவே குறிப்பிட்டுள்ளேன். தலையிட்டவன் வெறுமனே தலையிடவில்லை; எனக்கு அறிவுரைகூறவும் முனைந்தான். வெளிப்படையாக அறிவுரை கூறவில்லையெனினும் குறிப்பால் உணர்த்தினுன். என்னை எப்படியெப்படி ஏளனம் செய்ய முடியுமோ அப்படியப்படி யெல்லாம் ஏளனம் செய்யக்

கங்கணம் கட்டிக் கொண்டான் என்ற எண்ணம் என் உள்ளத்தில் வேரூன்றியிருந்ததால், அவனுடைய அறிவுரைகள் மேலும் மேலும் கோபத்தைக் கிளப்பின.

அவ்வறிவுரைகளை நான் அப்போது வெறுத்தது முற்றிலும் தவறு என்பதை இப்போது உணர்கின்றேன். உணர்ந்துதான் என்னபயன்! அன்று வில்சன் சிறிய பையன்தானே! பிறருக்கு அறிவுரை சொல்லுமளவிற்கு அவன் அனுபவமும் பெறவில்லை; வயதும் முதிரவில்லை. அவ்வளவு சிறு பிராயத்தினனாக இருந்தும், அவன் குறிப்பால் காட்டிய அறிவுரைகள் அனைத்தும் சரியானவையே என்பதை நான் இன்று சொல்லிக்கொள்ள ஆசைப்படுகிறேன்.

அவன் என்னைவிடத் திறமையும் பொது அறிவும் மிக்கவனாக இல்லையென்றாலும், என்னைவிட ஒழுக்க உணர்வு மிக்கவனாக இருந்தான். ஆகவேதான் நல்ல அறிவுரைகளைக்கூற அவனால் முடிந்தது. அன்று, அவனுடைய அறிவுரைகளை வெறுக்காமல் காதில் போட்டுக்கொண்டிருந்திருந்தால், நான் வாழ்க்கைப்பாதையிலே வழிதவறிச் சென்றிருக்கமாட்டேன்; பாவங்கள் புரிந்திருக்க மாட்டேன்; துன்பப்படுகுழியில் வீழ்ந்திருக்கமாட்டேன். இன்று வாழ்வின் ஓரத்திலே—துன்பத்தின் சிகரத்திலே—சோகக் கடலிலே—தத்தளித்துக் கொண்டிருக்கவேண்டிய நிலையும் ஏற்பட்டிருக்காது.

*　　*　　*

காலச் சக்கரம் சுழன்றது. நாட்கள் நகர்ந்தன. மாதங்கள் பல மறைந்தன. எனினும் எங்களிடையே நிலவிய அசாதாரணத் தொடர்பில் சிறிதேனும் மாறுதல் நிகழவில்லை. வில்சன் விடாப் பிடியாக என்னைக் கண்காணித்து வந்தான். நான் பொறுமையை இழந்துவிட்டேன். வெளிப்படையாகவே என் வெறுப்பையும் கோபத்தையும் காட்டமுற்பட்டேன். நான் ஏற்கனவே கூறியபடி நாங்கள் இரு

வரும் பள்ளியில் சேர்ந்த புதிதில் எங்களிடையே நட்பெனும் நாடாச்சிறப்பை நல்கவல்ல அன்புகலந்த ஆர்வம் இருந்தது. ஆனால் தன் மூப்பாக அருவருப்புண்டாக்கும் வகையில் என் காரியங்களில் அவன் தலையிடத் தொடங்கியதும் அந்த ஆர்வம் மறைந்து வெறுப்பு மலர்ந்தது. நான் வெறுப்பதை அவன் ஒரு சமயம் அறிந்துவிட்டான்; தனது நடத்தையை மாற்றத் தலைப்பட்டான்.

சாந்தமூர்த்தியாக இருந்துவந்த அவன் ஒருநாள் தன் இயல்பிற்குப் புறம்பான முறையில் அடக்கத்தை உதறித் தள்ளிவிட்டு நேரடியாகச் சண்டைக்கு வந்துவிட்டான். கடுமையான சண்டை நிகழ்ந்தது. அவன் பேசிய பேச்சுக்களும் சண்டைசெய்த தோரணையும் என்னைத் திடுக்கிடச் செய்தன. நான் பிறந்தபோதோ அல்லது பால் மணம் மாறாத பச்சிளம் குழந்தையாக இருந்தபோதோ நடந்த சம்பவங்கள் அரைகுறையாக நினைவுக்கு வந்தன. ஞாபக சக்தியே தோன்றியிராத அளவிற்குக் குழந்தையாக இருந்தபோது நேர்ந்த சம்பவங்கள் அல்லவா? அதனால் அந்நினைவு, மங்கிய நிலவொளியில் தோன்றும் தூரக் காட்சி போலத்தான் இருந்தது. எனினும் அம்மங்கிய நினைவிலும் ஒன்று புலனாயிற்று. அதாவது வில்சனுக்கும் எனக்கும் முன்னர் ஏதாவதொரு வகையில் நெருங்கிய தொடர்பு இருந்திருக்க வேண்டும் என்கிற எண்ணம் வன்மையாகத் தோன்றியது. எனக்கும் அவனுக்கும் நெருங்கிய தொடர்பு உண்டு என்ற எண்ணத்தை என்னால் தாங்க முடியவில்லை. ஆனால் அவ்வெண்ணம் மனத்தினின்றும் வெகுவிரைவில் அகன்றது. இச்சம்பவம் நடந்த நாளன்று நாங்கள் ஒருவருக்கொருவர் பேசியதே அப்பள்ளியில் நடந்த எங்களுடைய கடைசி உரையாடலாகும்.

* * *

எண்ணற்ற பிரிவுகள்கொண்ட எங்கள் பள்ளிக்கூடக் கட்டிடத்தில் பெரிய அறைகளும் பல இருந்தன.

ஒரு அறையிலிருந்து மற்ருென்றுக்குச் செல்ல வழியும் இருந்தது. அவ்வறைகள் மாணவர்களில் பெரும்பகுதியினர் படுத்துறங்க இடமளித்தன. அவ்வறைகளல்லாமல் ஒழுங்கற்ற முறையில் அமைக்கப்பட்ட கட்டிடத்திற்கே இயல்பான முறையில் சிறு சந்துகளும் மூலைமுடுக்குகளும் பல இருந்தன. இவற்றையும் பயன்படுத்தி சிறுசிறு அறைகளாகத் தடுத்திருந்தனர். அவை ஒவ்வொன்றும் ஒரு மாணவன் படுத்துறங்குவதற்குப் போதுமானதாக இருந்தது. அத்தகைய அறையொன்றில்தான் வில்சன் இருந்து வந்தான்.

நான் பள்ளியில் சேர்ந்து ஐந்தாவது ஆண்டு முடியும் தருவாயில்தான் நான் மேலே குறிப்பிட்ட சண்டை நிகழ்ந்தது. அந்நாள் இரவில் எல்லோரும் நன்ருகத் தூங்கிக் கொண்டிருந்த சமயம் ஒரே ஒருவன்தான் தூங்காமல் விழித்துக்கொண்டிருந்தான். உள்ளத்திலே அமைதி இல்லாதவனும் ஒரே கவலையாக இருப்பவனும் ஏதாவதொரு காரியத்தைப்பற்றித் தீவிரமாக யோசித்துக் கொண்டிருப்பவனும் தூங்கமாட்டான் என்று சொல்லுவார்கள். அது போல் தூங்காமலிருந்த அவ்வொருவன் கருமமே கண்ணுயிருந்தான். ஆகவேதான் கண் துஞ்சவில்லை. அப்பேர்வழி வேறு யாருமில்லை: நானேதான். சுடுகாட்டு அமைதி நிலவிய அந்நள்ளிரவு நேரத்திலே படுக்கையை விட்டு எழுந்தேன். கையில் விளக்கை ஏந்திக்கொண்டு என் எதிராளியின் படுக்கையறையை நோக்கி பூனையைப்போல் பதுங்கி ஓசை செய்யாமல் நடந்துசென்றேன். அவனை எப்படியாவது வஞ்சம் தீர்த்துக்கொள்ளவேண்டும் என்று நீண்ட நாட்களாக முயற்சி செய்துவந்தேன். ஆனல் முயற்சி நிறைவேருமலேயே இருந்துவந்தது. இன்று எப்படியாவது என் வெறுப்பு முழுவதையும் அவன் உணரும்படி செய்துவிடுவது என்று துணிந்து விட்டேன். அத்துணிவே என்னை அவன் அறைக்கு உந்திச் சென்றது. அறையை அடைந்த

தும் விளக்கை வெளியே மறைத்து வைத்துவிட்டுச் சந்தடியின்றி அறைக்குள் அடியெடுத்து வைத்தேன். வில்சன் குறட்டைவிட்டுத் தூங்கிக்கொண்டிருந்தான். உடனே வெளியே வந்து விளக்கை யெடுத்துக்கொண்டு மீண்டும் அறைக்குள் சென்றேன். படுக்கையைச் சுற்றிலும் சூழ்ந்திருந்த திரையை மெதுவாக நீக்கினேன். விளக்கின் தெள்ளிய ஒளி அவன்மேல் பாய்ந்தது. அதேசமயத்தில் என் கண்கள் அவன் முகத்தை உற்றுப் பார்த்தன. பார்த்த மாத்திரத்தில் அப்படியே மலைத்துவிட்டேன். அச்சத்தால் உடல் குலுங்கியது; இதயம் படபடவென்று துடித்தது; கால்கள் நடுங்கின; மூச்சுத் தடுமாறியது. விளக்கை முகத்திற்கு வெகு அருகாமையில் கொண்டு சென்று மீண்டும் உற்றுக் கவனித்தேன். நான் கண்டது வில்சனின் முகந்தானா? என் கண்களையே என்னால் நம்ப முடியவில்லை. நான் கண்டது உண்மையில் வில்சனின் முகமே என்ருலும் அது அவனுடைய முகமாக எனக்குப் படவில்லை. ஒன்றுமே விளங்கவில்லை. அவனுடைய முகத்தோற்றத்தில் என்ன புதுமை இருந்தது! நான் இப்போது கண்ட முகத்தோற்றம் வேறு. அன்றுடம் பகலிலே கண்ட முகத்தோற்றம் வேறு. பகல் நேரங்களில் என்னுடன் போட்டி போட்டு என்னைப்போலவே உடையுடுத்துப் பேச்சுப்பேசி நடை பயின்று நடித்த வில்சனின் முகத்தோற்றம் இப்போது நான் கண்ட தோற்றத்தினும் முற்றிலும் மாறுபட்டது. வில்சன் மனிதன்தானா? அல்லது மனிதனுக்கு அப்பாற்பட்டவனா? அவனை என்னால் அறிந்துகொள்ள முடியவில்லை. ஒரே மர்மம்; விளங்காத புதிர்; அறிவிற்கு எட்டாதது. அவனைப்பற்றியே என்னால் நினைக்கமுடியவில்லை. பயங்கர விந்தை! அந்த இடத்தில் என்னால் நிற்க முடியவில்லை. குளிர்க்காய்ச்சல் வந்தவனுக்கு உடல் நடுங்குவதுபோல் என் உடல் நடுங்கியது. நடுங்கிக்கொண்டே விளக்கை அணைத்துவிட்டு வெளியே வந்தேன். கால்கள்

விரைந்தன. ஓடினேன்! ஓடினேன்! பள்ளிக்கூடத்தை விட்டே ஓடிவிட்டேன்! மீண்டும் அப்பள்ளிக்குத் திரும்பிச் செல்லவில்லை.

பள்ளியைவிட்டு ஓடினவன் நேரே வீட்டிற்குச் சென்றேன். வீட்டில் சில மாதங்களைப் போக்கினேன். பின் ஈடன் * பள்ளியில் மாணவனுக்ச் சேர்ந்தேன். பழைய சம்பவங்களை ஒருவாறு மறந்தேன். பழைய பயங்கர உணர்ச்சிகள் மறைந்தன. ஈடனில் மதிகெட்டச் செயல்களில் ஆழ்ந்துத் திகழ்ந்தேன். மடமைக் கடலிலே மூழ்கினேன். அக்கடலின் அலைகள் கடந்தகால நினைவுகளையெல்லாம் அடித்து ஒதுக்கிவிட்டன. அந்நினைவுகளின் வெறும் நுரைமட்டுந்தான் அலைகளின் பிடிக்குத் தப்பியது.

ஈடனில் நான் நடத்திய ஒழுக்கங்கெட்ட வாழ்க்கையின் போக்கை ஆதியோடந்தமாக விவரிக்க விரும்பவில்லை. பள்ளிக்கூட வரம்பைக் கடந்தேன்; சட்டதிட்டங்களை மீறினேன். மூன்றாண்டுகள் உருண்டோடிவிட்டன. எனினும் முக்கால் காசுப் பயனும் பெறவில்லை. நன்மையில்லை என்றாலும் தீமைகளுக்குக் குறையில்லை. தீயபழக்கவழக்கங்கள் நன்றாக வேரூன்றிவிட்டன. 'கயவரைக் கயவரே காமுறுவர்' என்பதற்கேற்ப ஒழுக்கங்கெட்ட என்னோடு ஒழுக்கம் குன்றிய மாணவர்கள் சிலர் சேர்ந்துகொண்டனர். என் அறையில் மறைமுகமாகக் கூடிக் குடித்தோம். விரைவில் பெருங் குடியராளேம். ஒவ்வொருநாளும் இரவில் வெகுநேரம் கழித்துத்தான் எங்கள் அந்தரங்கநாடகம் தொடங்கும். மூக்குப்பிடிக்கக் குடித்துவிட்டுச் சீட்டாடத் தொடங்கிவிடுவோம். ஆட்டம் தொடங்கிவிட்டால் நேரம்போவதே தெரியாது. கிழக்கு வெளுக்கும்போது எங்கள் ஆட்டமும் குடியும் உச்சநிலையை அடையும். அவ்வளவிற்கு ஆட்டத்திலே மூழ்கிவிடுவோம். இவ்வாறாக ஒருநாள் ஆட்டத்தின் உச்சநிலையில் இருக்கும்போது, அறை

* தென் இங்கிலாந்தில் தேம்ஸ் நதிக்கரையிலுள்ள நகரம்.

யின் கதவு சற்றுத் திறக்கப்பட்டதன் ஓசை என் கருத்தைக் கலைத்தது. யாரென்று பார்த்தேன். வேலைக்காரன் வெளியே நின்றுகொண்டு, "ஐயா, தங்களை யாரோ ஒருவர் அவசரமாகக் காணவந்திருக்கிறார்" என்றான் என்னை நோக்கி.

குடிவெறியில் மூழ்கியிருந்த எனக்கு இந்த எதிர்பாராத குறுக்கீடு திகைப்பை அளிப்பதற்குப்பதிலாகக் களிப்பை நல்கியது. உடனே எழுந்தேன். தள்ளாடிக்கொண்டே சென்று கூடத்தை அடைந்தேன். விளக்கில்லை. சன்னல் வழியாகப் பாய்ந்த விடிகாலையின் மங்கிய வெளிச்சத்தைத்தவிர வேறு வெளிச்சமே இல்லை. அந்த மங்கிய வெளிச்சத்திலும் கூடத்தின் தலைவாயிலில் அடியெடுத்து வைக்கும்போதே என்னைக் காணவந்தவரை ஒருவாறு அடையாளம் தெரிந்துகொண்டேன். இளைஞன். சுமார் என் உயரமிருக்கும். வெள்ளைக் கம்பளச் சட்டை அணிந்திருந்தான். புதுமாதிரியான என் சட்டையைப் போலவே அச்சட்டையும் தைக்கப்பட்டிருந்தது. எனினும் முகத்தோற்றம் தெளிவாகத் தெரியவில்லை. நான் உள்ளே சென்றதும் அவன் ஓடிவந்து என் தோள்களைப் பிடித்துக்கொண்டு, காதோடு காதாகக் கீச்சுக்குரலில் "வில்லியம் வில்சன்!" என்றான். அந்தக் குரலைக்கேட்டுத் திடுக்கிட்டேன். என் குடி வெறியெல்லாம் பஞ்சாகப் பறந்தது. அவன் தோரணையையும் பேசும்போது கைவிரலை ஆட்டிய விதத்தையும் கண்டு வியந்தேன். அவ்வியப்பினால் என் குடிவெறி கலைந்தது. அவனுடைய குரல்—மென்மையான குரல்—தணிவான குரல்—கடந்த காலச் சம்பவங்களை—கிராமப்பள்ளி நிகழ்ச்சிகளை—யெல்லாம் நினைவிற்குக் கொண்டு வந்ததோடு எனக்கு ஏற்கனவே நன்றாகப் பழக்கப்பட்டிருந்த குரலாகவும் பட்டது. ஆகவேதான் அவன் குரல் என் காதில் வீழ்ந்த மாத்திரத்தில் மின்சார அதிர்ச்சி தாக்குவதைப் போன்று உணர்ந்தேன்; திடுக்கிட்டேன்.

அதனால்தான் குடிமயக்கம் தெளிந்தது. அதிர்ச்சி நீங்கி சுயஉணர்வு பெறுவதற்குள் அவன் அங்கிருந்து மறைந்து விட்டான்.

கனவிலே கண்ட உருவம் கனவு கலைந்ததும் மறைந்து போவதுபோலத் திடுமென என்முன் தோன்றி என்னைத் திகைக்க வைத்துக் கணநேரத்தில் மறைந்த இளைஞன் வேறு யாருமல்ல ; பழைய வில்சனேதான். என் பெயர்க் காரனான பழைய பகைவனேதான். இந்த வில்சன் யார்? எங்கிருந்து வந்தான்? எதற்காக வந்தான்? ஏன் என்னைச் சென்றவிடமெல்லாம் பின் தொடர்கின்றான்? என்காரியங் களில் ஏன் விடாப்பிடியாகத் தலையிடுகிறான்? அவனுடைய நோக்கம் என்ன? என்பனபோன்ற கேள்விகள் பல எழுந் தன. அக்கேள்விகளுக்கு விடைகாண முயன்றேன். பல இடங்களில் விசாரித்தேன். சிந்தித்துச் சிந்தித்து மூளை யைக் குழப்பினேன். என்ன முயன்றும் அவைகளுக்கு விடைகாண முடியவில்லை. நான் கிராமப் பள்ளியைவிட்டு வெளியேறின் அன்றே எதிர்பாராத குடும்பத்தொல்லையின் காரணமாக அவனும் அப்பள்ளியை விட்டு விலகி விட் டான் என்ற செய்திமட்டும் தெரிந்தது. வில்சனைப் பற் றிய ஆராய்ச்சியெல்லாம் கொஞ்ச நாட்கள் வரையில்தான். பின்னர் அதை அடியோடு மறந்தே விட்டேன். ஆக்ஸ் போர்டுக்குப் புறப்படவேண்டும் என்ற முயற்சியில் மூழ்கி விட்டேன். வேறெதைப்பற்றியும் சிந்திக்க நேரமில்லை.

என் முயற்சி விரைவில் கைகூடியது. என்பெற்றோர் கள் என்னை ஆக்ஸ்போர்டுக்கு அனுப்பி வைத்தனர். வீண் பகட்டில் விருப்பம் உடைய என் பெற்றோர்கள் எனக்கு ஆடம்பர உடைகள் தைத்துக் கொடுப்பதற்கும் தாராள மாகச் செலவு செய்வதற்குப் போதிய பணம் கொடுப்பதற் கும் தயங்கவில்லை. ஆடம்பரப் பிரியர்கள் தம் மகனும் ஆடம்பரமாக இருந்தால்தான் தங்களுக்குப் பெருமை என்று கருதுவது இயற்கைதானே! ஆகவே செலவு செய்

வதில் இங்கிலாந்துச் செல்வச் சீமான்களின் புதல்வர்களோடு போட்டி போடக்கூடிய அளவிற்கு வசதிகளைச் செய்து கொடுத்தனர் என் பெற்றோர்கள்.

ஏற்கனவே தீயபழக்கவழக்கங்களில் ஊறிப்போயிருந்த எனக்கு எல்லா வசதிகளும் கிடைத்துவிட்டால் சொல்லவும் வேண்டுமோ? ஆடம்பரத்தின் அதிபதியானேன். ஊதாரித்தனத்தின் உறைவிடமானேன். கூத்திலும் குடியிலும் மூழ்கித் திளைத்தேன். கோலாகலக் களியாட்டத்தில் மானம், மட்டு, மரியாதை, அடக்கம், ஒழுக்கம், பண்பு, பணிவு,—எல்லாவற்றையும் உதறித்தள்ளிவிட்டேன். நவீன கெட்ட பழக்கங்களின் நாயகனானேன்.

ஆக்ஸ்போர்டிலும் சூதாட்டத்தில் திளைத்தேன் என்பது சொல்லாமலே விளங்கும். ஈடனில் வெறும்பொழுதுபோக்குக்கலையாக இருந்த சீட்டாட்டம் ஆக்ஸ்போர்டில் அன்றாடத் தொழிலாக மாறிவிட்டது. என்னையொத்த மாணவர்கள் என் தோழர்களானார்கள். சூதாட்டம் எங்களுடைய தொழிலாயிற்று. என் ஆடம்பரத்திற்குப் பெற்றோர்கள் கொடுத்த பணம் போதவில்லை. பிறரை ஏமாற்றிப் பணம் பறிக்க முற்பட்டேன். சூதாட்டத்தில் தந்திரத்தைக் கைக்கொண்டேன். என் தந்திரத்திற்கு முன், திறமையும் வல்லமையும் தலைகாட்டமுடியவில்லை. திறமையுள்ளவர்களும் தோற்றார்கள். வெற்றிமகள் என்னை அணைத்துக்கொண்டாள். வருமானம் பெருகியது. ஒருவனுக்காவது என்பேரில் சந்தேகம் ஏற்படவேண்டுமே! ஏமாந்த பேர்வழிகளுக்கு எங்கே என் வெற்றியின் இரகசியம் புரியப்போகின்றது? அதைப் புரிந்திருந்தால் அவர்கள் எப்படி ஏமாந்த பேர்வழிகளாக ஆகியிருக்கமுடியும்!

நாள் தவறினும் தவறலாம்: சூதாட்டம் தவறவில்லை; நான் வெற்றி பெறுவதும் தவறவில்லை. இரண்டு ஆண்டுகள் இரண்டு நாட்களாகக் கழிந்தன. புதிய மாணவன்

ஒருவன் பல்கலைக்கழகத்தில் சேர்ந்தான். கிளெண் டென்னிங்—அதுதான் அவன் பெயர்—இளைஞன்; எளிதில் செல்வரான பிரபு ஒருவரின் புதல்வன்; குபேர சம்பத்திலே தவழ்ந்து வளர்ந்தவன். திருமகளின் மடியிலே திளைத்து விளையாடினவன். ஆனால் அவனும் என்னைப்போல் சலன புத்தியுடையவன். என் கைத்திறமையைக் காட்டுவதற்குச் சரியான ஆள் கிடைத்துவிட்டான். அவனோடு நெருங்கிப் பழகினேன். அவனை என் வழிக்குத் திருப்பினேன். சூதாட்டத்தில் ஈடுபடுத்தினேன். ஆட்டத்திலே பற்றுதல் ஏற்பட்டது அவனுக்கு. எடுத்த எடுப்பிலேயே என் கைவரிசையைக் காட்டவில்லை. ஆட்டத்தில் விட்டுக் கொடுத்தேன். அவன் பெரும் தொகைகளை வெல்லும்படி விட்டுவிட்டேன்.

மீன் பிடிப்பவன் தூண்டிலில் சிற்றிரையை வைத்து மீனுக்கு ஆசைகாட்டுகிறான். அந்த ஆசையிலே அது மயங்கி, தூண்டிலிலே மாட்டி மடியப்போவதை அறியாமல் சிற்றிரையைப் பிடிக்க முற்பட்டுத் தூண்டிலில் மாட்டிக் கொள்கிறது.

அத்தகைய ஆசையைத்தான் நானும் அவனுக்குக் காட்டினேன். கடைசியில் என் நோக்கம் நிறைவேறும் காலம் நெருங்கிவிட்டது. எங்களிருவருக்கும் பொதுவான நண்பன்—பிரெஸ்டென் என்பவனின் அறையில் ஆட்டத்தைத் தொடங்க ஏற்பாடாயிற்று. இந்த ஆட்டத்தில் அவனை அடியோடு மட்டம்தட்டி ஓட்டாண்டி ஆக்கிவிடுவதென்று முடிவுசெய்தேன். யாரும் என் திட்டத்தைத் தெரிந்துகொள்ள முடியாதபடிக்கு முன் எச்சரிக்கையாக இருந்தேன். ஏழெட்டு நண்பர்கள் எங்கள் கூட்டத்தில் கலந்துகொள்ள ஏற்பாடுசெய்தேன். சீட்டாட்டம் என் தூண்டுதலால் அல்லாமல் தற்செயலாக கிளெண் டென்னிங்கின் சொற்படி தொடங்கும்படியாக நடந்துகொண்டேன். அத்தகைய சந்தர்ப்பங்களில் வழக்கமாக எவ்வாறு நடந்து கொள்ளுவார்களோ அவ்வாறு நடந்துகொள்ளச்

சிறிதேனும் தவறவில்லை. என் தந்திரவலையை விரித்தாய் விட்டது.

இரவில் வெகுநேரம் வரையில் சீட்டாட்டம்நீடித்தது. நண்பர்கள் எல்லோரும் சளைத்து விட்டனர். கடைசியில் நானும் கிளேண் டென்னிங்—இருவர் மட்டுமே சளையாமல் ஆட்டத்தில் தொடர்ந்து ஈடுபட்டோம். என் எண்ணத்தைச் செயல்படுத்த ஏற்ற சூழ்நிலைஅமைந்துவிட்டது. மற்ற நண்பர்கள் வேடிக்கை பார்க்க நானும் கிளேண் டென்னிங்கும் எனக்கு மிகவும் பிடித்த ஏகார்ட்டே * ('Ecarte') என்ற ஆட்டத்தை ஆடத் தொடங்கினோம்.

அந்த ஆட்டத்தில் எனக்கு நல்ல பயிற்சியும் தேர்ச்சியும்உண்டு; அத்துடன் எதிராளியை எப்படியெல்லாம் ஏமாற்றமுடியும் என்பதையும் நன்கு அறிந்திருந்தேன். எனது சூழ்ச்சியின் முதற்படியாக, கிளேண் டென்னிங் நன்றாக மூக்குவரையில் சாராயம் குடிக்கும்படி ஏற்பாடு செய்தேன். குடிவெறியில் மிகுந்த உற்சாகத்தோடு சீட்டாடினான். குடிமயக்கத்திலே ஆட்டத்தின் உற்சாகத்திலே என் தந்திரங்களை அறிந்துகொள்ள முடியாமல் ஒவ்வொரு ஆட்டத்திலும் தோற்றான். சிறிது நேரத்திற்குள் அவன் எனக்குப் பெரும் கடனாளியாய்விட்டான். தோல்வி ஏற்பட ஏற்பட—கைமுதலையிழந்து கடனாளி ஆக ஆக—அவனுக்கு ஆட்டத்திலே பற்றுதல் மிகுந்தது. மீண்டும் ஒரு புட்டி சாராயத்தைக் காலி செய்துவிட்டு முன்னிலும் இரு மடங்கு அதிகமான தொகையைப் பணயம் வைத்து ஆடலாம் என்றான். முதலில் அதற்கு நான் விரும்பாதவன்போல் நடித்தேன். என் மறுப்பு அவனுக்கு ஆத்திரத்தை உண்டாக்கியது. கடைசியில் அவன் விருப்பத்திற்கு இணங்கினவனேபோல் அவ்வாட்டத்தில் ஈடுபட்டேன். ஆட்டம் எப்படி முடிந்தது என்று

---

* இருவர் ஆடக்கூடிய ஒருவகைச் சீட்டாட்டம்.

சொல்லவும் வேண்டுமோ! மீன் தூண்டிலில் நன்ருக மாட்டிக்கொண்டது. ஒரு மணி நேரத்திற்குள் அவன் கடன் நான்கு மடங்காகப் பெருகியது. மதுவின் போதையில் கோவைப்பழம்போன்று சிவந்திருந்த அவன் முகம் சிறிதுநேரமாகவே வெளிறிக்கொண்டு வந்தது. இப்போது முற்றிலும் வெளிறிப்போய் பயங்கரமாகத் தோற்றமளித்தது. அது எனக்கு வியப்பாக இருந்தது. நான் விசாரித்துத் தெரிந்திருந்த வரையில் அவன் அளவிட முடியாத பெரிய பணக்காரன். அப்படியிருக்க பெருந் தொகையை இழந்துவிட்ட காரணத்திற்காக அவன் முகம் வெளிறிப்போய் இருக்கமுடியாது. ஆட்டத்தில் அவன் இழந்தது உண்மையில் பெரும் தொகையெனினும் அதை அவன் பெரும் சொத்தோடு ஒத்திட்டுப் பார்த்தால் சிறு துளிதான். ஆகவே வெளிறியதிற்குக் காரணம் பணநட்டமன்று; அதிக நேரம் தூங்காமல் ஆடினதினுல் ஏற்பட்ட களைப்பாகத்தான் இருந்திருக்க முடியும். இந்நிலையிலும் தொடர்ந்து ஆடவேண்டும் என்பது என் உள்நோக்கமாயினும் மற்றவர்கள் என்னை மிகவும் கேவலமாகக் கருதிவிடக்கூடாது என்பதற்காக ஆட்டத்தை நிறுத்திவிடலாம் என்று வற்புறுத்த வாயெடுத்தேன். வாயெடுத்த சமயத்தில் நண்பர்கள் என்னை வெறித்துப் பார்த்த பார்வையும் கிளெண் டென்னிங்கின் பேரிரைச்சலும் என்னை கலக்கிவிட்டன. என் மோசடியை நான் உணர்ந்தேன். அநியாயமாக ஒருவனை அடியோடு மட்டம் தட்டிவிட்டேனே என்பதை அறிந்தேன். எல்லோரும் கிளெண் டேன்னிங்கைப் பரிதாபத்தோடு பார்த்தனர். அவன் நிலையைக் கண்டு இரங்கினர்; பெரிதும் வருந்தினர். ஆனால் என் பக்கம் அவர்கள் பார்வை திரும்பியதும் அவர்கள் கண்களில் கோபக்கனல் வீசியது. என்னை அப்படியே எரித்துச் சாம்பலாக்கிவிடுபவர்கள்போல் முறைத்துப் பார்த்தனர். அவர்கள் பார்வையை என்னால் தாங்கமுடிய

வில்லை. இங்கிலையில் படாரென்று அறையின் கதவுகள் திறந்தன. அந்த வேகத்திலே அறையில் எரிந்துகொண்டிருந்த அத்தனை மெழுகுவர்த்திகளும் அணைந்துவிட்டன. மெழுகுவர்த்திகள் அணையும்போதிருந்த வெளிச்சத்தில் என் உயரமுடைய வாலிபன் ஒருவன் உள்ளே நுழைவது தெரிந்தது. நல்லவேளை ! கும்மிருட்டாக இல்லை. உள்ளே நுழைந்தவன் எங்களுக்கு மத்தியில் வந்து நின்றுகொண்டிருந்ததை உணரமுடிந்தது. இத்திடீர் சம்பவத்தால் ஏற்பட்ட அதிர்ச்சி நீங்கி சுய உணர்வு வருவதற்குள், அவன் பேச்சுக்குரல் காதில் விழுந்தது.

அவன் குரல் என்னால் என்றுமே மறக்கமுடியாத பழைய குரலாக இருந்தது. அக்குரல் என் காதில் வீழ்ந்த மாத்திரத்தில் உடல் நடுங்கியது. மூச்சுத்தடுமாறியது. அவன், " தோழர்களே ! நான் திடீரென்று இந்த அகால நேரத்தில் உங்கள் அறைக்குள் நுழைந்து எல்லோரையும் திகைக்கச் செய்துவிட்டேன். ஆனால் அதற்காக நான் மன்னிப்புக் கோரவேண்டிய அவசியமில்லை. ஏனெனில் என் கடமையை நிறைவேற்றவே இங்கு வந்துள்ளேன். இன்றைய சீட்டாட்டத்தில் கிளெண் டென்னிங்கைத் தோல்வியுறச்செய்து பெரும் தொகையை வென்றவன் எப்பேர்பட்ட ஆள் ? அவனுடைய உண்மையான இயல்பு என்ன ? என்பதையெல்லாம் நீங்கள் அறிந்திருக்க மாட்டீர்கள். ஆனால் அவைகளையெல்லாம் இன்று நீங்கள் அறிந்துகொள்ளவேண்டிய அவசியம் ஏற்பட்டுள்ளது. ஆகவே அவனைப்பற்றிய உண்மைகளை உங்களுக்கு அறிவிக்கவே நான் இங்கு வந்துள்ளேன். அவனுடைய சட்டையின் இடதுகை முனைப்பகுதியின் உட்பாகத்தைப் பரிசோதித்துப் பாருங்கள். அவனுடைய மேலங்கிப் பைகளுக்குள் காணப்படும் சிறு பொட்டலங்களையும் பரிசோதித்துப் பாருங்கள் " என்று தன் பேச்சை முடித்தான்.

அவன் பேசும்போது அறையில் நிசப்தம் நிலவியது.

பேசி முடித்தவுடனே அவன் வெளியேறி விட்டான். அந்தச் சமயத்தில் என் உள்ளத்தில் ஏற்பட்ட கலவரத்தை என்னால் விவரித்துக் கூறமுடியுமோ? நரக வேதனையிலும் கொடிய வேதனைக்காளானேன். சிந்திப்பதற்கு வேறு நேரமிருந்ததா? அந்த இடத்திலேயே என்னைக் கையும் களவுமாக எல்லோரும் பிடித்துக் கொண்டார்கள். உடனே மெழுகுவர்த்திகள் பற்ற வைக்கப் பட்டன. என்னைச் சோதித்தனர். என் சட்டையின் வலதுகை முனைப்பகுதியிலிருந்து 'ஏகார்ட்டே' ஆட்டத்தின் வெற்றிக்கு அவசியமான ராஜா, ராணிச் சீட்டுக்களை வெளியே எடுத்தனர். மேலங்கியின் பைகளிலிருந்து ஆட்டத்தில் பயன்படுத்திய சீட்டுக்கட்டுக்களின் பிரதிக்கட்டுக்களை எடுத்தனர். நான் பயன்படுத்திய சீட்டுக்களில் தனி அடையாளம் இருந்தது. மேல் மதிப்புச் சீட்டுக்களின் ஓரங்கள் சற்று வட்டமாக இருந்தன; கீழ்மதிப்புச் சீட்டுக்களின் பக்கங்கள் சற்றுக் குவிந்திருந்தன. ஆகவே எதிராளி வழக்கம்போல் நீளவாக்கில் வெட்டும்போது எனக்கு மேல் மதிப்புச் சீட்டுக்கள் வந்து சேரும்; நான் அகலவாக்கில் வெட்டும்போது எதிராளிக்கு மேல் மதிப்புச் சீட்டுக்கள் கிடைக்காது.

அவர்கள் இத்தந்திரத்தை அறிந்தபோது ஏற்பட்ட கோபத்தில் என்னை என்ன வேண்டுமானாலும் செய்திருக்கலாம். அப்படி ஏதாவது செய்திருந்தால்கூட நன்றாயிருந்திருக்கும். ஒன்றும் செய்யாமல் வாளா இருந்ததை என்னால் தாங்கமுடியவில்லை. குற்றம் செய்வதனால் தண்டனையைத் தாங்கமுடியுமே தவிர மன்னிப்பைத் தாங்க முடியாது. தண்டனை கிடைக்கும்போது குற்றவாளிக்கு ஆத்திரம் பொங்குமே தவிர அமைதியாகத் தன் தவறை உணரும் வாய்ப்பு ஏற்படாது. ஆனால் அவனைத் தண்டிக்காமல் மன்னிக்கும்போதுதான் அவன் தன் தவறை உணர்கின்றான்; அவமானம் தாங்காமல் அவதிப்படுகிறான். அத்தகைய நிலையில்தான் நான் அப்போதிருந்தேன்.

நான் ஆட்டத்திற்குச் செல்லும்போது உயர்ந்தரகக் கம்பள ஓவர்கோட்டை அணிந்திருந்தேன். அறையை அடைந்ததும் அதைக் கழற்றி வைத்திருந்தேன். அதை இப்போது பிரெஸ்டன் எடுத்து என் கையில் கொடுத்து, " வில்லியம், இந்தா உன் சொத்து. உன் தந்திரம் அம்பலமாய் விட்டது. நீ ஆக்ஸ்போர்டைவிட்டு வெளியேறுவதைத் தவிர வேறு வழியில்லை என்பதை நீ அறிவாய் என்று எண்ணுகின்றேன் " என்றான்.

மானம் இழந்து மரியாதைகெட்டு பெருமைகுன்றிய நிலையிலே நான் இருந்ததற்கு அவன் என்னைக் குத்திக் காட்ட கிண்டலாகப் பேசியதற்கு அவனை அப்படியே பிடித்து நொறுக்கியிருப்பேன் வேறு ஒரு புதிய விஷயம் என் கவனத்தைக் கவராமல் இருந்திருப்பின். எனது ஓவர் கோட்டு மிக மென்மையான உயர்ந்த உரோமத்தால் நெய்யப்பட்டது. அதிக விலை கொடுத்து வாங்கியது. எனக்கென்றே பிரத்தியேகமான புதிய பாணியில் தைக்கப்பட்டது. என் ஆடம்பரத்திற்கும் பகட்டிற்கும் பணச் செறுக்குக்கும் பொருந்திய முறையில் தயாரிக்கப்பட்ட ஒரு தனிவகை கோட்டு அது. ஆகவே 'இந்தா உன் சொத்து' என்று பிரெஸ்டன் கோட்டைக் கொடுத்த போது என் கோட்டு ஏற்கனவே என் கையில் தொங்கிக் கொண்டிருப்பதைக் கண்டு திகைத்துவிட்டேன். பிரெஸ்டன் கொடுத்த கோட்டு முழுக்க முழுக்க என் கோட்டு மாதிரியே இருந்தது. அதே நெசவு! அதே தையல்! அதே பாணி! என் நண்பர்களில் வேறு எவரும் அந்த மாதிரியான கோட்டு வைத்திருக்கவில்லை. ஆகவே அக் கோட்டானது என்னைக் காட்டிக் கொடுத்துவிட்டு மாய மாய் மறைந்த அந்த விசித்திரப்பேர்வழி அணிந்து வந்திருந்ததாகத்தான் இருக்கவேண்டும். மறந்துபோய்விட்டு விட்டுச் சென்றானா? அல்லது வேண்டுமென்றே விட்டுச் சென்றானா? என்பது தெளிவாகப் புலப்படவில்லை.

அந்தச் சூழ்நிலையிலும் என் சமயோசித புத்தி மங்கிவிட வில்லை. என் திகைப்பைக் காட்டிக்கொள்ளாமல் பிரெஸ்டன் கொடுத்த கோட்டை வாங்கி என் கோட்டின் மேல் வைத்துக்கொண்டு உடனே வெளியேறிவிட்டேன். அடுத்தநாளே ஆக்ஸ்போர்டைவிட்டு வெளிதேசங்களுக்கு விரைந்து சென்றேன்.

எங்கு ஓடியும் பயனில்லை. தீவினை என்னை அங்கும் தொடர்ந்து வந்தது. பாரிஸ் மாநகரில் கால் வைத்தேனே இல்லையோ வில்சனின் கண்காணிப்பும் கூடவே வந்து விட்டது. என் விவகாரங்களில் மீண்டும் தலையிடத் தொடங்கி விட்டான். காலச்சக்கரம் வேகமாகச் சுழன்றது. ஆண்டுகள் பல கழிந்தன. ஆனால் என் துன்பம் குறையவே யில்லை. வில்சனிண் கண்காணிப்பும் நீங்கவேயில்லை. ரோமாபுரியில் என் ஆசைக்குக் குறுக்கே அணைபோட்டுத் தடுத்தான். வியன்னாவிலும் மாஸ்கோவிலும் அப்படியே. ஊழ்வினையின் மர்மத்தாக்குதலிலிருந்து விடுபெற ஓடினேன்! உலகத்தின் ஓரத்திற்கே ஓடினேன்! எங்கேயும் பயனில்லை. என்னைப் பிடித்த சனி நீங்கவேயில்லை.

அவன் யார்? அவன் எங்கிருந்து வருகிறான்? அவனுடைய நோக்கம் என்ன? என் சந்தர்ப்பங்களையும் இரகசியங்களையும் அவனால் எப்படி அறியமுடிந்தது? அவன் ஏன் என்னை என் நிழல்போல் பின்தொடர்கிறான்? என்ற கேள்விகள் மீண்டும் எழுந்து என் மனத்தை வருத்தின. ஆயினும் அக்கேள்விகளுக்கு விடைகாண முடியவில்லை. அவன் என்னை எப்படி கண்காணித்தான் என்பதையாவது அறிந்துகொள்ள வேண்டும் என்று முயன்றேன். அதுவும் பயனளிக்கவில்லை. ஆனால் ஓர் உண்மை மட்டும் புலனாயிற்று. அவன் தலையிட்டு என்னைத் தடுத்தாண்ட சமயங்களெல்லாம் சரியான சமயங்கள்தான். அச்சமயங்களில் அவன் குறுக்கிட்டு என்னைக் கண்காணிக்காமல் இருந்திருந்தால் நான் சொல்லொணாத் துன்பங்களுக்கும்

விவரிக்கமுடியாத விபரீதங்களுக்கும் ஆளாக நேர்ந்திருக்கும். எனினும் அவன் என்னைக் கண்காணித்து வந்தது நியாயமான செயலாகப் படவில்லை. என் சுதந்திரம் பறிபோனதற்கு அது சரியான ஈடாகப் படவில்லை.

மற்றொன்றையும் அறியமுடிந்தது. அவன் எல்லாச் சமயங்களிலும் என்னைப் போலவே ஆடை அணிந்து வந்து கொண்டிருந்தான். எத்தனையோ தடவைகள் அவன் எனக்கு எதிர்பட்டும் அவன் முகத்தைமட்டும் என்னால் கண்டு கொள்ளவே முடியவில்லை. விந்தையிலும் விந்தையே! என்னே அவனுடைய ஆற்றல். அவன் யார்? ஈடனில் என்னை எச்சரிக்கை செய்தவனும், ஆக்ஸ்போர்டிலே என்னை அவமானத்திற்கு ஆளாக்கியவனும், ரோமாபுரியிலே என் ஆசைகளை நிராசையாக்கியவனும், பாரிஸ் மாநகரிலே என்னைப் பழிவாங்கியவனும், நேப்பிள்ஸில் என் காதலைக் குலைத்தவனும், எகிப்திலே நான் கட்டிய மனக் கோட்டையை மண்ணோடுமண்ணாக மட்டம் தட்டியவனும் யார்? கிராமப் பள்ளியிலே என்னோடு படித்தவனும் போட்டிபோட்டவனும் என்போல் நடித்தவனுமான வில்சன்தானா? விளங்காத விந்தை! புரியாத புதிர்! பயங்கர மர்மம்! நாடகத்தின் கடைசிக் காட்சியையும் காட்டி விடுகிறேன்.

அவனுடைய அடக்கமுடியாத ஆதிக்கத்திற்கு நான் அடிமையாகிவிட்டேன். வில்சனின் திருவிளையாடல்களையும் உயர்ந்த பண்பையும் ஆழ்ந்த ஞானத்தையும் தீர்க்க தரிசனத்தையும் எல்லாம்வல்ல ஆற்றலையும் கண்டு அசைந்து போனேன். அச்சமும் தாழ்ந்த மனப்பான்மையும் என்னை ஆட்கொண்டு விட்டன. அவனுடைய ஆதிக்கத்திற்கு அடிபணியத் தயங்கினேன். என்றாலும் அடிபணிவதைத் தவிர வேறுவழியில்லை என்றாயிற்று. ஆனால் என் மனக்கவலைக்கு மருந்தாக மதுவை நாடினேன். ஓயாது குடித்துக்கொண்டே இருந்தேன். நீங்காத குடிவெறியின் காரணமாக உள்ளத்

தில் ஊக்கம் பிறந்தது. தாழ்ந்த மனப்பான்மை போய்விட்டது. எதிர்ப்பு மனப்பான்மை வளர்ந்தது. மனப்பலம் பெருகியது. மனப்பலம் பெருகப் பெருக மாற்றானின் பலம் குறைந்து கொண்டே வருவதாக உணர்ந்தேன். ஆகவே மேலும் மேலும் தைரியம் ஓங்கியது. எதையும் துணிந்து எதிர்க்கும் சக்தி வளர்ந்துவிட்டது.

ரோமாபுரியில் 18-ஆம் ஆண்டுக் கார்னிவலின்போது (இன்பவிழா) நேப்பிள்ஸ் கோமகனாரின் அரண்மனையில் ஆண்களும் பெண்களும் மாறுவேடம் புனைந்து ஆடும் நடன விழாவிற்கு (பால் டான்ஸ்) நானும் சென்றிருந்தேன். விருந்தின்போது வழக்கத்திற்கு அதிகமாக குடித்தேன். கூடியிருந்த கும்பலைக்கண்டு கோபந்தான் வந்தது. கூட்டத்திற்குள் நுழைந்து வேறுபக்கம் போவது கடினமான வேலையென்பதை நினைத்தபோது மேலும் கோபம் பொங்கியது. ஏனெனில் கிழட்டுக் கோமகனாரின் அழகிய யௌவன மனைவியின் வருகைக்காக ஆவலோடு காத்திருந்தேன். அவள், தான் என்ன வேடம் புனைந்து வருவாள் என்பதை எனக்கு ஏற்கனவே இரகசியமாகச் சொல்லியனுப்பியிருந்தாள். நான் எதிர்பார்த்தது வீண்போகவில்லை. அவள் இருக்கும் இடத்தைக் கண்டுகொண்டேன். அவள் இருக்கும் இடத்திற்குச் செல்லக் கூட்டத்திற்குள் நுழைந்து அவசர அவசரமாக நடந்தேன். அச்சமயத்தில் யாரோ என் தோள்மேல் கைவைப்பதை உணர்ந்தேன். அந்த அருவருப்பான—என்றும் மறக்க முடியாத—குசுகுசுக்குரல் என் காதில் ஓதியது.

வெண்ணெய் திரண்டு வரும்போது தாழி உடைவதா? என் காதல் நிறைவேறும் அந்தக்கணத்திலா முட்டுக்கட்டை? ஆத்திரம் பொங்கியது; ஆவேசம் பிறந்தது; கோபக் கனல் மூண்டது. உடனே திரும்பினேன். என் தோள்மேல் கை போட்டவனின் கழுத்துப்பட்டையைக் கெட்டியாகப் பிடித்தேன். நான் எதிர்பார்த்தபடியே அவன்

என் மாதிரியே உடை அணிந்திருந்தான். ஆனால் முகத்தை மட்டும் முகமூடியால் மூடியிருந்தான்.

என் கோபம் எல்லையைக் கடந்துவிட்டது. கண்களில் நெருப்புப்பொறி பறந்தது. ஆவேசத்தோடு, 'அயோக்கியனே! வஞ்சகனே!' என்று வசைமாரி பொழிந்தேன். "இனியும் நீ என்னைப் பின்தொடரமுடியாது. நீ என்னைக் கண்காணிக்க விடமாட்டேன். வா என்னுடன். இல்லையேல் இந்த இடத்திலேயே உன்னைக் கொன்று விடுவேன்!" என்று அதட்டினேன். அவனை இழுத்துக்கொண்டு நடன அரங்கத்தை விட்டகன்று அடுத்திருந்த சிறிய அறைக்குச் சென்றேன். அறையில் நுழைந்ததும் அவனை உந்தித் தள்ளினேன். எதிர்பக்கச் சுவற்றில்போய் மோதினான். அதற்குள் கதவை மூடிவிட்டு அவனைச் சண்டைக்கு இழுத்தேன். சற்றுத் தயங்கினான். ஆனால் உடனே தன்னைப் பாதுகாத்துக்கொள்ள ஆயத்தமானான்.

சண்டை சிறிது நேரந்தான் நடந்தது. சிறிது நேரம் என்றாலும் மிகக்கொடிய சண்டை. உணர்ச்சி பொங்க கோபாவேசத்தோடு சண்டையிட்டேன். எங்கிருந்துதான் அந்தப் பலம் வந்ததோ? பத்துப்பேர்களின் பலத்தோடு அவனைத் தாக்கினேன். சில கணநேரத்திற்குள் அவனை மடக்கிச் சுவரோடு சுவராகச் சேர்த்து நெருக்கி அவன் மார்பிலே கத்தியைப் பாய்ச்சினேன்! பாய்ச்சினேன்! பல தடவை பாய்ச்சினேன்! அவ்வளவு வெறியிருந்தது.

இச்சமயத்தில் யாரோ கதவைத்திறக்க முயன்றனர். ஓடிப்போய் கதவை நன்றாக மூடித் தாழிட்டுவிட்டு, மடிந்துகொண்டிருந்த என் மாற்றானிடம் திரும்பிவந்தேன். என்ன ஆச்சரியம்! நான் கண்ட காட்சி என்னைக் கலக்கிவிட்டது. நான் கதவண்டை சென்று திரும்பிய கணநேரத்தில் அறையின் அமைப்பிலே எவ்வளவு மாறுதல்! அறைக்குள் நாங்கள் நுழைந்தபோது கதவுக்கு எதிர்பக்கத்தில் எந்தப் பொருளுமே இல்லை. ஆனால் இப்போது அந்த இடத்தில்

ஒரு பெரிய நிலக்கண்ணுடி இருக்கக்கண்டேன். பயத்தால் நடுங்கிக்கொண்டே அதை நெருங்கினேன். என்னுடைய பிரதிபிம்பம் இரத்தக் கறையோடு நடுங்கிக்கொண்டே என்னை நோக்கி வரக்கண்டேன்.

நான் கண்டதெல்லாம் வெறும் பிரமைதான், உண்மையல்ல. கொலைசெய்த பயத்தினுல் என் மூளை கலங்கியிருந்தது. மடிந்து கொண்டிருந்த என் மாற்ருன்—சாட்சாத் வில்சனின் உருவமே, என் கலங்கிய மூளைக்கு என்னுடைய பிரதிபிம்பமாகத் தோற்றமளித்தது. அவனுடைய முகமூடியும் ஓவர்கோட்டும் வீசி யெறியப்பட்டிருந்த இடத்திலே கிடந்தன. அவனுடைய முகத்தை நன்ருகப் பார்த்தேன். அவன் முகத்தோற்றத்தில் எள்ளளவேனும் என் முக ஜாடையில்லை. விளக்கு அணையுமுன் சுடர்விட்டெரிவது போல் அவன் வழக்கத்திற்கு மாருன உரத்த குரலில் பேசினுன்: "நீ வெற்றிபெற்று விட்டாய். நான் தோற்றேன். நான்மட்டும் மடிந்துவிட்டேன் என்று எண்ணுகின்ருயா? இல்லை. நீயும் இன்று முதல் உலகத்தைப் பொருத்தமட்டில் இறந்தவன்தான். சுவர்க்கப் பேற்றை இழந்தாய்; உன் எதிர்காலம் இருண்டது. என்னுல்தான் நீ வாழ முடிந்தது. என் மரணமே உன் மரணமும். என்னே! உன் பேதமை! என்னைக் கொலைசெய்ததில் உன்னை நீயே கொலைசெய்து கொண்டாய்!"

# கரடுமுருடு மலைகள்

1827-ஆம் ஆண்டு முடிவில் அமெரிக்காவில் வர்ஜினியா இராச்சியத்தில் சார்லட்டெஸ்வில் என்ற நகரை அடுத்துள்ள கோட்டைக்குச் செல்லும் வாய்ப்பு எனக்கு ஏற்பட்டது. அங்குக் கொஞ்ச காலம் தங்கியிருந்தேன். அப்போது தற்செயலாக ஆகஸ்டஸ் பெட்லோ என்பவர் அறிமுகமானார். ஒருவரோடு ஒருவர் நெருங்கிப் பழகினோம். அவர்பால் ஆர்வமும் ஆவலும் உடையவனானேன். ஆயினும் அவரைப்பற்றிய விவரங்களைச் சரியாக அறிந்துகொள்ள முடியவில்லை. அவருடைய குடும்பத்தைப் பற்றியும் தெரிந்துகொள்ள முடியவில்லை. அவர் எங்கிருந்து வந்தவர் என்பதையும் அறியவில்லை.

ஆகஸ்டஸ் பெட்லோ இளைஞர். ஒவ்வொரு வகையிலும் என் கருத்தை கவரக்கூடிய ஒரு விநோதமான மனிதர் அவர். பொதுவாக இளைஞராகத் தோற்றமளித்தாலும் சில சமயங்களில் நூறாண்டுக் கிழவர்போல் காணப்பட்டார். எல்லாவற்றையும்விட அவருடைய உடலமைப்பு விந்தையிலும் விந்தையாக இருந்தது. நெடுநெடுவென்று உயரமாக ஓங்கி வளர்ந்திருந்தார். உடல் ஒட்டி யொடுங்கி ஒல்லியாக இருந்தது. கூனிய நடை, கால்கள் குச்சிகளைப் போன்று நீண்டு மெலிந்திருந்தன. நெற்றி அகன்றிருந்தது வாய் பெரியது. பற்கள் ஒரே வரிசையாக இல்லை; முன்னும் பின்னும் பிதுங்கி இருந்தன. கண்கள் பருத்துப் பூனைக்கண்களைப்போல் வட்டமாக இருந்தன. சந்தோஷமாக இருந்த சமயங்களில் கண்கள் பிரகாசித்தன. ஆனால் சாதாரண சமயங்களில் சுருங்கிச் சோர்ந்து கிடந்தன; செத்தவர்களின் கண்களைப்போல் உள்ளேபோய் இருந்தன. முகத்தில் களை கிடையாது; எப்போதும் வாட்டமாகவே இருந்தது; சோகத்தின் சாயல் படிந்திருந்தது.

ஆகஸ்டஸ் பெட்லோ தம் விகார ரூபத்தைக் கண்டு வருந்தினர்; சதா அதைப்பற்றியே நினைத்துக் கொண்டிருந்தார். இந்தக் கவலை அவரை விடவேயில்லை. திருப்பித் திருப்பி அதைப்பற்றியே பேசினர். தம் வருத்தத்தைப் பிறரிடம் சொல்லி ஆறுதலடைந்தார் போலும்! அவர் முறையீட்டை முதன்முதலாகக் கேட்டபோது 'பாவம்' என்று பரிதாபப்பட்டேன். பின்னர் அதைக் கேட்டுக் கேட்டுப் பழகிப்போய்விட்டது. அவர் தம் அவலட்சணத்தைப்பற்றி அடிக்கடி சொன்னதன் நோக்கமெல்லாம் அது பிறவியிலேயே ஏற்படவில்லை யென்பதை வலியுறுத்தற் பொருட்டேயாகும். முதலில் அவர் நல்ல அழகாகத்தான் இருந்தாராம். ஆனல் நரம்புவலி நோய் கண்டு நீண்ட நாட்களாக நீங்காமல் உடலை வருத்தி வாட்டியதினுல் உடலழகு கெட்டுப்போய் விட்டதாம்.

ஆகஸ்டஸ் தம்நோயை எப்படியாவது குணப்படுத்த வேண்டுமென்று எல்லையற்றப் பிரயத்தனம் செய்தார். ஒருவர் மாறி ஒருவராகப் பல டாக்டர்கள் முயற்சி செய்து பார்த்தனர். பயனில்லை. கடைசியாக டெம்பிள்டன் என்ற டாக்டர் சிகிச்சை செய்யத் தொடங்கினர். அவருடைய மருத்துவம் ஓரளவிற்கு நன்மை பயத்தது. நோய் அடியோடு குணமாகவில்லை யென்றுலும் வலியின் வேதனை தணிந்தது. டெம்பிள்டனின் சிகிச்சை பயனளிப்பதைக் கண்ட ஆகஸ்டஸ் அவரிடமே விடாது தொடர்ந்து சிகிச்சை பெற்று வரலானர். ஆகஸ்டஸ் பெருஞ் செல்வர். அதோடு தாராள மனப்பான்மையுடையவர். கஞ்சப் பிரபுக்களின் புல்லிய கூட்டத்தைச் சாராதவர்; செல்வத்தின் பயன் துய்த்தலே என்பதை நன்கு தெரிந்தவர். ஆகவே பணச் செலவைச் சற்றும் பொருட்படுத்தாமல் டாக்டர் டெம்பிள்டனை தமக்கே சொந்தமான முழுநேர டாக்டராக நியமித்துக் கொண்டார்.

* * *

டாக்டர் டெம்பிள்டன் தம் இளமைக் காலத்தில் பிரயாணப் பிரியராய் இருந்தார். ஒரு சமயம் அவர் பாரிஸ் மாநகருக்குச் சென்றிருந்தார். அங்கு அவரை 'மெஸ்மர்' என்பவரின் மனவசியத் தத்துவங்கள் கவர்ந்தன. அவை களைத் தாமும் நன்கு கற்றுக்கொண்டார். கற்றுக்கொண்ட மெஸ்மரிஸ பிரயோகத்தை முறையாக ஆக்கத்துறையில் கையாளத் தொடங்கினர். மெஸ்மரிஸத்தால் நோயாளி களின் தாங்கமுடியாத வலிகளையும் குறைப்பதில் வெற்றி பெற்ருர். அவ்வெற்றி அவர் நம்பிக்கையை வலுப்படுத்தி யது. மனவசியத்தின் பேராற்றலில் அசையாத நம்பிக்கை வைத்தார். எனினும் டாக்டர் எடுத்த எடுப்பிலேயே பெட் லோவை வசியப்படுத்துவதில் வெற்றி பெற்றுவிடவில்லை. பலவித சோதனைகளைத் திருப்பித்திருப்பிச் செய்து விடாத பயிற்சியின் பேரில்தான் வெற்றி பெற்ருர். பெட்லோவை யும் வசப்படுத்துவதில் முதல் தடவை முழுக்கத்தோல்வி அடைந்தார். ஐந்தாறுதடவை செய்த முயற்சியின்மேல் ஏதோ அரை குறையான வெற்றி கிடைத்தது. பனிரெண் டாந் தடவை முயற்சியில்தான் முழுவெற்றி கிடைத்தது.

ஆகஸ்டஸும் டாக்டரும் எனக்கு அறிமுகமான போது டாக்டர் தம் நோயாளியைப் பார்த்த மாத்திரத்தில் தூங்கச் செய்துவிடும் அளவிற்குப் பயிற்சி பெற்றிருந்தார்.

ஆகஸ்டஸ் பெட்லோ எளிதில் உணர்ச்சி வசமாய் விடுவார். ஆர்வம் மிக்கவர். மனக்கிளர்ச்சி மிக்கவர். அபின் சாப்பிடும் பழக்கமுடையவர். அபின் இல்லாமல் அவரால் உயிர் வாழமுடியாது. இயற்கையாக அமைந்திருந்த அவர் தம் கற்பனுசக்தி அபின் சாப்பிடும் பழக்கத்தால் மேலும் பன்மடங்காகப் பெருகியது. ஒவ்வொரு நாளும் காலையில் காப்பி சாப்பிட்டவுடன் அபின் சாப்பிடுவார். பிறகு தனி யாகவோ அல்லது தம் நாயுடனே ஊரையடுத்துள்ள மலை களுக்குச் சென்று நீண்ட நேரம் உல்லாசமாகப் பொழு தைப் போக்கிவிட்டுத் திரும்புவார். சார்லட்டெஸ்வில்

நகரின் மேற்கேயும் தெற்கேயும் பல குன்றுத் தொடர்கள் உள்ளன. பயங்கரத் தோற்றமளிக்கும் இத் தொடர் குன்றங்கள் கரடுமுருடு மலைகள் என்ற கௌரவப் பெயரில் வழங்கப்பட்டு வந்தன.

இடைக்கால பருவம் என்று சொல்லிக் கொள்ளும் ஒருகாலம் அமெரிக்காவில் உண்டு. அதை இந்தியன் வேனிற் காலம் என்று வியவகரிப்பார்கள். அப்பகுதி நவம்பர் மாதக் கடைசியில், மப்பும் மந்தாரமுமாய் இருந்த ஒரு நாள் பெட்லோ வழக்கம்போல் அம்மலைகளுக்குச் சென்றார். பொழுதுபோய் வெகு நேரமாகியும் அவர் வீடு திரும்பவேயில்லை வழிமேல் விழிவைத்துப் பெட்லோவின் வரவிற்காக ஆவலுடன் காத்துக் கொண்டிருந்தோம். மணி 8 ஆகியும் அவர் வராமல் போகவே எங்களுக்கு ஒரே கவலையாய் விட்டது. பெட்லோ ஏதாவது பெரிய ஆபத்தில் அகப்பட்டிருக்கவேண்டும், இல்லையென்றால் வெகு நேரத்திற்கு முன்பே வீடு திரும்பியிருந்திருப்பார் என்று எண்ணினோம். இனியும் காலம் தாழ்த்துவது சரியல்ல; உடனே மலைகளுக்குச் சென்று அவரைத் தேடிக் கண்டுபிடித்து அழைத்து வரவேண்டும் என்று முடிவு செய்தோம். உடனே புறப்படத் தலைப்பட்டோம். புறப்படப் போகும் சமயத்தில் எதிர்பாராத வகையில் திடீரென்று பெட்லோ எங்கள் முன் காட்சியளித்தார். என்றும் இருப்பதைவிட சற்று உற்சாகம் மிக்கவராகவே காணப்பட்டார். எங்களுக்கு ஒரே ஆச்சரியமாகப் போய்விட்டது. தான் தாமதித்து வந்ததின் காரணத்தைப்பற்றியும் தனது மலைப் பிரயாணத்தின்கண் நிகழ்ந்த அனுபவங்களைப்பற்றியும் ஒரு அற்புதமான கதைபோல் அவர் எடுத்துரைத்தார் :

"நான் இன்று காலையில் சுமார் ஒன்பது மணிக்கு மலைக்குப் பயணமானேன் என்பது உங்களுக்குத் தெரியும். கொஞ்ச நேரத்திற்கெல்லாம் மலையின் அடிவாரத்தை அடைந்து மேலேயும் ஏறத் தொடங்கிவிட்டேன். சுமார்

பத்து மணிக்கெல்லாம் ஒடுக்கமான ஒரு இடுக்குவழியை அடைந்தேன். அந்த இடத்திற்கு இதுவரையில் நான் சென்றதே கிடையாது. அவ்விடுக்குப் பாதை வளைந்து வளைந்து சென்றது. அதன் வழியே வெகு உற்சாகத்தோடு தொடர்ந்து சென்றேன். சுற்றிலுமிருந்த இயற்கை காட்சிகள் வனப்புடையவை என்று சொல்லத்தக்கவை அல்லவெனினும் அவைகளில் விவரிக்க முடியாத இன்பகரமான வெறுமையும் தனிமையும் கலந்திருந்தன. ஏகாந்தம் நிலவியது. பசும்புல் தரைகளையும் சாம்பல் நிறப் பாறைகளையும் கடந்து சென்று கொண்டிருந்தேன்.

அப்பாதையில் இதுவரை மனிதனே அடியெடுத்து வைத்திருக்கமாட்டான் என்றே நம்புகிறேன். ஜனங்கள் வழக்கமாகச் செல்லாத ஒதுக்குப்புறத்தில் இருந்ததே அதற்குக் காரணமாகும். ஆகவே நான் அங்குப் போனதில் எனக்கு ஒரு தனிப்பெருமை! எங்கும் ஒரே மூடுபனி மயமாக இருந்தது. 10 கெஜ தூரத்தில் உள்ள பொருள்கள் கூட கண்ணுக்குத் தெரியாத படிக்குப் பனிப்படலம் செறிந்திருந்தது. பாதை வளைந்து வளைந்து சென்றதாலும் பகலவனின் வெளிச்சத்தைப் பனிப்படலம் விழுங்கிக் கொண்டதாலும் திக்குத் திசை தெரியாமல் சென்று கொண்டிருந்தேன். இதற்கிடையில் அபின் சுறு சுறுப்பாகத் தன் வேலையைக் காட்ட முற்பட்டுவிட்டது. உள்ளத்தில் ஒருவகைப் போதையும் உற்சாகமும் பிறந்தன. பார்த்த பொருளெல்லாம் பரவசமளித்தன. இலைகளின் அசைவும், புற்களின்மேல் படிந்திருந்த பனித்துளியின் பளபளப்பும் பறவைகளின் பாட்டும் தேனீயின் ரீங்காரமும் காற்றிலே மிதந்துவந்த காட்டுமலர்களின் நறுமணமும், இதயத்தில் இன்பத்தைப் பெருக்கின. கற்பனுசக்தி இறகு கட்டிக் கொண்டு பறந்தது. இன்ப எண்ணங்கள் ஊற்றெடுத்தன.

அந்த இன்ப எண்ணங்களில் மூழ்கினேன். திளைத்

தேன். என்னை மறந்தேன். கால்கள் என்னையும் அறியாமல் நடந்துகொண்டே இருந்தன. எவ்வளவு நேரந்தான் இன்பக்கடலில் மூழ்கித் திளைத்தேனோ எனக்கே தெரியாது.

செல்லச் செல்ல பனிப்படலம் மிகுந்து கொண்டே வந்தது. வழி அடியோடு தெரியவில்லை. அசைவற்று நின்று விட்டேன். மூடுபனியில் வழிதெரியாமல் நடந்தால் ஆழமறியாதவன் காலைவிட்ட கதையாய்விட்டால் என்ன செய்வதென்று தயங்கினேன். வழியில் ஏதாவது பள்ளமோ படுகுழியோ இருந்து அதில் வீழ்ந்துவிட்டால் ஆபத்தே என்று அடியெடுத்து வைக்க அஞ்சினேன், கலங்கினேன். செய்வதறியாமல் திகைத்தேன். உடல் நடுங்கியது. கரடு முருடு மலைகளைப்பற்றியும் அங்கு வாழும் கொடிய பயங்கர மூர்க்கர்களான காட்டு மிராண்டிகளைப்பற்றியும் வழங்கிவரும் பயங்கரக் கதைகள் வேறு ஞாபகத்திற்கு வந்தன. மருண்டவனுக்கு இருண்டதெல்லாம் பேயாகத் தோன்றுவது போல் ஏற்கனவே அச்சத்தால் நடுங்கிய எனக்குப் பயங்கரக் கதைகள் நினைவுக்கு வந்ததால் சொல்லவும் வேண்டுமோ! பயம் மிகுந்துவிட்டது. இல்லாததையும் பொல்லாததையும் மனம் எண்ணத் தொடங்கியது. பயங்கரக் கற்பனைகள் எழுந்தன. கலக்கமும் பயமும் பன்மடங்காகப் பெருகின, இந்நிலையில் திடீரென்று முரசறை முழங்கும் ஓசை கேட்டது. முரசு முழக்கம் என்பது இக் கரடுமுருடு மலைகளில் என்றும் கேட்டிராத அதிசயம். ஆகவே அவ்வோசை காதில் விழுந்ததும் உள்ளம் குதூகலித்தது. ஒரு தேவ தூதனின் முரசொலியைக் கேட்டிருந்தால்கூட அவ்வளவு மகிழ்ச்சி அடைந்திருக்க மாட்டேன். அதைவிட அதிக இன்பத்தை தந்தது. முரசு முழக்கத்தைத் தொடர்ந்து மற்றொரு விசித்திர காட்சியும் கண்டேன் கால்களில் சலக், சலக் என்று சதங்கை யொலிக்க அரையில் மட்டும் ஆடை அணிந்திருந்த அரை நிருவாண கருநிற மனிதன் ஒருவன் கூக்குரலிட்டுக்கொண்டு வேகமாக என்

லேக் கடந்து சென்றான். பனிப்படலத்தில் அவன் மறைந்தும் மறையாமலுமிருந்ததற்குள் ஒரு பெரிய மிருகம் கண்ணைப் பிதுக்கிக்கொண்டு வாயைத் திறந்தவாறு பாய்ந்தோடி வந்தது. அது என்ன மிருகம் என்பதைக் கவனிக்கத் தவறவில்லை. கழுதைப் புலி!

இந்த பயங்கரக் காட்சி என் பயங்களுக்கு முற்றுப் புள்ளி வைத்ததென்றே சொல்லலாம். ஏனெனில் நான் கண்டதெல்லாம் வெறும் கனவு என்பதை இப்போது உணர்ந்துவிட்டேன். கனவிலிருந்து விழித்தெழ முயன்றேன். தைரியமாக அடியெடுத்து வைத்துச் சுறுசுறுப்பாக மேல்நோக்கி நடந்தேன். கண்களைத் துடைத்துக் கொண்டேன். வாய்விட்டுப் பேசிப் பார்த்தேன். உடலைக் கிள்ளிப் பார்த்தேன். எல்லாச் சோதனைகளையும் செய்து உடலில் உணர்வு இருப்பதைத் தெளிவுபடுத்திக்கொண்டேன். எதிரிலே சுனை யொன்று தென்பட்டது. சுனை நீரால் முகம் கழுவினேன். சோம்பல் நீங்கிப் புது மனிதனாக எழுந்து நின்றேன். தொடர்ந்து நடந்தேன்.

கடைசியாகக் களைப்பு மிகவே சற்று இளைப்பாற ஒரு மரத்தடியில் உட்கார்ந்தேன். மூடுபனி நீங்கியது. கதிரவன் தன் ஒளிக் கிரணங்களைப் பாய்ச்சினான். புல் தரையில் மரத்தின் நிழலைக் கண்டேன். அந்த நிழலையே சிறிது நேரம் உற்று நோக்கினேன், அதைப் பார்க்கப் பார்க்க எனக்கு ஒரே வியப்பாக இருந்தது. அண்ணாந்து பார்த்தேன். அது ஒரு பனை மரம்!

பயம் கலந்த பரபரப்போடு எழுந்தேன். கனவு அடியோடு கலைந்துவிட்டது. வெய்யில் கடுமையாகத் தாக்கியது. அனல் காற்று வீசியது. விசித்திரமான மணம் காற்றில் மிதந்து வந்ததை உணர்ந்தேன். ஆற்றோட்டத்தின் சலசலப்பும் மனித ஆரவாரமும் என் காதுகளுக்கு எட்டின. அச் சலசலப்பும் ஆரவாரமும் எங்கிருந்து வந்தன

என்பதை அறிய எனக்கு ஆவலாக இருந்தது. காதுகளைத் தீட்டிக்கொண்டு உற்றுக் கவனித்தேன்.

நான் மலைச் சரிவை அடைந்துவிட்டதை அறிந்தேன். கீழே என் பார்வையைச் செலுத்தினேன். பரந்த சம வெளியைக் கண்டேன். அச் சமவெளியினூடே அழகிய ஆறு ஒன்று வளைந்து வளைந்து ஓடிக்கொண்டிருந்தது. ஆறென்றால் அதுதான் ஆறு! அவ்வளவு அழகானது அது. ஆற்றோட்டத்தின் பாங்கும் நீரின் தெளிவும் சலசலப்பும் ஆற்றங்கரைகளிலே அடர்ந்து செழித்துக் கொழித்து வளர்ந்திருந்த பசும் மரச்சோலைகளும், சோலைகளுக்கப்பால் பச்சைக் கம்பளம் விரித்தாற்போல் தோன்றிய வயல் களும் காணக் காணத் தெவிட்டாத தேமதுர இன்பத்தை அளிக்கும் அழகிய காட்சிகளாக இருந்தன. ஆற்றின் மேற் குக் கரையில் மிகப் பெரிய நகரம் ஒன்று நடுநாயகமாகக் காட்சியளித்தது. அந்நகரைக் கண்டதும் அராபியக் கதை கள் என் நினைவுக்கு வந்தன. வானளாவிய மாடமாளிகை களும் கூடகோபுரங்களும் மாடத் தூபிகளும் பல நாட்டு மக்கள் கூடி வாணிகம் செய்யும் அங்காடிகளும் நிறைந்த மாபெரும் நகரங்களைப்பற்றி அக்.கதைகளில் படித்த துண்டு. அந் நகரங்களை யெல்லாம்விடப் பெரிய நகர மாகத் திகழ்ந்தது ஆற்றங்கரையிலே இருந்த அந்த அற் புத நகரம். நகரமிருந்த இடத்திற்குமேல் அதிக உயரத் தில் நான் இருந்தேன். ஆகையால் நகரத்தின் மூலை முடுக் குக்கள்கூட என் கண்களுக்கு நன்கு தெரிந்தன. குறுக்கும் நெடுக்குமாக எண்ணற்ற வீதிகள் வளைந்து வளைந்து சென்றன. அவைகளை வீதிகள் என்று சொல்லுவதை விடச் சந்துகள் என்று சொல்வது சாலப் பொருந்தும். எங்குப் பார்த்தாலும் மக்கள் கூட்டம். வீடுகளெல்லாம் ஒரு தனிவகை அமைப்பு. பார்க்குமிட மெங்கும் மாடி முகப்புக்களும் தாழ்வாரங்களும் பலகணிகளும் வானளா விய கோபுரங்களும் மாடத்தூபிகளும் கோயில்களும்

காட்சி யளித்தன. இரண்டொரு மசூதிகளும் இருந்தன. எண்ணற்ற கடைகள் இருந்தன. கடைகளில் பலவகை யான பட்டுக்களும் மஸ்லின்களும் கண்ணைக் கவரும் கத்தி முதலிய இரும்புச் சாமான்களும் விலையுயர்ந்த நகைகளும் மணிகளும் வைக்கப்பட்டிருந்தன. மற்றும் பார்த்த பக்க மெல்லாம் கொடிகளும் பல்லக்குகளும் நன்கு அலங்கரிக்கப் பட்ட யானைகளும் சிற்ப வேலைப்பாடுகள் நிறைந்த சிலை களும் முரசுகளும் மேளங்களும் மணிகளும் பூச்சக்கரக் கொடிகளும் வேல்களும் தங்க, வெள்ளிப் பூண் தடிகளும் காட்சியளித்தன. லட்சக் கணக்கான ஆரவாரித்துக் கோலாகலத்தோடு அங்குக் கூடியிருந்தவர்களில் கருப்பு நிறத்தவர் பலர், மற்றும் பலர் மஞ்சள் நிறத்தவர். அவர் கள் தலைப்பாகை யணிந்திருந்தனர்; தாடி, மீசை, வளர்த் திருந்தனர். கூட்டத்தினிடையே இங்கு மங்குமாக கொழுத்த எருதுகள் திரிந்துகொண்டிருந்தன. குரங்குகள் மசூதிகளின் மேலும் கோபுரங்களிலும் தாவித் தாவிக் குதித்துக் கொண்டும் கிச்! கிச்! என்று கத்திக்கொண்டு யிருந்தன. ஆற்றின் கரையில் எண்ணற்ற படித் துறை கள் காணப்பட்டன. ஆற்றில் ஏராளமான படகுகள் மிதந்துகொண்டிருந்தன. நகரத்திற்கு வெளியே தென்னை களும் பனை மரங்களும் மற்ற மரங்களும் செழிப்பாக வளர்ந்திருந்த தோப்புக்கள் இருந்தன. அவைகளுக்கப் பால் அங்கு மிங்குமாக நெல்வயல்களும், குடியானவர்கள் வாழும் குடிசைகளும், குளங்களும் சிறுகோயில்களும், நாடோடிகளின் கூடாரங்களும் தென்பட்டன. கட்டிளம் காரிகைகள் தலைமேல் குடத்தைச் சுமந்துகொண்டு தன்னந் தனியராய் ஆற்றை நோக்கிச் சென்று கொண்டிருந்த காட்சி கண்களுக்கு விருந்தாக இருந்தது.

"நீங்கள் இப்போது நினைக்கக்கூடும் நான் கண்ட தெல்லாம் வெறும் கனவுதான் என்று. அதுதான் இல்லை. நான் எண்ணியதும் உணர்ந்ததும் கேட்டதும் கண்டதும்

எள்ளளவுகூடக் கனவல்ல. நான் கண் விழித்துக்கொண்டிருந்தேனா இல்லையா என்று முதலில் எனக்கே சந்தேகந்தான். ஆனால் பல சோதனைகள் செய்து பார்த்த பின்னர் என் சந்தேகம் தெளிந்துவிட்டது. தூங்கவில்லை என்பது தெளிவாயிற்று. ஒருவர் கனவு கண்டுகொண்டிருக்கும் போது தாம் காண்பது கனவுதானா என்று சந்தேகிப்பாராகில், அச் சந்தேகம் தெளிய வெகு நேரமாகாது. உடனே கனவு கலைந்து விடும். தாம் கண்டதெல்லாம் கனவுதான் என்பதை அவர் அறிவார். **"நாம் கனவு காண்கின்றோம் என்று கனவு கண்டால், அப்போது நாம் துயிலெழும் நிலையில் இருப்போம்"** என்று நோவாலிஸ் கூறியது முற்றிலும் உண்மையே.

நான் கண்டது கனவா என்ற சந்தேகம் ஏற்படாமல் நான் விவரித்த காட்சிகளைக் கண்டிருந்திருப்பேனாகில் நான் கண்டதனைத்தும் வெறும் கனவாகத்தான் இருந்திருக்க முடியும். ஆனால் எனக்கு அச் சந்தேகம் ஏற்பட்டு அதைச் சோதித்தும் பார்த்தேனாகையால் நான் கண்டதெல்லாம் கனவல்ல; உண்மையே. அதில் சந்தேகமே யில்லை."

"நீங்கள் கண்டதெல்லாம் கனவென்று நாங்கள் நினைக்கவில்லை. மேலும் என்ன நடந்தது என்பதைச் சொல்லுங்கள். மலையைவிட்டு இறங்கி நகரத்திற்குள் சென்றீரோ?" என்று டாக்டர் டெம்பிள்டன் குறுக்கிட்டார்.

"ஆமாம்," என்று மேலும் தொடர்ந்து பேசலானார் பெட்லோ. "நீங்கள் நினைத்தது சரிதான். மலையை விட்டு இறங்கி நகரத்தை நோக்கிச் சென்றேன். எனக்கு முன்னால் ஜனங்கள் திரள் திரளாகப் பரபரப்போடு சென்றுகொண்டிருப்பதைக் கண்டேன். விரைந்து சென்று நானும் அக் கூட்டத்தோடு சேர்ந்து கொண்டேன். அவர்களுடைய பரபரப்பிற்குக் காரணம் என்ன என்பதை அறியத் துடித்தேன். கொஞ்ச நேரத்திற்கெல்லாம் கூட்டத்தில் ஏன்

சேர்ந்தேன் என்று வெறுப்பு வந்துவிட்டது. கும்பலைவிட்டு வெளியேறிக் குறுக்குப் பாதையொன்றின் வழியாக வேக மாக நடந்து சென்று நகரத்தை அடைந்தேன். நகரத்திற் குள் ஏகக் கூட்டம். ஆரவாரம்! ஒரே கலவரம்! குழப்ப மயம்! கலகம்! ஆங்கிலேய அதிகாரிகளின் தலைமையில் பாதி இந்திய உடையும் பாதி ஐரோப்பிய உடையு மணிந் திருந்த சிலர் ஒரு பெருங் கூட்டத்தை எதிர்த்துச் சண்டை செய்து கொண்டிருந்தனர். நான், மடிந்து வீழ்ந்த ஒரு அதிகாரியின் ஆயுதங்களை எடுத்துக்கொண்டு ஆங்கிலேயர் பக்கம் சேர்ந்தேன். யாருடன் சண்டை செய்கிறோம் என் பது தெரியாமலேயே சண்டையில் ஈடுபட்டேன். மேலும் மேலும் பகைவர் குவிந்ததால், அவர்களை எங்களால் எதிர்க்க முடியவில்லை. தப்பியோடிச் சென்று கூடாரங் களில் ஒளிந்து கொண்டோம்.

"கூடாரப் படுதாவில் இருந்த ஓட்டையின் வழியாக நகரத்தில் என்ன நடந்தது என்பதைக் கவனித்தேன். ஆற்றோரத்தில் இருந்த மிகப் பெரிய அரண்மனையைச் சுற்றிலும் மக்கள் கூட்டம் திரண்டுவிட்டது. அவர்கள் ஆவேசத்தோடு அரண்மனையைத் தாக்கினர். அதே சம யத்தில் அரண்மனையின் மாடி ஜன்னலிருந்து ஆண்மை யற்ற ஒருவன் தன் பணியாட்களின் தலைப்பாகைகளை ஒன்றோடொன்று முடித்து கயிறுபோல் ஆக்கி அதன் வழி யாகக் கீழே இறங்கினான்; அருகிலிருந்த படகில் ஏறி ஆற்றின் அக்கரைக்குச் சென்று தப்பியோடிவிட்டான்.

"இதற்கிடையில் நாங்கள் ஒளிந்திருந்த கூடாரத் தைச் சுற்றிலும் பகைவர்கள் சூழ்ந்து விட்டனர். இனியும் கோழைகளாக ஒளிந்து கொண்டிருப்பதில் பயனில்லை என் பதை உணர்ந்து தைரியமாக வெளிவந்து அவர்களை ஆவே சத்தோடு எதிர்த்துத் தாக்கினோம். முதலில் அவர்கள் பின்னடைந்தனர். ஆனால் உடனே மீண்டும் தம்மை தைரியப்படுத்திக் கொண்டு மூர்க்கத்தனமாகச் சண்டை

போட்டனர். அவர்கள் தாக்குதலை எங்களால் எதிர்த்து நிற்கமுடியவில்லை. கொஞ்சங்கொஞ்சமாகப் பின்னடைந்து வானளாவிய பெரிய கட்டிடங்களிடையே இருந்த சிறிய சந்துகளில் போய் அகப்பட்டுக் கொண்டோம். பகைவர்கள் முன்னிலும் கடுமையாகத் தாக்கினர். ஈட்டிகளை எறிந்தனர்; ஊர்ந்து செல்லும் பாம்புகளைப்போல் செய்யப்பட்டிருந்த அம்புகளைச் சரமாரியாகப் பொழிந்தனர் ஒரு அம்பு விரைந்து வந்து என் கன்னப் பொறியில் பாய்ந்தது. நான் சுருண்டு வீழ்ந்தேன். வேதனைப்பட்டேன்; திணறினேன்; மடிந்தேவிட்டேன்.

பெட்லோ இவ்வாறு சொல்லி முடித்ததும் எனக்குச் சிரிப்பு வந்துவிட்டது. சிரித்துக் கொண்டே, "நீர் உமது கதை வெறும் கனவல்ல என்று இனியும் சாதிக்க முடியுமா? இறந்தவர் எப்படி இங்கு வந்தீர்? இறைவன் தோன்றி மீண்டும் உயிர் கொடுத்தாரோ?" என்று பெட்லோவைக் கேட்டேன். பெட்லோ ருசிகரமான விடை ஏதாவது கொடுப்பார் என்று எதிர்பார்த்தேன். ஆனால், என்ன ஆச்சரியம்? அவர் மறுத்துப்பேசத் தயங்கினார். நடுங்கினார். ஒன்றும் பேசாமல் மௌனம் சாதித்தார். டெம்பிள்டன் என்ன நிலையில் இருந்தார் என்பதைக் கவனித்தேன். அவர் நாற்காலில் நிமிர்ந்து மரக்கட்டைபோல் அசைவற்று அமர்ந்திருந்தார். அவருக்குப் பற்கள் கிடுகிடுத்தன. கண்கள் சுழன்றன. 'கடைசியில் தொடர்ந்து பேசுங்கள்' என்று கம்பிய குரலில் பெட்லோவை நோக்கிச் சொன்னார்.

பெட்லோ தொடர்ந்து பேசலானார். "நான் இறந்துவிட்டேன் என்ற உணர்வினால்" பல நிமிஷங்கள் எனக்கு ஒன்றுமே தெரியவில்லை. எல்லாம் இருள்மயமாக இருந்தன. கடைசியில் திடீரென்று மின்சாரப் பாய்ச்சல் போன்ற அதிர்ச்சி ஏற்பட்டது. உணர்வு பெற்றேன். எழுந்து நின்றேன். ஆனால் எனக்கு உடலும் இல்லை;

உருவமும் இல்லை; தோற்றமும் இல்லை. கூட்டம் கலைந்து விட்டது. கலவரம் ஓய்ந்து விட்டது. மழை ஓய்ந்து நின்ற மாதிரி எங்கும் ஒரே அமைதி. தரையில் அம்பு தைத்த என் உடல் கிடந்தது. தலை வீங்கிப் பொலிவிழந்து கிடந்தது. இவைகளை யெல்லாம் நான் உணரமுடிந்ததே யன்றிப் பார்க்க முடியவில்லை. எனக்கு எதிலுமே அக்கறை ஏற்படவில்லை. என் உடலைப்பற்றிக்கூட அக்கறை இல்லை. எந்தவிதமான முயற்சியும் இல்லை. ஆனால் விருப்பம்போல் எங்குவேண்டுமானாலும் காற்றில் மிதந்து செல்ல முடிந்தது. எந்தப் பாதை வழியாக நகரத்திற்குள் சென்றேனோ அந்தப் பாதை வழியாகவே திரும்பினேன் கழுதைப் புலியைக் கண்ட இடத்திற்கு வந்து சேர்ந்ததும் திடீரென்று மீண்டும் ஒரு அதிர்ச்சி ஏற்பட்டது. உடம் பின் பளுவை உணர்ந்தேன். மீண்டும் என் உடலோடு இருப்பதைக் கண்டேன். உடனே வீட்டை நோக்கி விரைந்தேன். இப்போதுகூட, நான் கண்டதெல்லாம் கன வென்று நான் கருதவில்லை.''

"கனவாக இருக்க முடியாது. ஆனாலும் அது கனவல்ல என்றும் சொல்ல முடியாது'' என்றார். டெம் பிள்டன். உடனே ஒரு படத்தை எங்களிடம் நீட்டி, "இந்த நீர்வண்ண ஓவியத்தைப் பாருங்கள். இதை முன்பே காட்டியிருந்திருக்க வேண்டும். ஆனால் ஒருவகை அச்சத்தின் காரணமாக இதுகாறும் இதைக் காட்டாமல் வைத்திருந்தேன்'' என்றார்.

நாங்கள் படத்தை உற்றுக் கவனித்தோம். அதில் சிறப்பான அம்சம் ஒன்றும் இருப்பதாக எனக்குத்தோன்ற வில்லை. ஆனால் பெட்லோ அதைக் கண்ணால் கண்டதும் மூர்ச்சையடையும் நிலைக்கு வந்துவிட்டார். அவ்வோவியம் ஒரு உருவப்படம். அதுவும் பெட்லோவின் உருவத்தையே சித்திரிக்கும் படம்போன்று தோன்றியது.

'' இதன் தேதியைக் கவனித்தீர்களா ?'' என்று டெம்

பிள்டன் கேட்டுக்கொண்டே, அதன் மூலையில் 1680 என்று எழுதியிருந்ததைக் காட்டினர்.

காட்டியபின் டெம்பிள்டன பேசலானர் : "1780-ல் தான் இப்படம் எழுதப்பட்டது. இது காலஞ்சென்ற என் நண்பர் 'ஒல்டேப்' என்பவரின் உருவப்படம். வாரன் ஹேஸ்டிங்ஸ் இந்தியாவின் கவர்னராக இருந்த போது, கல்கத்தாவில் ஒல்டெப் எனக்கு அறிமுகமானர். அப்போது என் வயது 20. பெட்லோ! சாரடோகாவில் தங்களை முதன் முதலாகக் கண்டபோது தங்களுடைய தோற்றம் என் நண்பர் ஒல்டெப்பின் தோற்றத்தை முழுதும் ஒத்திருப்பதைக் கண்டு வியந்தேன். தாங்கள் அந்த என் நண்பரின் நடமாடும் நினைவுச் சின்னமாகவே தோன்றினீர். ஆகவே தங்கள்பால் ஆர்வம் கிளைத்தெழுந்து தங்களோடு பழகும்படி செய்தது. நெருங்கிய நண்பர்களானேம். தங்களைப் பார்க்கும்போதெல்லாம் என் நண்பரின் நினைவு வரும் என்பதை உத்தேசித்தே தங்களுடனேயே எப்பொழுதும் இருப்பதற்கும் ஏற்பாடு செய்து கொண்டேன்.

"தாங்கள் மலையிலிருந்து கண்டதாகக் கூறிய மாபெரும் நகரம் இந்தியாவில் கங்கை யாற்றங் கரையில் இருக்கும் புனிதக் காசிமா நகரமே. நீங்கள் கூறிய கலகமும் சண்டையும் கொலைகளும் காசியில் 1780-ல் நடந்த நிகழ்ச்சிகளே. அவைகள் வாரன் ஹேஸ்டிங்ஸின் அநியாயத்தை எதிர்த்து காசியரசர் சைத் சிங்கின் போர் வீரர்கள் செய்த கிளர்ச்சியின் விளைவுகளாகும். உருமால் கயிறுல் தப்பித்துச் சென்றவர் யாருமல்ல; சைத்து சிங்கே தான். கூடாரத்தில் ஒளிந்திருந்தவர்கள் ஆங்கிலேய அதிகாரிகளும் போர்வீரர்களுமாவர். அவர்களில் நானும் ஒருவன். வங்காளி ஒருவர் எய்த அம்பினுல் தாக்கப்பட்டுச் சுருண்டு வீழ்ந்த அதிகாரிதான் என் அரிய நண்பர் ஒல்டெப். அவரைக் காப்பாற்ற எவ்வளவோ முயன்றேன்"

என்று பேச்சைச் சற்று நிறுத்திவிட்டு, ஒரு நோட்டுப் புத்தகத்தை (அதில் பல பக்கங்கள் புதிதாக எழுதப் பட்டவையாகத் தோன்றின) எங்களிடம் கொடுத்து மீண்டும் பேசலானார். "இந்த நோட்டுப் புத்தகத்தைப் படித்துப் பாருங்கள். நான் சொல்லிய செய்திகள் எல்லாம் இதிலே எழுதப்பட்டுள்ளன. பெட்லோ மலை மேல் பகற்கனவு கண்டுகொண்டிருந்த சமயத்தில் நான் வீட்டில் இருந்துகொண்டு இச்செய்திகளை நோட்டுப் புத்த கத்தில் எழுதி முடித்துக் கொண்டிருந்தேன்." என்றார்.

இச்சம்பவம் நிகழ்ந்த ஒரு வாரத்திற்குப் பின் சார்லட் டெஸ்வில் செய்தித்தாளில் கீழ்க்காணும் செய்தி வெளியா யிருந்தது:

"பண்பும் பணிவுமுள்ள ஆகஸ்டஸ் பெட்லோ மரணமடைந்து விட்டார் என்பதை வருத்தத்தோடு தெரி வித்துக் கொள்ளுகிறோம்.

"பெட்லோ கடந்த சில ஆண்டுகளாக நரம்பு வலி நோயால் வருந்திக்கொண்டிருந்தார். அந்த நோய் அவரை விரைவில் கொன்று விடுமோ என்று அஞ்சும் அளவிற்குக் கொடியதாயிருந்தது. எனினும் அவர் இறந்தமைக்கு அந் நோய் மட்டும் காரணமல்ல. உடனடியான காரணம் வேறு. சில நாட்களுக்கு முன்னர் கரடுமுருடு மலைகளுக்கு உல்லா சப் பயணமாகச் சென்றிருந்தார். திரும்பி வந்தது முதல் அவருக்குச் சளியும் காய்ச்சலுமாக இருந்தது. மற்றும் மூளையில் இரத்த அழுத்தம் அதிகமாய் விட்டது. அதைக் குறைக்க டாக்டர் டெம்பிள்டன் இரத்தத்தை எடுக்க ஏற் பாடு செய்தார். அட்டைகளைக் கன்னப்பொறியில் ஒட்டி அதிகமான இரத்தத்தை உறுஞ்சும்படி செய்தார். ஆனால் சிறிது நேரத்திற்குள் பெட்லோ இறந்துவிட்டார். இறந்த பின்புதான் உண்மையான காரணம் தெரியவந்தது. அட்டைகளிருந்த ஜாடியில் புழுப்போன்ற ஒருவகை விஷப் பூச்சி (Vermicular sangsues) புகுந்திருந்தது. அது அட்டை

மாதிரியே இருந்ததால் அட்டைக்கும் அதற்கும் வேறுபாடு தெரியாமல் அட்டைகளோடு சேர்த்துப் பிடிக்கப்பட்டு ஜாடியில் அடைக்கப்பட்டு விட்டது. அது பெட்லோவின் வலது கன்னப் பொறித் தமனியைக் கடித்து இரத்தத்தை நஞ்சாக்கிவிட்டது. விரைவில் விஷம் தலைக்கேறி அவர் இறந்து விட்டார்."

[குறிப்பு: 'வர்மிக்குலர் சேங்ஸ்யூஸ்' என்ற விஷ ஜந்து குளங்களில் அதிகமாகக் காணப்படுகிறது. அட்டையைப் போலவே இருக்கும். இதன் கருப்பு நிறத்தையும் புழுபோல துடிக்கும் தன்மையையும் வைத்துக்கொண்டுதான் இதை அடையாளம் தெரிந்துகொள்ள முடியும்.]

பெட்லோவிற்கும் காசிக் கலகத்தில் சம்பந்தப்பட்டவரான ஓல்டெப்பிற்கும் ஏதேனும் தொடர்புண்டா? ஓல்டெப் என்ற சொல்தான் "பெட்லோ"வாக மாறியமைந்தது. ஆங்கில எழுத்திலக்கணத்தில் இது நன்கு விளங்கும் (OLDEB திருப்பி எழுதப் பெற்ருல் BEDLO வாகும்.) கட்டுக்கதையைவிட உண்மை நிகழ்ச்சியே அதிசயமானது என்பதற்கு இது சான்ருகும்.

# உயிரோடு புதைத்தல்

உள்ளத்தைக் கொள்ளைகொண்டு கருத்தைக் கவருவதோடு காவியங்களிலும் கதைகளிலும் இடம் பெறுவதற்கும் ஏற்றவைகளான விஷயங்கள் உலகத்தில் பல உள்ளன. சில விஷயங்கள் நம் மனத்தைக் கவரக்கூடியவையாகவும் ஆர்வத்தை உண்டாக்கக் கூடியவையாகவும் இருந்தாலும் கதைகளிலே எடுத்து ஆள முடியாத அளவுக்குக் கொடூரமானவைகளாக இருக்கக்கூடும். நேயர்களின் மனத்தைப் புண்படுத்தாமல் இருக்கவேண்டுமாயின் இத்தகைய விஷயங்களை நாவலாசிரியர் தவிர்க்க வேண்டும். ஆயினும் கொடூரமான விஷயங்களும் சிறந்த உண்மைகளையும் சீரிய கருத்துக்களையும் புலப்படுத்துவதாக இருந்தால் அவைகளைத் தகுதியோடு கதைகளில் எடுத்து ஆளலாம். சான்றாக, கல்கத்தா இருட்டறைச் சம்பவம், லிஸ்பன் பூகம்பம், சாது பார்த்தலோமியூவின் படுகொலை, லண்டனில் பரவிய பிளேக் வியாதியின் கொடுமை போன்ற செய்திகளைக் கேட்கும்போது மெய் சிலிர்க்கிறது; பரபரப்பு ஏற்படுகிறது; திடுக்கிடுகிறோம். திடுக்கிடுவதற்குக் காரணம் அச்செய்திகளில் அடங்கியுள்ள உண்மை வரலாறு ஆகும். அவை போன்ற நிகழ்ச்சிகளை கற்பனைக் கதைகளில் புகுத்துவோமாயின் அருவருப்பையே உண்டுபண்ணும்.

இதுகாறும் உலகில் நிகழ்ந்த திடுக்கிடும் ருசிகரமான சம்பவங்களில் விபத்தின் தன்மையைவிட அதன் எல்லையே நம் கற்பனையைத் தூண்டுவதாக உள்ளது. இத்தகைய கொடிய சம்பவங்களெல்லாம் ஒரே சமயத்தில் பல பேரைத் துன்பத்திற்கு ஆளாக்கும் பொதுவான நிகழ்ச்சிகளே. இவைகளைவிடக் கொடியவை தனி மனிதனுக்கு ஏற்படும் தொல்லைகளும் துன்பங்களும் ஆம். மிகக் கொடிய துன்பங்களையும் தாங்குபவன்—துன்பத்தின் எல்லையை எட்டிப்

பிடிப்பவன்—தனி மனிதனேயன்றி சமூகமல்ல. இந்த அள விற்காவது கடவுள் கருணை காட்டுகிறாரே என்று நன்றி செலுத்த வேண்டும்!

ஒருவன் உயிரோடு இருக்கும்போதே புதைக்கப்பட்டால் எப்படி யிருக்கும்! அவன்படும் துன்பத்திற்கு அள வேது. இத்துன்பமே தனி மனிதன் படும் கொடிய துன்பங் களிலெல்லாம் கொடியது என்பதில் ஐயமேயில்லை. இத் துன்பத்தையும் சிலர் அனுபவிக்கும்படியான சந்தர்ப்பங் கள் வாய்க்கின்றனவே! வாழ்வுக்கும் சாவுக்கும் எல்லை காண்பது அரிது. வாழ்வின் முடிவு எது? சாவின் தொடக் கம் எது? என்று யாருமே சொல்லமுடியாது! சில வகை யான நோய்கள் வந்தால், நோயாளியின் உடல் உறுப்புக் கள் செயலற்றுப்போய் பேச்சு மூச்சுக்கூட நின்றுவிடும். நோயாளி இறந்துவிட்டதாக முடிவு செய்துவிடுவோம். ஆனால் சிறிது நேரம் கழிந்தால், நோயாளி திடீரென்று உணர்வு பெற்றுவிடுகிறான்; கண்களைத் திறக்கிறான்; பேசு கிறான்; கைகால்களை அசைக்கிறான். அந்தச் சிறிது நேரம் வரையில் அவனுடைய உயிர் எங்கே செல்லும்? சென்ற உயிர் மீண்டும் எப்படித் திரும்பி வரும்?

இத்தகைய காரியங்களுக்குத் தக்க காரணங்கள் ஏதா வது இருந்துதான் ஆகவேண்டும் என்பது ஒரு பக்கம் இருக்க, நோயாளிகளுக்குத் தாற்காலிகமாக உயிர் நின்று விடும் சமயங்களில், அவர்கள் உண்மையிலேயே இறந்து விட்டார்கள் என்று தவறாக முடிவுசெய்து அவர்களைப் புதைத்துவிடக்கூடிய சம்பவங்களும் நிகழ்ந்திருக்கின்றன இது வைத்திய உலகின் அனுபவம்; சாமானியர்களின் அனு பவமும்கூட. இம்மாதிரி சம்பவங்களுக்குத் தக்க ஆதாரங் களோடு நூறு உதாரணங்கள் வேண்டுமென்றாலும் என் னால் கூறமுடியும்.

இச்சமயத்தில் மிகப் பிரசித்தமான சம்பவம் ஒன்று ஞாபகத்திற்கு வருகிறது. (சு.1840-ல்) பால்டிமோர் என்ற

நகரத்தையடுத்துள்ள நகரத்தில் துக்ககரமான திடுக்கிடும் சம்பவம் ஒன்று நேர்ந்தது. காங்கிரஸ் அங்கத்தினரும் பிரபல வக்கீலுமான ஒருசெல்வச் சீமானின் மனைவிக்குத் திடீரென்று கொடும் நோய் வந்தது. அது என்ன நோய், அதை எப்படிக் குணப்படுத்துவது என்று எந்த டாக்டருக்கும் புரியவில்லை. அந்தோ! பரிதாபம்! பணமிருந்தும் வழியில்லை. அந்த அம்மையார் நோயிலிருந்து விடுபெறவே இல்லை. நோயினால் அழுந்தி இறந்துவிட்டார். அல்லது இறந்து விட்டதாகக் கருதப்பட்டார். அவர் உண்மையில் இறக்கவில்லையென்று யாரும் சந்தேகப்படவில்லை; சந்தேகப்படும்படியான காரணமும் இல்லை. இறந்தவருக்குரிய வழக்கமான அறிகுறிகளெல்லாம் காணப்பட்டதால் அந்த அம்மையார் இறந்துவிட்டதாகவே எல்லோரும் கருதினர். முகம் வாடிவிட்டது; பற்கள் கிட்டிவிட்டன. கண்கள் ஒளி இழந்தன. உடம்பில் உஷ்ணம் இல்லை. மூச்சும் நாடித் துடிப்பும் நின்றுவிட்டன. உடலை மூன்றுநாள் வரையில் வைத்திருந்தனர். கல்போல் விறைத்து விட்டது. இன்னும் வைத்திருந்தால் பிணம் கெட்டுப்போய் விடும் என்று எண்ணி உடனே அடக்கம் செய்வதற்கு ஏற்பாடு செய்தனர்.

சவத்தை அவருடைய குடும்ப நிலவறையில் அடக்கம் செய்தனர். மூன்று ஆண்டுகள் வரையில் அவ்வறைப் பக்கமே யாரும் செல்லவில்லை. அதன் பின்னர் ஒருநாள் வக்கீல் நினைவுக்கல் நாட்டுவதற்காக நிலவறையின் கதவைத் திறந்தார். பயங்கர அதிர்ச்சி அவருக்காகக் காத்திருந்தது. கதவைத் திறந்த மாத்திரத்தில் அவருடைய கையின்மேல் அவருடைய மனைவியின் எலும்புக்கூடு கலைந்து வீழ்ந்தது.

நன்கு பரிசீலனை செய்து பார்த்ததின்பேரில் உண்மை புலப்பட்டது. அடக்கம் செய்த நாளிற்கு அடுத்த நாளோ அல்லது அதற்கு அடுத்த நாளோ அந்த அம்மையார் உணர்வு பெற்றுவிட்டாராம். உணர்வு பெற்றதும் சவப்

பெட்டியிலிருந்து வெளிவர முயன்றாராம். பெட்டிக்குள் அப்படியும் இப்படியும் அசைந்து போராடினாராம். போராட்டத்தின் காரணமாக சவப்பெட்டி மேடையி லிருந்து நழுவிக் கீழே வீழ்ந்து உடைந்துவிட்டது. பெட்டி உடையவே, அவ்வம்மையார் பெட்டியைவிட்டு வெளிவந்து விட்டார்.

சவ அடக்கத்தின்போது எடுத்துச்சென்ற விளக்கை மறந்துபோய் நிலவறையிலேயே வைத்துவிட்டுச் சென்று விட்டார்களாம். அந்த விளக்குக் காலியாக இருந்தது. அநேகமாக எரிந்து எண்ணெய் தீர்ந்துபோயிருக்கக்கூடும். உயிர் பெற்றெழுந்த அம்மையார் தட்டுத்தடுமாறிப் படி களில் ஏறி கதவண்டைவந்து சவப் பெட்டியின் உடைந்த சில்லொன்றால் நிலவறையை மூடியிருந்த இரும்புக் கத வைத் தட்டி மற்றவர்களின் கவனத்தைக் கவர முயன்று பயனில்லாமல் போகவே அதே இடத்தில் சோர்ந்து விழுந்து உண்மையாகவே இறந்துவிட்டாராம். சோர்ந்து விழும்போது அவருடைய உடலை மூடியிருந்த துணி கதவின் உட்புறத்திலிருந்த கம்பியொன்றில் மாட்டிக்கொள்ளவே உடல் அப்படியே தொங்கியது. நாளடைவில் அழுகிப் பின் எலும்புக்கூடாக ஆகிவிட்டது. ஆகவேதான் வக்கீல் கதவைத் திறந்தபோது கதவில் தொங்கிக்கொண்டிருந்த அவ்வெலும்புக்கூடு கலைந்து அவர் கையின்மேல் விழுந்தது.

உண்மையாக நடந்த நிகழ்ச்சி நாவல் கதையைவிட விசித்திரமானது என்ற உண்மைக்கு எடுத்துக்காட்டாக 1810-ல் பிரான்சு நாட்டில் உயிரோடு புதைத்த சம்பவம் ஒன்று நடந்தது. சம்பவத்தின் கதா நாயகி அழகே உரு வான அணங்கு; திருமகளின் உறைவிடம். விக்டோரைன் லபூர்ஸாத் என்பது அவள் பெயர். அவளைக் காதலித்தவர் கள் கணக்கிலடங்கார். எனினும் ஜூலியன் பாஸ்யூவே என்ற ஒரு ஏழை எழுத்தாளனைத்தான் அவள் காதலித் தாள். பாஸ்யூவேவின் திறமையும் நற்குணமும் நல்லொ

மூக்கமும் லயூர்ஸாதைக் கொள்ளை கொண்டுவிட்டன. ஆனால் குலப்பெருமை அவர்களுடைய காதலுக்குக் குறுக்கே நின்றது. உண்மைக் காதலுக்கு இடமேது இவ் வுலகில். பாழும் பணத்திற்கு இருக்கும் பெருமை குன் றெனப்படும் குணத்திற்கு ஏது? எனவே, காதலர்களின் கனவு நினைவாகவில்லை. பாஸ்யூவே பிடிக்க வேண்டிய கைகளை ரெனல் என்பவர் பிடித்தார். ரெனல் பெரும் பணக்காரர். அவருக்குச் சொந்தமாக பாங்கி ஒன்று இருந் தது. மற்றும் அவர் புகழ்பெற்ற அரசியல்வாதி. ரெனல் லயூர்ஸாதைச் செல்வத்திற்காகக் கல்யாணம் செய்து கொண்டாரே யன்றி உண்மையில் அவருடைய உள்ளத் தில் எள்ளளவேனும் காதலன்பு கிடையாது. ஆகவே காரியம் கைகூடியதும் தம் கைவரிசையைக் காட்ட ஆரம் பித்துவிட்டார். கட்டிய மனைவியைக் கவனிக்காததோடு தீங்குகளுக்கும் உட்படுத்தினர். பாவம்! ஏந்திழையாள் எவ்வளவு காலந்தான் தன் கணவனின் உதாசீனத்தைப் பொறுப்பாள், உபத்திரவத்தைத் தாங்குவாள்? தன் நிலையை எண்ணியெண்ணி உருகி உருக்குலைந்து இறந்து விட்டாள்—இறந்துவிட்டாள் என்று மற்றவர்கள் கருதும் படியான நிலையை அடைந்தாள். அவளுடைய பிறந்த ஊராகிய தூரத்துக் கிராமத்தில் அவளைப் புதைத்து விட்டனர். இச் செய்தி யறிந்த பாஸ்யூவே ஆற்றொணாத் துயருற்றார். அவளை அடையத்தான் முடியவில்லை யென் ருலும் சவத்தைத் தோண்டி கூந்தலையாவது எடுத்து அவ ளுடைய அன்பின் அடையாளமாக வைத்துக்கொள்ளலாம் என்ற எண்ணத்தோடு அவளுடைய ஊருக்கு உடனே பயணமானர். ஊரை அடைந்தார். நள்ளிரவில் இடுகாட் டிற்குச் சென்று குழியைப் பறித்துச் சவப்பெட்டியைத் தோண்டி எடுத்து அதைத் திறந்தார். கூந்தலைக் கத்தரிக்க முற்படும் சமயத்தில் எதிர்பாராவகையில் சவத்தின் கண் கள் திறந்திருப்பதைக் கண்டு திகைத்தார். உண்மையைப்

புரிந்துகொள்ள வெகுநேரமாகவில்லை. அந்தோ! அவளை உயிரோடு புதைத்துவிட்டார்கள்! உடலில் ஓரளவிற்குச் சக்தி இருந்தது. காதலனுடைய அன்பார்ந்த அநுசரணை யால் மயக்கம் தெளிந்து உணர்வு பெற்ருள். மயக்கத்தை மரணம் என்று தவருக முடிவு செய்தல்லவோ அவளை உயிரோடு புதைத்து விட்டனர்! பாஸ்யூவே உணர்வுபெற் றெழுந்த அன்புக் காதலியை தூக்கிச் சென்று தம் அறை யில் சேர்ப்பித்தார். கைதேர்ந்த டாக்டர்களைக் கொண்டு சிகிச்சை செய்வித்தார். அவளுடைய உடல் விரைவில் நலம் பெற்றது. அவளுடைய உடல் முன்போல் தேறும் வரையில் அவ்வூரிலேயே தங்கி இருந்தனர். கல்லாயிருந்த அவள் மனம் கனிந்தது. த்ன்னைக் காப்பாற்றிய உண்மைக் காதலனுடைய கருணையைக் கண்டு, பாஸ்யுவேவின்பால் தன் அன்பையெல்லாம் சொரிந்தாள். புனர் வாழ்வு பெற் ருள். வறண்ட பாலைவனம் பசுமரச் சோலையாயிற்று. தன்னுடைய வாழ்வைப் பாழாக்கிய கணவனிடம் திரும்பிச் செல்லவில்லை. தான் பிழைத்தெழுந்ததைப்பற்றி அவருக்கு அறிவிக்கவும் இல்லை, பாஸ்யுவேவுடன் அமெரிக்காவிற் குச் சென்ருள். அங்கே காதலரிருவரும் கருத்தொருமித்து ஆனந்தமாக வாழ்ந்தனர். இருபது ஆண்டுகள் இருபது நாட்களாகக் கழிந்த்ன. இருவரும் இளமையைத் தாண்டி முதியவர்களாயினர். இப்போது தங்களை யாரும் அடை யாளம் தெரிந்துகொள்ள முடியாதென்று கருதினர். அவ் வெண்ணத்தோடு தாய் நாட்டிற்குத் திரும்பினர். அவர் கள் கருத்துப் பொய்த்தது. லவூர்ஸாதை எடுத்த எடுப்பி லேயே ரெனெல் அடையாளம் தெரிந்து கொண்டார். தெரிந்ததோடு நின்றுவிடவில்லை. அவள் தமக்கே உரியவள் என்று உரிமை கொண்டாடி வழக்குத் தொடர்ந்தார். லவூர் ஸாத், தான் மறுவாழ்வு பெற்ற விதத்தை விளக்கித் தான் மீண்டும் ரெனெல்லுக்கு உரியவள் அல்லள் என்று எதிர் வழக்காடினுள்; வழக்கில் வெற்றியும் பெற்ருள்.

மத்திய ஜெர்மனியிலுள்ள லேப்சிக் நகரிலிருந்து வெளி வரும் பத்திரிகை யொன்றில் ஒரு சமயம் சோகச் செய்தி ஒன்று பிரசுரிக்கப்பட்டிருந்தது.

பீரங்கிப்படை அதிகாரியாயிருந்த திடகாத்திரமான தேகமும் ஆரோக்கியமும் உடையவர் குதிரைச் சவாரி செய்துகொண்டிருந்தபோது குதிரை அவரை உதறித் தள்ளிவிட்டது. தொப்பென்று கீழே விழுந்தார். தலையில் பலமான அடி. மண்டை உடைந்துவிட்டது. அடிபட்ட அதிர்ச்சியினால் மூர்ச்சித்தார். எனினும் உயிருக்கொன்றும் ஆபத்தில்லை. உடனே பக்கத்தில் இருந்த ஆஸ்பத்திரிக் குக் கொண்டு சென்றனர். உடைந்த எலும்பைப் பொருத் திக் கட்டுப் போட்டனர். இரத்தம் கொடுத்தனர். பிற சிகிச்சைகளும் பல செய்தனர். எனினும் அவருடைய நிலை யில் முன்னேற்றம் ஏற்படவில்லை. வெகுநேரமாகியும் உணர்ச்சி வரவேயில்லை. நிலை வரவர மோசமாயிற்று. பேச்சு மூச்சு ஒன்றுமேயில்லை. ஆகவே அவர் இறந்து விட்டதாகவே எல்லோரும் முடிவு செய்தனர். உடனே பொது இடுகாடு ஒன்றில் புதைத்து விட்டனர். அடக்கம் செய்த நாள் வியாழக்கிழமை. அதையடுத்த ஞாயிறன்று இடுகாட்டில் ஏகக்கூட்டம். அவ்வதிகாரியைப் புதைத்த குழியின்மேல் ஒரு குடியானவன் உட்கார்ந்திருந்தான். குழிக்குள்ளிருந்து யாரோ தன்னைத் தூக்குவதுபோல் உணர்ந்தான். பயந்து கூச்சலிட்டான். அவனுடைய பேச்சை முதலில் யாரும் பொருட்படுத்தவில்லை. ஆனால் அவன் விடாப்பிடியாகத் தொடர்ந்து கூக்குரலிடவே கூட் டத்தில் பரபரப்பு ஏற்பட்டது. விஷயத்தை அறிய முன் வந்தனர். சிலர் ஓடிப்போய் கடப்பாரையும் மண்வெட்டி களும் வாங்கி வந்தனர். அவசர அவசரமாகக் குழியைப் பறித்தனர். நல்ல வேளையாகக் குழி ஆழமாக இல்லை. விரைவில் தோண்டிவிட்டனர். அதிகாரியின் தலை தென் பட்டது. சவப் பெட்டி திறந்திருந்தது. அதிகாரி நிமிர்ந்து

உட்கார்ந்திருந்தார். அவரை உடனே ஆஸ்பத்திரிக்கு எடுத்துச் சென்றனர். அவர் மூர்ச்சித்த நிலையில் இருந்தாலும் சாகவில்லை எனக் கண்டனர். சில மணி நேரத்திற்குப் பின் மயக்கம் தெளிந்துவிட்டது. அவர் தமக்கு ஏற்கனவே தெரிந்திருந்த இரண்டொருவரை அடையாளம் தெரிந்துகொண்டார். குழியில் தாம் பட்ட கஷ்டங்களைச் சொன்னார்.

புதைக்கும்போது அவர் உயிரோடுதான் இருந்தாராம். ஆனால் வாய்விட்டுப் பேச முடியாத நிலையில் இருந்தாராம். மயக்கம் சற்றுத் தெளிந்திருந்த சமயத்தில் புதைத்துவிட்டுப் போய்விட்டனராம். நல்ல வேளையாகக் குழியை மேலாகப் பறித்து அவசர அவசரமாக மூடிவிட்டார்களாம். மண் பொலு பொலுப்பாக இருந்ததால் குழிக்குள் காற்றுப் புக முடிந்ததாம். அக் காற்றையே ஆகாரமாகக் கொண்டு சாகாமல் தப்பித்தாராம். பசி மயக்கத்தாலும் புண் வலியாலும் வாடி வதங்கிச் சோர்ந்து குற்றுயிராகக் கிடந்தாராம். ஞாயிறன்று கூட்டத்தவரின் பரபரப்பும் காலடியோசையும் அவருடைய ஆழ்ந்த தூக்கத்தைக் கலைத்தனவாம். குழிக்குள் அப்படியும் இப்படியும் உதைத்துப் போராடி சவப் பெட்டியைத் திறந்து விட்டாராம் அப் போராட்டமே குழிமேல் அமர்ந்திருந்த குடியானவர் தம்மைப் பூமிக்குள்ளிருந்து யாரோ தாக்குகின்றார் என்று உணரும்படி செய்தது.

ஆஸ்பத்திரியில் அவருடைய நிலைமை நாளுக்கு நாள் முன்னேறி வந்தது. முழுக்கத் தேறிவிடுவார் என்ற நம்பிக்கை பிறந்தது. ஆனால் அவர் தவறான மருத்துவப் பரிசோதனைக்குப் பலியாக நேர்ந்தது. டாக்டர்கள் மின்சார பேட்டரியைக் கையாண்டனர். அதனால் ஏற்பட்ட திடீர் எழுச்சியின் காரணமாக அவருடைய இருதயத் துடிப்பு நின்றுவிட்டது. மண்டையுடைந்தும் சாகாதவர், குழிக்குள் மூன்று நாட்கள் கிடந்தும் சாகாதவர் கடைசி

யில் மருத்துவரின் பிழையால் இறக்கும்படி நேர்ந்ததே!

மின்சாரப் பேட்டரியைப்பற்றிய பேச்சு வந்ததனால் மற்றொரு ருசிகரமான சம்பவம் என் ஞாபகத்திற்கு வருகிறது. மேலே கூறிய சம்பவத்தில் மின்சாரம் பேட்டரீயால் ஒருவர் அநியாயமாக இறந்தார். இப்போது சொல்லப் போகும் சம்பவத்தில் மின்சாரப் பேட்டரியால் மாண்டவர் மீண்டார்.

1831-ல் லண்டன்மா நகரில் எட்வர்டு ஸ்டேபிள்டன் என்ற இளம் வழக்கறிஞர் சன்னிபாத ஜ்வரத்தால் பீடிக்கப்பட்டு இறந்து விட்டார். அவருடைய உடலில் புதுமையான அறிகுறிகள் சில தென்பட்டதால் டாக்டர்கள் அவைகளை ஆராய்ந்து பார்க்க ஆசைப்பட்டார்கள். ஆகவே இறந்தவருடைய உற்றாரிடம் சவத்தை அறுப்பதற்கு அனுமதி கோரினர். ஆனால் அவர்கள் அனுமதி அளிக்க மறுத்து விட்டனர். சவத்தைத் திருட்டுத்தனமாகத் தோண்டியெடுத்து அறுத்து ஆராய்ச்சியை நடத்திக் கொள்ளலாம் என்ற எண்ணத்தின்பேரில் டாக்டர்கள் தங்கள் கோரிக்கையை வற்புறுத்தவில்லை. இறந்தவரின் உறவினர் சவத்தை அடக்கம் செய்து விட்டனர். ஈமக்கிரியை நடந்ததற்கு மூன்றாம் நாள் இரவில் டாக்டர்களின் இரகசியத் திட்டத்தின்படி சவம் தோண்டியெடுக்கப்பட்டு பிரைவேட் ஆஸ்பத்திரி ஆபரேஷன் அறைக்குக் கொண்டு வந்து சேர்க்கப்பட்டது. டாக்டர்கள் தங்கள் ஆராய்ச்சியைத் தொடங்கினர். முதலில் அடிவயிற்றைக் கிழித்தனர். கொஞ்சம் கிழித்ததும் உடல் சற்றும் வாடாமலும் கெடாமலும் இருப்பதைக் கண்டு உடனே ஆபரேஷனை நிறுத்தி விட்டனர். பேட்டரியைப் பயன்படுத்தி ஒன்றன்பின் ஒன்றாகப் பல பரிசோதனைகள் நடத்தினர்.

இரவு வெகுநேரம் ஆய்விட்டது. கிழக்கும் வெளுத்து விட்டது. இனியும் வெறும் சோதனைகளை நீடிப்பது உகந்த

தல்ல; உடனே உடலை ஆபரேஷன் செய்து, பார்க்கவேண்டியதைப் பார்த்து முடித்துவிட வேண்டும் என்று எண்ணினர். எனினும் ஒருவர் மட்டும் தம் கோட்பாடு ஒன்றைச் சோதித்துப் பார்க்க வேண்டும் என்ற ஆவலோடு மார்புத் தசையில் பேட்டரியைச் செலுத்தவேண்டும் என்று வற்புறுத்தினர். மார்பில் சிறு காயம் செய்து, மின்சாரப் பேட்டரியோடு இணைக்கப்பட்ட கம்பியை அதில் முட்ட வைத்தனர். வைத்த மாத்திரத்தில், இறந்ததாகக் கருதப் பட்டவர் திடீரென்று உணர்வு பெற்று எழுந்தார்; மேஜையைவிட்டுக் கீழே குதித்து நின்றார்; தம்மைச் சூழ்ந்துள்ளவர்களைச் சில கணநேரம் உற்றுப்பார்த்தார்; பின் ஏதோ சில வார்த்தைகளைப் பிதற்றினர். என்ன பேசினர் என்று யாருக்கும் விளங்கவில்லை. சிறிது நேரத்தில் மயங்கிக் கீழே விழ்ந்து விட்டார். டாக்டர்கள் திகைத்து மெய் மறந்து நின்றுவிட்டனர். ஆயினும் சிறிது நேர தயக்கத்துக்குப்பின் தம் காரியத்தில் கருத்துச் செலுத்த முனைந்தனர். ஸ்டேபிள்டனின் உடலைப் பரிசோதித்துப் பார்த்தனர். வெறும் மயக்கமேயன்றி மரிக்கவில்லை யென்பதை அறிந்து மயக்கம் தெளிய மருந்து கொடுத்தனர். மயக்கம் தெளிந்தது. நோயைக் குணப்படுத்தி சிகிச்சை செய்தனர். ஆபத்து நிலை அறவே கடந்துவிட்டது எனத் தெரியும்வரையில் ஸ்டேபிள்டன் மறுவாழ்வு பெற்ற செய்தியை யாருக்கும் அறிவிக்காமல் இரகசியமாக வைத்திருந்தனர். செய்தி தெரியவந்தபோது ஸ்டேபிள்டனின் நண்பர்களும் உற்றார்களும் அடைந்த ஆனந்தத்திற்கு எல்லையுமுண்டோ?

இச் சம்பவத்தில் மிக ரசமான கட்டம், ஸ்டேபிள்டன் உயிர்பெற்று எழுந்தபின் சொன்ன செய்தியே வாகும். அவர் உண்மையில் சாகவேயில்லையாம். எச்சமயத்திலும் உணர்வு அடியோடு அற்றுவிட வில்லையாம். அவர் இறந்து விட்டதாக டாக்டர்கள் முடிவு செய்ததுமுதல் ஆபரேஷன் அறையில் மயங்கி வீழ்ந்தது வரையில் நடந்த நிகழ்ச்சி

களெல்லாம் அரைகுறையாகவாவது அவருக்குத் தெரியுமாம். மார்புத் தசையில் பேட்டரி வைத்தபோது திடீரென்று உணர்வுபெற்று எழுந்து சில வார்த்தைகள் பேசினூரல்லவா? "நான் சாகவில்லை உயிரோடுதான் இருக்கிறேன்" என்பனவே அவ் வார்த்தைகள். டாக்டர்களுக்கு உண்மையை உணர்த்த வேண்டும், இல்லையென்ருல் ஆபரேஷன் செய்து விடுவார்களே என்ற அவசரத்திலே சொன்ன சொற்கள் அல்லவா? ஆகவே அவைகள் யாருக்கும் விளங்கவில்லை. வெறும் பிதற்றலாகத் தோன்றியது.

இத்தகைய செய்திகளை எத்தனை வேண்டுமாஞலும் அடுக்கிக்கொண்டே போகலாம். எனினும் உயிரோடு புதைத்தலும் உண்டு என்பதை நிரூபிக்க இதுகாறும் கூறிய சம்பவங்களே போதுமானவையாகும். சற்று எண்ணிப் பார்த்தால் உயிரோடு புதைத்தலும் உண்டு என்பதற்கு சான்றுகளே தேவையில்லையென அறிவோம். நோயாளியின் நிலையிலிருந்து அவன் உண்மையிலேயே இறந்து விட்டாஞ, இல்லையா என்று அறிந்து கொள்ளும் ஆற்றல் நமக்கு இல்லாதிருக்கும்போது, உயிரோடு புதைக்கும் சம்பவங்கள் நமக்குத் தெரியாமலேயே அடிக்கடி நிகழக்கூடும் என்பதை நாம் ஏற்றுக்கொள்ளத்தான் வேண்டும். ஒருவர் இறந்துவிட்டார் என்று சரியாகவோ தப்பாகவோ முடிவு செய்துவிடும்போது ஊரெல்லாம் கூடி அழுது புலம்பிப் பிணத்தைச் சுடுகாட்டிற்குக் கொண்டு சென்று புதைத்துவிட்டு இறந்தவரைப் பற்றிய நினைப்பொழிகிருேம். அச் சவக்குழிப் பக்கம் மீண்டும் யார் தலைகாட்டப் போகின்ருர்? மூடிய சவக்குழிகளை மீண்டும் தோண்டிப் பார்த்தால் உண்மை புலஞகும். சவக்குழிகளில் பிணங்களை நாம் எந்தவாக்கில் கிடத்திஞேமோ அந்த வாக்கில் எலும்புக்கூடுகள் இல்லாமல் நிலைமாறிக் கிடப்பதைக் கண்டால் நமக்கு எப்படி இருக்கும்? உயிரோடுதான் புதைத்து விட்டோமோ என்ற சந்தேகம் தோன்றும்!

அச் சந்தேகம் மிகக் கொடியது! அதனினும் கொடியது புதைக்கப்பட்டவருக்கு இயற்கையாக ஆயுள் முடியும் முன்பே ஏற்பட்ட சாவு! கொடியது கொடியது உயிரோடு புதைக்கப்பட்டவர் படும் துன்பம்! அவர் படும் உடல் துன்பத்திற்கும் மனவருத்தத்திற்கும் எல்லையேது! மூச்சுத் திணறல்—ஈரமண்ணின் மூக்கைத் தொளைக்கும் வாசனை—கோடித் துணியின் கஞ்சி நாற்றமும் மடமடப்பும்—அப்படியும் இப்படியும் திரும்பமுடியாத படியான இடநெருக்கம்—அனைத்தும் அந்தகாரமாகத் தோன்றும் காரிருள்—குழிக்குள் நிலவும் சுடுகாட்டமைதி—மண்ணுக்குள் மண்டிக் கிடக்கும் கண்ணுக்குத் தெரியாத கணக்கற்ற பூச்சி புழுக்களின் உபத்திரவம்—குழிக்கு மேலுள்ள பரந்த உலகத்தையும் வாயு மண்டலத்தையும் பற்றிய நினைவு—விஷயம் தெரிந்தால் காப்பாற்ற ஓடிவரக்கூடிய நண்பர்களையும் சுற்றத்தாரையும் பற்றிய நினைவு—அவர்களுக்கெங்கே விஷயம் தெரியப்போகிறது என்ற ஏமாற்றம்—சாவதைத் தவிர வேறு வழியே இல்லையென்ற உண்மையை உணர்தல்—முதலியன உள்ளத்தில் எத்தகைய கொடிய பயத்தையும் துன்பத்தையும் உண்டாக்கும்! எத்தகைய விபரீதக் கற்பனைகள் தோன்றும்? விவரிக்க முடியாதது! கற்பனைக்கு எட்டாதது!! உயிரோடு புதைக்கப்பட்டவனின் துன்பத்திற்கு இணையான துன்பம் வேறெதுவுமே இவ்வுலகில் இருக்கமுடியாது. ஆகவே, இத்தகைய கொடிய சம்பவங்களைப்பற்றிக் கேள்விப்படும்போது திகைப்படையாமல் வேறென்ன செய்ய முடியும்? இனி, இவ்விஷயத்தைப் பற்றி நான் நேரில் கண்டு அறிந்ததை—என் சொந்த வாழ்க்கையிலேயே பட்டு அனுபவித்ததைப்பற்றிச் சொல்லப் போகிறேன்.

வெகு காலமாக எனக்கு ஒரு நோய் இருந்து வந்தது. நோய் என்றால் சாதாரண நோயா? இல்லை. மிகக் கொடிய நோய். அதிலும் புதுவகையான நோய். அந் நோய் எத

னால் வந்தது, அதை எப்படிக் குணப்படுத்துவது என்று எந்த டாக்டருக்குமே தெரியவில்லை! அந்நோயுக்கு என்ன பேர் வைப்பது எனத் தெரியாத நிலையிலே பொதுப்படியாக மூடுசன்னி என்று பெயரிட்டனர். சன்னி கண்டபோது சிறிது நேரமோ அல்லது நாள் முழுவதுமோ மயக்கம் வந்துவிடும். உடல் விறைத்துப் போகும். அங்கங்கள் அசையா. நாடித் துடிப்பும் உஷ்ணமும்தான் ஓரளவிற்கு இருக்கும். கன்னம் கருத்துப்போகும். உதடுகளில் கண்ணாடியை வைத்துப் பார்த்தால் சுவாசப்பைகள் விட்டுவிட்டுச் சுருங்கி விரிந்து வேலை செய்வது தெரியும். இத்தகைய சன்னி சில சமயங்களில் வாரக் கணக்கில்—ஏன்? மாதக் கணக்கில் கூட நீடிப்பதுண்டு. இச் சன்னி கண்ட நோயாளி உணர்ச்சியற்று மரக்கட்டைபோல் படுத்திருக்கும்போது என்னதான் உற்றுக் கவனித்துப் பார்த்தாலும் அல்லது தீவிர மருத்துவப் பரிசோதனை செய்து பார்த்தாலும் நோயாளிக்கு உயிர் இருக்கிறதா போய்விட்டதா என்று திட்டமாகச் சொல்ல முடியாது. ஆகவே நோயாளியைச் சார்ந்தவர்கள் இந் நோயின் தன்மையை நன்கு தெரிந்தவர்களாயிருந்தால் ஒழிய நோயாளி உயிரோடு மீள்வது துர்லபம்; செத்துவிட்டான் என்று கருதி உயிருடனேயே புதைத்துவிடுவார்கள். நோயைப்பற்றி ஏற்கனவே தெரியாமல் இருந்தாலும், உடல் அழுகிப்போகாமல் இருப்பதைக் கவனிப்பார்களாயின் நோயாளி புதைக்கப்படாமல் காப்பாற்றப் பெறுவான். நல்ல வேளையாக இச் சன்னி எடுத்த எடுப்பிலேயே கொடுமைப்படுத்தாது, நாளடைவில்தான் கொஞ்ச கொஞ்சமாக மிகும். சன்னி முதல் தடவை காணும்போது கொஞ்ச நேரத்திற்குள் நீங்கி மயக்கம் தெளிந்துவிடும். அடுத்த தடவை சன்னி காணும்போது மயக்கம் முன்னைவிட அதிக நேரம் இருக்கும். இவ்வாறாக ஒவ்வொரு தடவையும் முந்தின தடவையைவிட மயக்க நேரம் அதிகமாகிக்கொண்டே செல்லும்.

சிலருக்கு முதல் தடவையிலேயே நோய் கடுமையாகி மயக்கம் அதிக நேரம் இருப்பதும் உண்டு. அத்தகைய துர்ப்பாக்கியசாலிகள் சாகும் முன்பே குழிக்கு அனுப்பப்படுவது திண்ணம்.

எனக்குச் சன்னி கண்ட புதிதில் மயக்கம் சிறிது நேரம் வரையில்தான் இருந்தது; உடலில் வலி ஒன்றும் ஏற்படவில்லை. ஆனால் கை, கால்களை அசைக்க முடியவில்லை; வாய்விட்டுப் பேச முடியவில்லை. உயிர் இருப்பதை உணர முடிந்தது. பக்கத்தில் பலபேர் சூழ்ந்திருப்பதையும் உணர முடிந்தது. சன்னி விட்டதும் திடீரென்று உணர்வு வந்து விட்டது. நாளடைவில் நோய் கடுமையாய் விட்டது. அடிக்கடி சன்னி கண்டது. வாரக் கணக்கில் உணர்ச்சியற்றுக் கிடப்பேன்; ஒன்றுமே புலப்படாது எல்லாம் இருள்மயமாக இருக்கும். சன்னி விடும்போது, கொஞ்ச கொஞ்சமாக உணர்வுபெற்று எழுவேன். மயக்கம் தெளிந்து உணர்வு பெறும்போது, உற்றார், உறவினர் உறைவிடம் ஏதுமில்லாத ஏழைக்கு குளிரிலும் பனியிலும் நடுங்கிக்கொண்டு இரவு முழுவதும் வீதிகளிலே சுற்றியலைந்து வருந்திய பிச்சைக்காரன் பொழுது விடிந்தால் எவ்வளவு இன்பம் பெறுவானோ அவ்வளவு மகிழ்ச்சி யடைவேன்.

எனக்கு அடிக்கடி மயக்கம் வந்தபோதிலும் ஆரோக்கியம் அவ்வளவாகக் கெடவில்லை. மயக்கம் தெளிந்தவுடனேயே எல்லா உணர்வுகளும் வந்துவிடா. பல நிமிஷ நேரம் பித்துப்பிடித்தவன் மாதிரி குழம்பிக்கிடப்பேன். ஞாபகச் சக்தி கொஞ்சமேனும் இராது.

நோயினால் எனக்கு மெய்வருத்தம் இல்லை என்றாலும் மன வருத்தம் தாங்க முடியாததாக இருந்தது. பயங்கரக் கற்பனைகள் தோன்றின. சவக்குழியிலே நெளிந்துகொண்டிருக்கும் புழுக்களும் இறந்தவர்களைப் புதைத்த குழிகளின் மேல் கட்டும் சமாதிகளும் இறந்தவர்களின் சவங்களை

அடக்கம் செய்யக் கூடிய இருண்ட நிலவறைகளும் என் மனக் கண்முன் தோன்றிப் பயமுறுத்தின. சாவைப்பற்றிய கொடிய எண்ணங்கள் எழுந்தன. உயிரோடு புதைத்தலைப்பற்றிய எண்ணம் என்னை ஆட்கொண்டு விட்டது. இரவு பகல் எந்நேரமும் இந்தப் பயங்கர எண்ணந்தான். பகல் நேரத்தைவிட இரவு நேரம் மிகப் பொல்லாததாக இருந்தது. கற்பனை எண்ணங்களின் கொடுமையைத் தாங்க முடியாமல் தத்தளிப்பேன். 'இரவு நேரத்தைக் கண்டாலே என் உடல் நடுங்கும். தூக்கமே வராது. தூக்கம் வருவதாயிருந்தாலும் தூங்க மனம் வராது. தூங்கிவிட்டால் என்னைப் புதைத்துவிடுவார்களோ என்ற பயமே என்னைத் தூங்குவதற்குத் துணியவிடவில்லை. எனினும் எவ்வளவு நேரந்தான் தூங்காமல் இருக்க முடியும். கடைசியில் கண்கள் சோர்ந்துபோய் தூக்கம் தானாகவே வந்துவிடும். தூக்கம் வந்துவிட்டால் ஒரே கனவு மயந்தான். விசித்திரமான—நனவுலகில் கண்டும் கேட்டுமிராத—கொடிய—பயங்கரக் காட்சிகள் தோன்றும். அவைகளைக் கண்டு பயந்து நடுங்கி ஒடுங்கிவிடுவேன்.

கனவிலே தோன்றி என்னைப் பயப்படுத்திய கொடிய காட்சிகள் கணக்கிலடங்கா. அவைகளில் ஒரு காட்சியை மட்டும் உங்களுக்குக் கூறுகின்றேன்.

வழக்கமாக இருப்பதைவிட அதிகநேரம் மயக்கம் இருந்த சமயம் என்று நினைக்கிறேன். திடீரென்று என் முகத்தின்மேல் குளிர்ச்சியான கை ஒன்று பட்டது. அதே சமயத்தில் "எழுந்திரு" என்ற பேச்சும் கேட்டது.

எழுந்து அமர்ந்தேன். ஒரே கும்மிருட்டு. என்னைத் தொட்டு எழுப்பிய உருவம் என் கண்களுக்குத் தெரியவில்லை. எப்போது எனக்குச் சன்னி கண்டது? சன்னி கண்டபோது நான் எந்த இடத்தில் படுத்திருந்தேன்? என்பன ஞாபகமில்லை.

எழுந்தவன் அப்படியே உட்கார்ந்து விட்டேன்!

நடந்த நிகழ்ச்சிகளை ஞாபகப்படுத்திப் பார்க்க முயன்றேன். அதற்குள் அந்த உருவம் என்னைப் பிடித்துக் குலுக்கியது; "எழுந்திரு! நான் சொன்னது உன் காதில் விழவில்லையா?" என்று அதட்டியது.

"நீ யார்?" என்று கேட்டேன்.

"எனக்கு இப்போது பேரும் கிடையாது, ஊரும் கிடையாது. நான் முன்பு ஒரு மனிதனாக இருந்தேன். ஆனால் இப்போது பேய். அப்போது இரக்கமற்ற அரக்கன். ஆனால் இப்போது கருணை நிறைந்தவன். என் உடல் நடுங்குவதைப் பார். பற்கள்கூட நடுங்குகின்றன. நடுங்குவதற்குக் காரணம் இரவு நேரத்தின்—முடிவில்லாத இரவு நேரத்தின்—குளிரன்று; கொடுமை. இரவின் கொடுமை! அதை என்னால் சகிக்க முடியவில்லை. நீ எப்படி நிம்மதியாகத் தூங்குகின்றாய்? என்னால் இவ்வுலகின் துன்பக் குரலைக் கேட்டு வாளாயிருக்க முடியவில்லை; துன்பக் காட்சிகளைக் கண்டு சகிக்க முடியவில்லை; நீயும் எழுந்திரு! என்னோடு வா. சவக் குழிகளையெல்லாம் திறந்து காட்டுகிறேன். அக் குழிகளில் காணப்படும் சோகக் காட்சிகளை நீயும் பார்! பார்!" என்றது அந்த உருவம்.

அம்மாய உருவம் என்னை இன்னும் பிடித்துக் கொண்டிருந்தது.

இறந்தவர்கள் எல்லோருடைய சவக் குழிகளும் திறந்தன! குழிகளுக்குள் ஒளி வீசியது. ஆகவே குழிகளின் அடிவரையில் நன்றாகப் பார்க்க முடிந்தது. துணிகளால் மூடப்பெற்ற புழுக்கள்; புழுக்களின் மத்தியிலே பிணங்கள் அமைதியான தூக்கத்தில் ஆழ்ந்திருந்தன. ஆனால் எல்லாப் பிணங்களும் அவ்வாறு ஆழ்ந்து தூங்கிக் கொண்டிருக்கவில்லை. உண்மையில் அமைதியாகக் கிடந்தவை ஒரு சிலவே. ஆயிரக்கணக்கான பிணங்கள் குழிகளுக்குள் போராடிக் கொண்டிருந்தன. எண்ணற்ற குழிகளிலிருந்து கோடித் துணியின் மடமடப்பு ஓசையும் கழற்றாமல் விட்டிருந்த

அணிகலன்கள் அசையும் ஓசையும் வந்தன. அமைதி நில விய குழிகளிலும் பிணங்கள் எந்த வாக்கில் புதைக்கப்பட் டனவோ அந்த நிலையிலேயே கிடக்கவில்லை. நிலைமாறி தாறு மாருகக் கிடந்தன.

மறுபடியும் அம்மாய உருவம், "பார்த்தாயா, இது எவ்வளவு கொடிய காட்சி!" என்றது. ஏதாவது பதில் சொல்லலாம் என்று பேச வாயெடுத்தேன். அதற்குள் அவ் வுருவம் என்னைத் தன் பிடியிலிருந்து விட்டு விட்டது. ஒளி மறைந்தது; குழிகள் மூடிவிட்டன. ஆனால், "ஓ! கட வுளே! இது பெரிதும் இரங்கத் தக்க காட்சியாக இல் லையா?" என்று பல சோகக் குரல்கள் மீண்டும் கேட்டன.

இத்தகைய விசித்திரக் காட்சிகள் என் கனவில் தோன்றி பயப்படுத்தின. விழித்தபின்பும் அப்பயம் நீங்குவ தாயில்லை. என் சப்த நாடிகளும் ஒடுங்கிவிட்டன; நரம்பு களெல்லாம் கட்டுவிட்டுத் தளர்ந்து போயின. துன்பம்! துன்பம்! மீளாத துன்பம்! எழுந்து நடமாடத் துணி வில்லை! வீட்டைவிட்டு வெளியே செல்லத் தைரியமில்லை. என் நோயைப்பற்றி அறிந்தவர்களை விட்டு அப்பால் எப்ப டிச் செல்லுவேன்! பாழாய்ப்போன பயம் குறுக்கிட்டதே! வெளியே சென்ற சமயத்தில் சன்னி கண்டு படுத்துவிட் டால் என்னைக் காணும் புதியவர்கள் நான் இருக்கும் நிலையைப் பார்த்து இறந்துவிட்டதாக எண்ணி என்னைப் புதைத்துவிட நேரிடுமே!

என் வியாதியின் போக்கைத் தெரிந்தவர்கள்கூட, என் நண்பர்களுமே, எனக்கு அதிக நேரம் சன்னி கண்டு நான் மயக்கத்தில் கிடக்கும்போது, மீண்டும் உணர்ச்சி வராது என்று எண்ணி என்னைப் புதைத்துவிடக் கூடுமே! இந்தப் பயம் என்னை வாட்டியது; வதைத்தது; சித்திர வதை செய்தது. அப்படியெல்லாம் ஒன்றும் நேர்ந்துவிடா தென்று தைரியம் சொன்னார்கள் என்னைச் சார்ந்தவர்கள். நண்பர்கள் மீண்டும் மீண்டும் வாக்குறுதி அளித்தனர்.

அப்பவும் எனக்குச் சமாதானமில்லை. உடல் அழுகிப்போய் பாதுகாத்து வைக்க முடியாத நிலை ஏற்பட்டால் ஒழிய என்னை எக் காரணத்தை முன்னிட்டும் புதைக்கக்கூடாது என்று ஆண்டவன்மேல் ஆணையிட்டுச் சொல்லும்படி கேட்டேன். அப்படியே ஆணையிட்டனர். எனினும் என் பயம் குறையவில்லை. மனம் சமாதானம் அடையவில்லை ஆகவே முன்னெச்சரிக்கையாகப் பல ஏற்பாடுகளைச் செய்து கொண்டேன். குடும்பக் கல்லறையை உள்ளிருந்தே திறக்கும்படியாகக் கதவு வைத்து மாற்றிக் கட்டினேன். லேசாக அழுத்தினாலே கதவுகள் திறக்கும்படியான நீண்ட நெம்புகோல் ஒன்றை அதனுள் பொருத்தினேன். கல்லறைக்குள் காற்றும் வெளிச்சமும் தாராளமாக வரத்தக்க வசதிகளைச் செய்தேன். சவப் பெட்டிக்குப் பக்கத்தில் தண்ணீரும் உணவும் வைத்தேன். சவப் பெட்டியையும் புது விதமாக மாற்றியமைத்தேன். கீல்களில் ஸ்பிருங்குகள் வைத்து இணைத்தேன்; உடல் சற்றுக் குலுங்கினால்கூட மூடி திறந்துவிடும்படியான அமைப்புக்களைச் செய்தேன். இவ்வளவு ஏற்பாடுகளும் போதாதென்று நிலவறைக் கூரையில் ஒரு பெரிய மணியைத் தொங்கவிட்டு அம் மணியை ஒரு கயிற்றால் கட்டி அக் கயிற்றைச் சவப்பெட்டித் துவாரம் வழியாக உள்ளே கொண்டு சென்று சவத்தின் கையில் அதைக் கட்டும்படியான ஏற்பாடும் செய்தேன். சவப்பெட்டி உடலை உறுத்தாமல் இருக்க அதன் அடியில் மெத்தை விரித்தேன். இவ்வளவும் எதற்கென்றால், என்னை உயிர் இருக்கும்போதே புதைத்துவிட்டால்கூட ஆபத்தில்லாமல் மீளமுடியுமல்லவா!

ஆனால், விதியின் மாபெரும் வலிமைக்கு முன் மனிதனின் முன்னேற்பாடுகள் எம்மாத்திரம்! எவ்வளவுதான் திட்டமிட்டு இத்தகைய முன்னேற்பாடுகளை அமைத்தும் உயிரோடு புதைத்தல் சம்பந்தமான கொடிய துன்பங்களை வராமல் தடுக்கமுடியவில்லை.

ஒரு நாள் சன்னிகண்டு எவ்வளவு நேரம் மயக்கத்தோடு இருந்தேனே தெரியவில்லை. சன்னிவிட்டு சுய உணர்வு கொஞ்சம் கொஞ்சமாக வரத்தொடங்கியது. உடம்பெல்லாம் வலித்தது. சிறிது நேரம் ஒன்றும் இல்லை. பின்னர் காதுகளில் ஏதோ ஒலித்தன. மீண்டும் சிறிது நேரம் ஒன்றும் இல்லை. பின்னர் உடம்பை ஏதோ உறுத்துவது போன்ற உணர்வு ஏற்பட்டது. மறுபடியும் அமைதி. எழுந்திருக்கலாம் என்று எண்ணினேன். ஆனால் அதற்குள் மறுபடியும் மயக்கம் வந்துவிட்டது. கொஞ்சநேரம் கழித்துத் திடீரென்று மயக்கம் தெளிந்தது. கண்ணிமைகளை அசைத்தேன். பயங்கர அதிர்ச்சி. இருதயம் படபடத்தது. ஞாபகசக்தி வந்தது. என் நிலையை உணர முடிந்தது. வெறும் தூக்கத்திலிருந்து விழிக்கவில்லை ; சன்னி நின்று உணர்வு பெற்றுள்ளேன் என்பதைப் புரிந்து கொண்டேன். எனினும் எழுந்திருக்க முடியவில்லை. வழக்கமான பயம் ஆட்கொண்டது. கண்களைத் திறக்க மனம் துணியவில்லை. கடைசியில் எப்படியோ தைரியத்தை வருந்தி வரவழைத்துக் கொண்டு கண்களைத் திறந்தேன். எங்கும் ஒரே இருள் மயமாக இருந்தது. சன்னி நீங்கிவிட்டது தெரியும் ; மயக்கம் தெளிந்துவிட்டதும் தெரியும். புலனறிவு பெற்றுவிட்டேன் என்பதும் தெரியும். எனினும் ஒரே இருள்மயமாக இருந்தது !

கூச்சல்போட முயன்றேன். ஆனால் நாக்கு வரண்டு கிடந்ததால் சப்தமே வரவில்லை. நெஞ்சின்மேல் பெரும் பாரம் அழுத்திக்கொண்டிருப்பதாகத் தோன்றியது. மூச்சுத் தடுமாறியது. தாடைகளை அசைக்க முடியவில்லை. இறந்தவர்களின் தலையைக் கட்டியிருப்பதுபோல் என் தாடைகளும் கட்டப்பட்டிருந்தன. நான் கெட்டியான பொருளின்மேல் படுத்திருப்பதாகத் தோன்றியது. என் உடம்பின் இரு பக்கங்களிலும் அத்தகைய கடினபொருளே நெருக்கிக்கொண்டிருப்பதாகவும் தோன்றியது. உடம்பு

உறுத்தியது. இதுவரையில் கைகால்களை அசைக்கவே யில்லை. கை வலித்ததேயென்று வேகமாக உதறினேன். மரம் போன்ற ஒருவகைப் பொருளின்மேல் கைபட்டது. அடியிலும் இருபக்கங்களிலும் உடலை உறுத்தக்கூடிய மரம்போன்ற கடினமான பொருள்; மேலேயும் ஆரங்குல உயரத்தில் அத்தகைய பொருள். ஆகவே நானிருந்த இடம் சவப்பெட்டியே என முடிவு செய்தேன்.

என் பொல்லாத விதியை நினைத்து வருந்தினேன். நான் செய்து வைத்திருந்த முன்னேற்பாடுகள் நினைவுக்கு வந்தன. நம்பிக்கை பிறந்தது. உடலை நெளித்து மூடியைத் திறக்க முயன்றேன். மூடி திறக்கவில்லை. ஏமாற்றம். சடுதியில் கூரையில் தொங்கும் மணியையாவது அடிக்கலாம் என்று கயிறைத் தேடினேன். மணிக்கட்டைத் தொட்டுப் பார்த்தேன். கயிறு காணப்படவில்லை. மீண்டும் ஏமாற்றம். வந்த நம்பிக்கையும் மெல்ல நழுவத் தொடங்கியது. சவப் பெட்டியில் விரித்திருந்த மெத்தையையும் காண வில்லை. கொஞ்சநஞ்சம் இருந்த நம்பிக்கையும் போய் விட்டது. ஈர மண் வாசனை என் மூக்கைத் துளைத்தது. நடந்ததை ஒருவாறு யூகித்து அறிய முடிந்தது. நானிருந்த இடம் ஏற்கெனவே முன்னேற்பாடோடு தயாரித்து வைத் திருந்த சவப்பெட்டியல்ல என்பதைப் புரிந்து கொண்டேன். நான் வீட்டை விட்டு வெளியே சென்றிருந்த சமயத்தில் சன்னி கண்டிருந்திருக்கும். உணர்வற்றுப்போய் செத்த பிணம்போல் படுத்துக்கிடந்திருப்பேன். என்னைக் கண்ட வழிப் போக்கர்கள் பரிதாபப்பட்டு அனாதைப் பிணத்தை அடக்கம் செய்ய வேண்டியது தங்கள் கடமை என்று கருதிக் கைக்குக் கிடைத்த சவப் பெட்டியில் என்னைப் போட்டு மூடி ஊரும் பேரும் இல்லாத சவக்குழி ஒன்றில் ஆழமாகப் புதைத்திருப்பர் என்று எண்ணினேன்.

ஐயோ! உயிரோடு புதைத்துவிட்டார்களே! என் செய்வேன் ஆண்டவனே! என்று வருந்தினேன். வழிப்

போக்கர்களின் கவனத்வையாவது கவர்ந்து பார்க்கலாம் என்று எண்ணிக் கூச்சல்போட மீண்டும் போராடினேன். எப்படியோ இந்தத் தடவை வெற்றிபெற்றேன். 'கீச்' என்று கூச்சலிட்டேன்.

"என்ன சப்தமடா இது! எங்கிருந்து வந்தது?" என்றது ஒரு குரல்.

"எதுவாயிருந்தால்தான் நமக்கென்ன" என்றது மற்றொரு குரல்.

"அதை இழுத்து வெளியே தள்ளுங்கள்!" என்றது மூன்றும் குரல்.

"என் இப்படிப் பூனை மாதிரி கத்தறே!" என்றது நான்காம் குரல்.

அப்போது என்னைச் சில முரடர்கள் பிடித்துக் குலுக்கினர்கள். குலுக்கின வேகத்தில் நினைவு தானுக வந்து விட்டது. என்னை இழுத்து வெளியே விட்டனர்.

இச்சம்பவம் வர்ஜீனியாவின் தலைநகரான ரிச்மண்டிற்குப் பக்கத்தில் நடந்தது. நானும் என் நண்பர் ஒருவரும் ஜேம்ஸ் ஆற்றங்கரையோரமாக உள்ள காட்டிற்கு வேட்டையாடச் சென்றோம். இருட்டி விட்டது. திடீரென்று கடும்புயலும் மழையும் வந்து விட்டது. பக்கத்திலிருந்த நங்கூரம் பாய்ச்சிய சிறு படகுக்குள் சென்று ஒதுங்கிக் கொண்டோம். வேறு வழியின்றி இரவை அதற்குள்ளேயே கழித்தோம். படகோ மிகச் சிறியது. 60 அல்லது 70 டன் சரக்கு மட்டும் ஏற்றிச் செல்லக் கூடியதென்றல் அது எவ்வளவு சிறிய படகு என்று சொல்லவும் வேண்டுமோ? படகின் இரு முனைகளிலும் கோழிக்கூடு போன்றிருந்த பொந்துகளில் முடங்கிக்கொண்டோம். வேட்டையாடின களைப்பிலை தூக்கம் சீக்கிரத்தில் வந்து விட்டது. நான் படுத்திருந்த பொந்தின் அகலம் 18 அங்குலந்தான். வெகு சிரமப்பட்டுத்தான் உள்ளுக்குள் நுழைய முடிந்தது.

நிம்மதியாகத் தூங்கினேன், விடிந்த பின்புதான் தூக்கம் கலைந்தது. எனினும் உடனே எழுந்திருக்க முடியவில்லை. கண்ணை மூடிக் கொண்டே படுத்திருந்தேன். சோர்வாக இருந்தது. பசி மயக்கமும்கூட. அப்போது உணர்ந்த உணர்ச்சிகளும் எண்ணிய எண்ணங்களுமே நான் மேற்கூறிய அத்தனை செய்திகளும்! என்னைப் பிடித்துக் குலுக்கியவர்கள் பாரம் இறக்க வந்த ஆட்கள். தூங்குவதற்கு முன் நான் தலையில் கட்டிக்கொண்டிருந்த பட்டுக் கைக்குட்டைத் துணியால்தான் என் தாடையைச் சுற்றிக் கட்டப்பட்டிருந்தது.

நான் அப்படகில் மாட்டிக்கொண்டு அனுபவித்த துன்பங்கள் உயிரோடு புதைக்கப்பட்டவன் படும் பாட்டிற்கு எவ்வகையிலும் குறைந்ததல்ல. நான் பட்ட பாடு பெரும்பாடு என்பதில் எள்ளளவும் சந்தேகமில்லை. எல்லாம் நன்மைக்கே என்பதுபோல் நான் பட்ட துன்பத்திலும் ஒரு நன்மை யிருந்தது. என்னை வெகு நாட்களாக வாட்டி வந்த வீண் பிரமை நீங்கி விட்டது. மனம் அமைதி பெற்றது.

மனிதன் துன்பத்தை எதிர்நோக்கும்போது அஞ்சுகின்றான். துன்பத்தை எப்படித் தாங்குவது! துன்பம் எத்தகையதோ! எவ்வளவு கொடியதோ! என்ற எண்ணமே அந்த அச்சத்திற்குக் காரணமாகும். எதிர்பார்த்த துன்பம் நேரும்போது இயல்பாகவே அத்துன்பத்தைத் தாங்கிவிடுகிறான். அப்போது உணர்கின்றான். "பூ இவ்வளவுதானா? இதற்கா நான் அப்படிப் பயந்தேன்!" என்று. இது உலக இயற்கை.

இதே போலத்தான் என்னுடைய சந்தர்ப்பமும். உயிரோடு புதைத்துவிடுவார்களோ என்று ஐயுற்றேன். அந்த ஐயத்தினால் பயங்கர எண்ணங்கள் எழுந்தன. வரப்போகும் துன்பத்தை எப்படித் தாங்குவது என்று அஞ்சினேன். அதே ஒரு கவலையாக மாறிவிட்டது. வீண் பிரமை தீராத

வினையாக இருந்து வந்தது. படகில் பட்ட சிறு அனுபவம் என் பயத்தைப் போக்கி விட்டது. துணிவு பிறந்தது. வெளியூர்களுக்குச் சென்றேன். உடற்பயிற்சிகள் செய்தேன். சாவைப்பற்றிச் சிந்திப்பதை விட்டு விட்டேன். என்னிடமிருந்த மருத்துவ நூல்களை, கனவு நூல்களை கனலுக்கு இரையாக்கினேன். பயமுண்டாக்கும் கற்பனைக் கதைகள் படிப்பதை விட்டு விட்டேன். கல்லறைகளைப் பற்றிய கற்பனைகள் ஒழிந்தன. சுருங்கக்கூறின் மறு வாழ்வு பெற்றேன்! புது மனிதனானேன்.

மறக்க முடியாத அவ்விரவு முதல் சவக்குழி பற்றிய அச்சங்கள் அகன்று விட்டன. அவைகளோடு அவைகளின் விளைவான மூடுசன்னி நோயும் தொலைந்துவிட்டது.

நாம் வாழும் பூவுலகமே பொல்லாத நரகம் போன்றது என்று தோன்றக்கூடிய சந்தர்ப்பங்களும் ஏற்படுவதுண்டு. அந்நரகத்தின் பயங்கரக் குகைகள் ஒவ்வொன்றையும் தைரியமாகத் துருவி ஆராயும் ஆற்றல் மனிதனுடைய கற்பனைக்குக் கிடையாது. சாவு பற்றிய பயங்கள் யாவும் வெறும் கற்பனையே என்று முடிவாகக் கூறவும் முடியாது. எனினும் அவைகளை அடக்கி விடவேண்டும். இல்லையேல் அவைகள் நம்மை அடக்கி அழித்துவிடும்.

# அஷர் இல்லம்

இலையுதிர் காலத்தில் ஒரு நாள் மப்பும் மந்தாரமுமாயிருந்தது. கார் மேகங்கள் கதிரவனின் கிரணங்களை மறைத்து விட்டன. எங்கும் ஒரே நிசப்தம். நாட்டுப்புற ஒற்றையடிப் பாதையிலே தன்னந்தனியனாய் குதிரைமேல் போய்க் கொண்டிருந்தேன்: மாலை நேரமும் வந்து விட்டது. கடைசியாகக் களையற்ற 'அஷர் இல்லம்' என் கண்களுக்குப் பட்டது. சேரவேண்டிய இடத்தை நெருங்கி விட்டேன். ஆனால் ஏனோ தெரியவில்லை! கட்டிடம் என் கண்களுக்குப் பட்டதுமே என் உள்ளத்தைத் தாங்க முடியாத ஒருவகைச் சோகவுணர்ச்சி பற்றிக்கொண்டது. தாங்க முடியாதது என்றேன். ஆம்! உண்மையிலேயே தாங்க முடியாததுதான். ஏனெனில் பொட்டல் காட்டின் கொடிய இயற்கைத் தோற்றத்தைக் காணும் போது வழக்கமாக ஏற்படக்கூடிய சிறிதளவு மகிழ்ச்சி கலந்த மனக்கிளர்ச்சிகூட அவ்வுணர்ச்சிக்கு விடுதலை அளிக்க முடியவில்லை.

என் முன்னிருந்த காட்சியை மீண்டும் நோக்கினேன். வீட்டையும் வீட்டின் இயற்கைச் சூழலையும் நோக்கினேன். மங்கிய சுவர்களையும் வெறிச்சென்றிருந்த சாளரங்களையும் வீட்டைச் சுற்றிய தரையில் அங்குமிங்கும் படர்ந்திருந்த கோரைப்புல்களையும் பட்டுப்போன மரங்களையும் கண்டேன். பயங்கரமாக இருந்தது. மனம் புழுங்கியது; குலை நடுங்கியது. இருதயம் நின்றுவிடும்போல் தோன்றியது. சப்த நாடிகளும் ஒடுங்கி விட்டன. ஏன்? * சற்று எண்ணிப் பார்த்தேன். ஆழ்ந்து சிந்தித்தேன். எண்ணற்ற

---

*நான் பயப்படும்படியாக அவ்வீட்டில் என்ன இருந்தது? புரியாத புதிர்!

கற்பனைகள் அலையலையாக எழுந்தன. இறுதியில் ஒரு உண்மை புலனாயிற்று. சர்வசாதாரணமான இயற்கைக் காட்சிகூட சில சமயங்களில் மனிதனைப் பயப்படுத்தக் கூடிய ஆற்றல் பெற்றதாய் உள்ளது. இயற்கையின் ஆற்றல் நம் அறிவிற்கு அப்பாற்பட்டதாக இருந்து வருகிறது. காட்சியில் சேர்ந்துள்ள பொருள்களின் வரிசை வேறு விதமாக இருந்தாலே துன்ப உணர்வளிக்கும் ஆற்றல் அதற்கு இல்லாமல் போகக் கூடும்.

இவ்வாறாக எண்ணிக் கொண்டே வீட்டின் முன்புறத்தில் இருந்த அகழியின் செங்குத்தான கரையோரத்தில் குதிரையை நிறுத்தினேன். குதிரையின்மேல் வீற்றிருந்தபடியே அவ்வகழியின்பால் பார்வையைச் செலுத்தினேன்.

அகழின் நீர் பசுமையாய் இருந்தது. நீர் சலனமற்று இருந்தது. மங்கிய சுவர்கள்—வெறிச்சென்றிருந்த சாளரங்கள்—கோரைப்புல்கள்—பட்டுப்போன மரங்கள்—ஆகியவைகளின் தலைகீழான தோற்றத்தைக் கண்டேன். முன்னைவிட அதிகமாக அச்சப்பட்டேன். உடல் நடுங்கியது. மெய் சிலிர்த்தது.

எனினும் அச்சம்தரும் அஷர் இல்லத்தில் சில வாரங்கள் தாற்காலிகமாகத் தங்கியிருந்து செல்லவே தீர்மானித்தேன். அஷர் இல்லத்தின் உரிமையாளரான ரோடரிக் அஷர் என் பாலிய நண்பர். வெகு காலமாக நாங்கள் சந்திக்கவேயில்லை. அவர் இருந்த இடமோ வெகு தொலைவு. சந்திக்கும் வாய்ப்பு ஏற்படவே இல்லை. சமீபத்தில்தான் அவரிடமிருந்து எனக்கு ஒரு கடிதம் வந்தது. நீண்ட நாளாகச் சந்திக்காத நண்பர்—பாலியத் தோழரிடமிருந்து வந்த கடிதமல்லவா? வெகு ஆர்வத்தோடு பிரித்தேன் அக்கடிதத்தை. ஆர்வம் சோர்வாக மாறியது. அக்கடிதத்தில் எழுதியிருந்த செய்தி என்னைக் கலங்கச் செய்தது. தாம் தாங்கமுடியாத மனநோயால் வருந்திக்கொண்டிருப்பதாகவும் என்னை நேரில் பார்க்கப் பெரிதும் ஆவலாக

இருப்பதாகவும் அவர் அக்கடிதத்தில் எழுதியிருந்தார். என்னைக் கண்டாலாவது வேதனை சற்றுக் குறையாதா என்று ஏங்கியது அவர் மனம்.

சுவர்க்க போகங்களிலே திளைத்திருந்த—இன்பக்கடலிலே மிதந்திருந்த—புகழின் உச்சியிலே தவழ்ந்துகொண்டிருந்த அஷருக்கா இக்கதி! நினைத்துக்கூடப் பார்க்க முடியவில்லை. அவருடைய நிலையைக் கண்டு உள்ளம் உருகியது. சிறிதும் தயங்காமல் அவரது ஆவலை நிறைவேற்ற முடிவு செய்தேன். அம்முடிவே என்னை இந்த இடத்திற்கு அழைத்து வந்து சேர்த்தது.

* * *

நானும் அஷரும் சிறுவர்களாயிருக்கும் போது நெருங்கிய தோழர்களாய் இருந்தும் அவரைப்பற்றி நான் அதிகமாகத் தெரிந்து கொள்ளவில்லை. அஷர் ஒரு சங்கோசப் பேர்வழி; அடக்க ஒடுக்கமானவர். ஆகவே அவரைப்பற்றி நான் அதிகமாகத் தெரிந்துகொள்ளாததில் வியப்பொன்றும் இல்லை. எனினும் அவருடைய குடும்பத்தைப் பற்றி ஓரளவு தெரிந்திருந்தேன். அவருடைய குடும்பம் மிகப் பழமையானது. வாழையடி வாழையாக அக்குடும்பத்தில் தோன்றியவர்கள் கலைச் செல்வங்களைச் சேகரம் செய்வதற்குப் பெயர் பெற்றவர்கள்; ஈகையில் இணையற்றவர்கள்; இசையார்வம் மிக்கவர்கள். எனினும் அஷர் குடும்பம் கிளைக்கவில்லை. தந்தைக்கு மகன்; மகனுக்கு மகன் என்ற நேரடியான வழிமுறை ஏற்பட்டதேயன்றிக் கிளைத்து விரிவாகப் பரவவில்லை. அக்குடும்பத்தில் பனைமரம் போன்ற நெடிய வளர்ச்சி யிருந்ததேயன்றி ஆலமரம் போன்ற பரவிய வளர்ச்சியில்லை. இது அக்குடும்பத்தின் பெருங்குறை. இக்குறைக்குப் பொருந்தியதாகத்தான் இருந்தது, வெறிச்சென்றிருந்த வீட்டின் சுற்றுப்புறமும், இக்குறையினால்தான் அக்குடும்பத்தின் தொடக்கப் பெயர்—"அஷர் இல்லம்"—அன்று முதல்

இன்று வரை மாறுமல் நிலைத்து வந்தது போலும். " அஷர் இல்லம் " என்ற பெயர் குடும்பத்தின் பெயராக மட்டுமில்லாமல் அக்குடும்பத்தவர் வழிமுறை வழிமுறையாக வாழ்ந்துவந்த மாளிகையின் பெயராகவும் திகழ்ந்தது.

அகழியை நான் நோக்கினதால் முதலிலே தோன்றிய சோக உணர்ச்சி மிகுந்ததுதான் நான் கண்ட பயன் ! என் எனக்கு இவ்வளவு மூட நம்பிக்கை என்று எண்ணினேன். அவ்வாறு எண்ணியதால் மூடநம்பிக்கை வளர்ந்ததே தவிர நலியவில்லை. இம்முரண்பாடு அச்சத்தை அடிப்படையாகக் கொண்ட உணர்ச்சிகளுக்கே இயல்பு போலும் !

அகழிநீரில் தோன்றிய பிரதி பிம்பங்களில் லயித்திருந்த பார்வையைக் கட்டிடத்தின்பால் திருப்பினேன். மீண்டும் ஒருவகையான பயங்கர உணர்ச்சி. பொருத்தமற்ற கற்பனை! அச்சமெனும் குழவி அர்த்தமற்ற கற்பனையென்பதில் சந்தேகமேயில்லை. பயங்கர உணர்ச்சியிலே எழுந்தது விபரீதக் கற்பனை. அது மட்டரகமான கற்பனையெனினும் பயங்கர உணர்ச்சியின் போக்கு எத்தகையது என்பதைக் காட்டுவதற்காக அதைக் குறிப்பிடுகிறேன். தலையை நிமிர்த்திக் கட்டிடத்தைப் பார்த்தேன். "அப்போது நான் அங்குப் பார்த்ததென்ன ? உணர்ந்ததென்ன ? பட்டுப்போன மரங்கள், மாசி படர்ந்த சுவர்கள், தூங்கும் அகழி இவற்றைப் பார்த்தேன். இவற்றிலிருந்து கிளம்பிய ஒரு மர்மமான விஷக்காற்று அப்பெரிய கட்டிடத்தையும் அதன் சுற்றுப்புறங்களையும் மந்தமான, மந்தாரமான புகைப்படலம் போல் சூழ்ந்திருந்ததை அருவருப்புடன் உணர்ந்தேன்."

உள்ளத்தில் குமுறியெழுந்த அதிசயக் கற்பனைப் புயலை அடக்கி நிறுத்தி விட்டுக் கட்டிடத்தின் உண்மையான இயல்பைக் கண்டறிய முற்பட்டேன். கட்டிடம் மிக மிகப் பழையது. காலப்போக்கினுல் ஏற்படும் பல வகை மாறுதல்களும் அதில் தெளிவாகக் காணப்பட்டன.

சுவர்களின் வெளிப்புறத்தில் பூஞ்சைக் காளான் பூத்திருந்தது ; தாழ்வாரங்களில் குலைகுலையாகத் தொங்கிக்கொண்டிருந்தது. கட்டிடம் பாழடைந்திருந்த போதிலும் இடியவில்லை. கற்கள் பொறிந்து சிதைந்திருந்தும் கட்டிடம் இடிந்து விழாமல் அப்படியே இருந்தது ஆச்சரியந்தான்! நிலவறையில் கிடத்திய மரப்பெட்டி காலப்போக்கில் உளுத்துப் போனாலும் வெளிக்காற்று உள்ளே புகாத காரணத்தால் ஆடாமல் அசையாமல் அப்படியே உருக்குலையாமல் இருப்பதுபோல் இருந்தது. கட்டுமானம் பொதுவாக உறுதி குலையாமல் இருந்தது. ஆயினும் உற்றுக் கவனித்ததின் பேரில் கட்டிடத்தின் முன்புறத்தில் உச்சியிலிருந்து அடிவரையில் வெடிப்பு ஒன்று ஓடியது தெரியவந்தது.

இவ்வாறாகக் கட்டிடத்தின் நிலையைக் கவனித்துக் கொண்டே கட்டிடத்தை அடைந்து விட்டேன். வெளியே காத்திருந்த வேலைக்காரன் குதிரையை வாங்கிக் கொண்டான். காத்தியக் கட்டிடக் கலை நடையைத் தழுவி வில் வடிவாகக் கட்டப்பட்டிருந்த தலைவாயில் வழி உள் நுழைந்தேன்.

உள்ளிருந்த ஏவலாள் இருண்ட பல சிக்குமுக்கான வழிகளின் மூலம் தன் எஜமான் இருந்த அறையை நோக்கி என்னை அழைத்துச் சென்றான். போகும் வழியில் எத்தனையோ பொருள்கள் எதிர்ப்பட்டன. ஏனோ தெரியவில்லை! நான் கண்ட அனைத்தும் ஏற்கெனவே இருந்த அச்ச உணர்ச்சிகளைப் பெருக்கின. மச்சின் அடிப்புறத்தில் காணப்பட்ட சித்திரச் செதுக்கு வேலைகள்—சுவர்களில் இட்டப்பட்டிருந்த மங்கிய ஓவியங்கள்—தரையில் பதித்திருந்த கருங்காலிமரப் பலகை—மருட்சியூட்டும் போர் வெற்றிச் சின்னங்கள்—முதலிய பொருள்களே எதிர்ப்பட்டவை. அவைகள் எனக்குப் புதியவை அல்ல. குழந்தைப் பருவமுதல் நன்கு பழக்கப்பட்டவைகளே.

அப்படியிருந்தும் அவைகள் என் மனத்தில் பயத்தை உண்டாக்கியதைக் கண்டு வியந்தேன். சாதாரணப் பொருள்களும் காட்சிகளுங்கூட அசாதாரண உணர்ச்சிகளை உண்டாகக்கூடிய ஆற்றல் பெற்றுள்ளனவே!

ஒரு படிக்கட்டில் குடும்ப மருத்துவனைக் கண்டேன். அவன் மட்டரகமான ஆசாமியாகத் தோன்றினான். அவன் கள்ளப் பார்வையும் முகத் தோற்றமும் அவன் ஒரு வஞ்சகன் என்பதைப் பறைசாற்றின. அவன் தடுமாற்றத்தோடு, "வாருங்கள்!" என்று முகமன் கூறிவிட்டு அப்பால் சென்று விட்டான்.

பல படிக்கட்டுக்களையும் கடந்து இல்லத் தலைவரின் அறையை அடைந்தோம். பணியாள் அறையின் கதவைத் திறந்து என்னை உள்ளே அனுப்பினான்.

அவ்வறை மிகப் பெரியது; அதிக உயரமுடையது; சாளரங்களெல்லாம் அதிக உயரமானவை; ஆனால் அகலம் குறைந்தவை; கூர்முனையான தலைப்புறம்; சாளரங்கள் யாவும் உயரத்தில் பொருத்தப்பட்டிருந்தன. அவைகளின் கதவுகள் யாவும் கண்ணாடிக் கதவுகள். கீழ்த்தளம் கருநிறக் கருங்காலி மரப்பலகைகளால் மேவப்பட்டிருந்தது. கண்ணாடிக் கதவுகள் வழியாக உள்ளே ஓரளவு வெளிச்சம் வந்தபோதிலும் அறையின் அடுத்த கோடியிலுள்ள பொருள்கள் சரியாகத் தெரியவில்லை. கமான் போன்ற வில் வளைவான மேல் தளத்தில் செதுக்கியிருந்த சித்திரங்களும் சரியாகத் தெரியவில்லை. சுவர்களில் கருந்திரைச் சீலைகள் தொங்கிக் கொண்டிருந்தன. அறையில் ஏராளமான தட்டுமுட்டுச் சாமான்கள் கிடந்தன. பெரும்பான்மையானவை உடைந்து போயிருந்தன. அங்குமிங்கும் பல புத்தகங்களும் இசைக்கருவிகளும் சிதறிக் கிடந்தன. அறைக்குள் உயிர்க்களையே இல்லை; சோகத்தின் சாயல் படர்ந்திருந்தது.

நான் உள்ளே நுழையும்போது அஷர் ஒரு சோபாவில் கால்களை நீட்டிப் படுத்துக் கொண்டிருந்தார். என்னைக்

கண்டதும் சோபாவை விட்டு எழுந்து வந்து அளவுகடந்த ஆர்வத்தோடு வரவேற்ருர். பெரிய மனிதர்களுக்கே இயல்பான, வலிய வரவழைத்துக் கொண்ட ஆர்வத்தோடல்ல; உண்மையான ஆர்வத்தோடுதான். இருவரும் இருக்கைகளில் அமர்ந்தோம். சில நிமிட நேரம் இருவருமே ஒன்றும் பேசவில்லை. நிசப்தம் நிலவியது. அவருடைய முகத்தைப் பரிதாபத்தோடும் பயத்தோடும் ஏறிட்டுப் பார்த்தேன்.

ராட்ரிக் அஷர் அடியோடு மாறி இருந்தார். அடையாளம் தெரிந்துகொள்ள முடியாத அளவுக்கு மாறியிருந்தார். முதலில் எனக்கே சந்தேகந்தான், என் முன் உட்கார்ந்திருந்தவர் என் பாலிய நண்பர் ராடரிக் அஷர்தானு வென்று. அவர் பழைய முகத்தோற்றம் என் கண்முன் வந்து நின்றது. வெளுத்த முகம்; ஒளி தவழும் பெரிய கண்கள்; அழகாக வளைந்த மென்மையான இதழ்கள்; எபிரேயர்களின் மூக்கைப் போன்ற மூக்கு; அழகான கன்னங்கள்; பட்டுப் போன்ற மென்மையான தலைமயிர்; அகன்ற நெற்றி—இவைகளெல்லாம் என்றுமே மறக்க முடியாதவைகள். ஆனல் இப்போது இவ்வியல்புகளெல்லாம் உருமாறி யிருந்தன: தலைமயிர் நரைத்து வெண்பட்டுப்போல் தோன்றியது. கண்களில் பழைய பிரகாசம் இல்லை; பயங்கரமாகத் தோன்றின.

அஷர் நடந்துகொண்ட முறையும் முன்னுக்குப் பின் முரணுக இருந்தது. வழக்கமான உடல் நடுக்கத்தைச் சமாளிக்க முற்பட்டதே இம்முரண்பாட்டிற்குக் காரணமாகும். ஆனல் இது நான் ஏற்கனவே எதிர்பார்த்ததுதான். அவர் பேசியபோது முகத்தில் மலர்ச்சியும் சிடுசிடுப்பும் மாறி மாறித் தோன்றின. அவர் குரலிலும் முன்னுக்குப் பின் முரணுன மாறுதல்கள் இருந்தன. கொஞ்ச நேரம் நடுக்கமும் தடுமாற்றமும் காணப்பட்டன; அடுத்து தெளிவும் கம்பீரமும் காணப்பட்டன.

என்னை அழைத்ததின் நோக்கத்தையும் என்னைக்

காலவேண்டு மென்றிருந்த ஆவலையும்பற்றிப் பேசினார். மற்றும் தம் நோயின் தன்மையைப்பற்றியும் பேசினார். நோய் உடல் நோய் மட்டுமன்று; மன நோயுமாகும். உடல் நோயுக்குக் காரணம் நரம்புமண்டலக் கோளாறு. உள நோயுக்குக் காரணம் குடும்பக்கேடு. உடல்நோய் விரைவில் குணமாய்விடுமென்றார். எனினும் அக் கோளாறினால் விபரீதமான உணர்வுகளெல்லாம் ஏற்பட்டனவாம். அவைகளைப்பற்றி அவர் விவரிக்கும்போது திடுக்கிட்டேன். சப்தநாடிகளும் ஒடுங்கி விட்டனவாம். ஐம்புலன்களின் ஆற்றலும் அவிந்து விட்டனவாம். சப்பையான உணவைத் தவிர ருசியான உணவுகளைச் சாப்பிட முடியவில்லையாம்; மெல்லாடைகளைத் தவிர வேறுடைகளை அணிந்தால் உடல் உறுத்துமாம். பூக்களின் வாசனை கிட்ட அண்டவே கூடாதாம். மங்கிய வெளிச்சம்கூடக் கண்களைக் கூசுமாம். தந்தி வாத்தியங்களின் ஓசையைத் தவிர பிற சப்தங்கள் கேட்பதற்குப் பயமாக இருந்தனவாம்.

அர்த்தமற்ற ஒருவகை அச்சத்திற்கு அடிமையாய் விட்டாரே என்று வருந்தினேன். "நான் இந்தப் பரிதாபகரமான நிலையிலேயே இறந்து விடுவேன்; இறந்தே தீருவேன். எதிர்காலத்தில் என்னென்ன நடக்குமோ என்று பயமாக இருக்கிறது. உள்ளத்தைப் பாதிக்கக்கூடிய மிகச் சிறிய சம்பவத்தை நினைத்தால்கூட உடலெல்லாம் நடுங்குகின்றது. பயம்! பயம்! பாழும் பயமேதான் எனக்கு வந்துள்ள பேராபத்து. பயம் ஒன்றைத் தவிர வேறு கொடிய ஆபத்தொன்றும் எனக்குக் கிடையாது. இந்நிலையே நீடிக்குமானால், நான் வாழ்வைத் துறந்து அறிவையும் இழந்து சித்தப் பிரமை ஏற்பட்டுப் பயம் என்னும் கொடிய பூதத்தோடு போராடவேண்டிய காலம் வந்துவிடும் என்று எண்ணுகின்றேன்," என்று முறையிட்டார்.

அவர்விட்ட பெருமூச்சிலிருந்தும் பேசிய தோரணையிலிருந்தும் அவருடைய மனநிலையின் மற்றொரு தன்மையை

யும் அறிய முடிந்தது. அவருக்குத் தாம் வாழ்ந்துவந்த வீட்டைப்பற்றி ஏதோ ஒருவகையான மூட நம்பிக்கை ஏற்பட்டு விட்டது. அதன் காரணமாக அவருடைய துணிவும் ஊக்கமும் அஞ்சாமையும் பஞ்சாகப் பறந்தோடி விட்டன. வீட்டினுடைய அமைப்பும் காலப்போக்கில் மங்கிப்போன சுவர்களும் தூபிகளும் அவைகளைப் பிரதிபலித்த தெளிவற்ற அகழியும் அம் மூடநம்பிக்கையைப் பலப்படுத்தின.

இனம் தெரியாத அவருடைய மனநோயுக்கு இயற்கையான காரணம் ஒன்றும் இருந்தது. அவர் தம் சகோதரியை உயிருக்கு உயிராக நேசித்து வந்தார். அவள் ஒருவளே பல ஆண்டு காலமாக அவருக்குத் துணையாக இருந்து வந்தாள். அவளைத் தவிர வேறு உற்றூர் உறவினர் யாரும் அவருக்குக் கிடையாது. அத்தகைய சகோதரி நீண்ட காலமாகக் கொடிய நோயிக்கு ஆளாகி வந்தாள் என்றுள் அவர் மனம் என்ன பாடுபட்டிருக்கும். சகோதரி துன்பப்பட்டதை அவரால் தாங்க முடியவில்லையாம். அதுவே அவருடைய மனநோயிக்கு அடிப்படையான காரணமாகும்.

"அவள் இறந்துவிட்டால், மிகப் பழமையான அஷர் வமிசத்தின் பேர் சொல்ல இருக்கும் கடைசியாளனுய் நானும் ஆதரவற்ற அநாதையாய் விடுவேன்" என்று வருத்தத்தோடு சொன்னுர். அவர் பேசிய சமயத்தில் மாடலின் (அதுதான் அவருடைய அருமைச் சகோதரியின் பெயர்) நாங்களிருந்த அறை வழியாக அப்பால் சென்றுள். நான் இருந்ததை அவள் கவனிக்கவில்லை. அவளைக் கண்டு நான் பயந்துவிட்டேன். அவள் மறைந்ததும் அஷரின் முகபாவத்தைக் கவனித்தேன். அவர் தம் கண்களைக் கைகளால் மூடிக்கொண்டு அழுதுகொண்டிருந்தார்.

மாடலினின் நோய் டாக்டர்களைத் திகைக்கும்படி செய்தது. உடலிலே உணர்ச்சியில்லை. நாளுக்கு நாள் தேய்ந்து கொண்டே வந்தது. அடிக்கடி உடல் விறைத்து வந்ததாம். புதுமையான அறிகுறிகள் தென்பட்டனவாம். அப்

படி யிருந்தும் தன்னைச் சமாளித்துக்கொண்டு நடமாடிக் கொண்டிருந்தாள். நான் அங்குச் சென்ற மாலை முதல் படுத்த படுக்கையாய் விட்டாள். நாங்கள் பேசிக்கொண் டிருந்தபோது அவள் அவ்வறையின் வழியாகச் சென்ற போது நான் அவளைப் பார்த்தேனல்லவா? அதுவே முதல் தடவையும் கடைசித் தடவையுமாகும். அதற்குப் பின் அவளை உயிரோடு பார்க்கும் பேறு கிடைக்கவில்லை.

பல நாட்கள் அவளைப்பற்றி நாங்கள் இருவரும் பேச வில்லை. நண்பரின் மன நோயுக்கு மாற்றுக்காணும் முயற் சியில் ஈடுபடலாயினேன். மனநோயுக்கு மாற்று மனத்தை ஏதாவதொரு காரியத்தில் லயிக்கும்படி செய்வதுதான். இருவரும் ஒன்ருக ஓவியம் தீட்டினேம்; படித்தோம். அல் லது அவர் வீணை வாசிப்பதை நான் கேட்பேன். இப்படி யாக ஏதாவது ஒரு காரியத்தில் ஈடுபட்ட வண்ணமாய் இருந்தோம். எவ்வளவுக்கு எவ்வளவு நெருங்கிப் பழகி னேனே, அவ்வளவுக்கு அவ்வளவு அவருடைய உள்ளத்தை ஊடுருவிப் பார்க்க முடிந்தது. அவருடைய மன நோயை மாற்ற முயற்சிப்பது வீண் முயற்சி என்பதை உணர்ந் தேன். அவர் மனத்தில் மலர்ச்சியைத் தோற்றுவிப்பது அரிதென்பதை அறிந்தேன். அவருடைய உள்ளமோ துன் பக்கடல்! கடலைத் தூர்க்க யாரால்தான் முடியும்!

நான் தனியாக அவருடன் இருந்து எத்தனையோ மணி நேரத்தைப் போக்கியிருக்கிறேன். எனினும் எத்தகைய படிப்பில் அல்லது வேலையில் என்னை அவர் ஈடுபடுத்தினுர் என்பதை இப்போது சரியாக விளக்கிக் கூறமுடியாது. நாங்கள் ஈடுபட்ட எல்லாக் காரியங்களிலும் பரபரப்பும் குழப்பமும் மேவியிருந்தன. அவருடைய புலம்பலும் ஓயாத ஒப்பாரியும் என் செவிகளில் எப்பொழுதும் ஒலித்துக் கொண்டிருந்தன. இன்னபிற அனுபவங்கள் பலப்பல.

கற்பனைபோன வாக்கில் ஓவியங்களைத் தீட்டினுர். அந்த ஓவியங்களில் அவருடைய மனக் குழப்பமும் மன

நோயின் கொடுமையும் அப்படியே பிரதிபலித்தன. அப் படங்கள் யாவும் கலங்கிய நீரில் காணும் பிரதிபிம்பம் போல் தெளிவற்றிருந்தன. அவைகளைப் பார்த்துப் பயந்து நடுங்கினேன்; திடுக்கிட்டேன். கற்பனைகளும் எழுந்தன.

அப் படங்கள் இயற்கைக் காட்சிகளைச் சித்திரிக்க வில்லை; உலகத்தில் காணக்கூடிய வேறு எப்பொருளையும் சித்திரிக்கவில்லை; ஐம்புலன்களுக்கும் அப்பாற்பட்ட— கண்டு கேட்டு, உண்டு உற்று உணர்ந்து அறியமுடியாத— அருவக் கருத்துக்களைச் சித்திரித்தன.

எப்போதாவது மனிதன் அருவக்கருத்துக்களை— எண்ணங்களை—சித்தரிக்கும் ஓவியம் தீட்டினுன் என்முல் அம்மனிதன் ராடரிக் அஷர்தான். மனநோயால் ஆட் கொள்ளப்பட்ட மனிதன் தனக்குப்பட்ட கருத்துக்களை யும் எண்ணங்களையும் ஓவியமாகத் தீட்டினுன் என்முல் அவ்வோவியங்கள் பார்ப்பவருக்குப் பயத்தை உண்டாக்கா மல் வேறு என்ன செய்யமுடியும்?

சில ஓவியங்கள் முழுக்க முழுக்க வெறும் எண்ணத்தை மட்டும் சித்திரிக்கும் ஓவியங்களாக இல்லாமல் மருள் தோற்றத்தைக் காட்டக்கூடியனவாகவும் இருந்தன. ஆகவே அவைகளில் ஒன்றை விவரித்துக்கூற முற்படுகின் றேன். அது சவங்களை அடக்கம்செய்யும் நீண்டசதுரமான நிலவறையைச் சித்திரித்தது. நிலவறை குகைபோல் வெகு தூரம் நீண்டது. தணிவானது நிலவறை நிலமட்டத்திற் குங்கீழ் அதிக ஆழத்தில் இருப்பதாகச் சித்திரிக்கப்பட் டிருந்தது. வெளிவெளிச்சம் நிலவறைக்குள் செல்ல வழி வகையே கிடையாது. உள்ளே எத்தகைய விளக்கும் இல்லை. எனினும், அடர்ந்த ஒளிக்கதிர்கள் நிலவறைக்குள் பிர காசித்தன. பொருத்தமற்ற பகட்டு!

நான் ஏற்கனவே கூறியபடி அவருக்குச் செவிப்புல நரம்பு தளர்ந்திருந்தமையால் தந்தி இசைக் கருவியின் ஒரு சில பண்களைத் தவிர ஏனைய இசைகளை அவரால் கேட்டுச்

சகிக்கமுடியாது. ஆகவே கிதார் மட்டும் வாசிப்பதில் ஈடு பட்டார். கிதாரை இசைக்கும்போது ஒப்பாரிப் பாடல் பாடினார். அப்பாட்டின் ராகத்திற்கேற்ப கிதாரை இசைத் தார். இசைக்கருவியின் கம்பிகளிலிருந்து பொங்கி எழுந்த சோகத் தொனியும் அவர் உள்ளத்தின் அடியிலிருந்து ஊற்றெடுத்த ஒப்பாரிப் பாடலும் "அஷர் இல்லத்"தின் முற்காலச் சிறப்பையும் மேன்மையையும் பிற்கால வீழ்ச்சியையும் எடுத்துரைத்தன.

அப்பாடலின் சாரம் வருமாறு: ஒருகாலத்தில் அஷர் இல்லம் அழகிய அரண்மனையாகத் திகழ்ந்தது; தெய்வ லோக மாளிகைபோல் மகத்துவம் பெற்றிருந்தது. அம் மாளிகையின்மேல் மஞ்சள் நிறக் கொடிகள் பட்டொளி வீசிப் பறந்தன. அந்த இன்பப் பள்ளத்தாக்கு வழியாகச் செல்லும் வழிப்போக்கர்கள் அரசக் கட்டிலில் அஷர் வீற்றிருப்பதைச் சாளரங்கள் வழியாகக் கண்டு வியந்து செல்லுவர்.

அரண்மனைக் கதவுகளில் முத்துக்களும் நவமணிகளும் பளபளக்கும். அரண்மனை மண்டபத்தில் இசைவாணிகள் ஆனந்தப் பண் பாடுவர். புலவர்கள் புரவலரைப் புகழ்வர். என்றும் பெருவிழா! இன்பவிழா! இவ்வளவு சிறப்பும் இன்று பழங்கதையாகிவிட்டது. அஷர் இல்லத்திற்குக் கெட்ட காலம் வந்துவிட்டது. இன்ப மாளிகை தன் பொலிவை இழந்துவிட்டது. இசைவாணி ஆனந்த நடம் புரிந்த இடத்தில் சோகம் குடிகொண்டுவிட்டது. இன்பம் இல்லை; துன்பம் மேவியது; ஆனந்தம் அகன்றது; அழுகை இடம்பெற்றது.

இப்பாட்டு எங்களை ஆழ்ந்த சிந்தனையில் ஆழ்த்தியது. பலவகையான எண்ணங்கள் அலைஅலையாக எழுந்தன. அவ்வெண்ண அலைகளிலிருந்து அஷரின் கருத்து ஒன்று பரிணமித்தது. அக்கருத்து புதுமையென்ற காரணத்திற் காக மட்டுமல்லாமல் அதை அவர் விடாப்பிடியாக நிலை

நாட்டிய காரணத்திற்காகவும் அதைக் குறிப்பிடுகிறேன். அது தாவரப் பொருள்களின் புலனுணர்ச்சியைப் பற்றிய கருத்தாகும். ஆனால் அவருடைய கற்பனையிலே அக்கருத்து எல்லையைக் கடந்துவிட்டது, அவருடைய தவறான பிடிவாதத்தை விளக்கிக்கூற வார்த்தைகளே கிடையா. அவர் வீட்டுக் கற்களுக்குக்கூடப் புலனுணர்ச்சி உண்டு என்று நம்பினார்! அக்கற்கள் பொருத்தப்பட்டிருந்த விதமும்—அவைகளின்மேல் படிந்திருந்த பூஞ்சக்காளான்களும்—வீட்டைச் சுற்றியிருந்த பட்டுப்போன மரங்களும்—வீட்டின் சாயல் அகழியில் பிரதிபலித்ததும் புலனுணர்ச்சிக்குள்ள நிபந்தனைகளை நிறைவேற்றிவிட்டன என்று அஷர் கருதினார். அப்புலனுணர்ச்சியே தம் குடும்பத்தின் விதியை பல நூற்றாண்டு காலமாக உருவாக்கி வந்தது; தம்மையும் இந்நிலைக்குக் கொண்டுவந்து சேர்த்தது என்று கூறினார். இத்தகைய விபரீதக் கருத்துக்களுக்கு நான் என்ன விமர்சனம் அளிப்பது!

நாங்கள் படித்த புத்தகங்களும் அஷரின் விபரீதக் கற்பனைக்குப் பொருந்தியவையாகவே இருந்தன.

மாடலின் இறந்துவிட்டதாக ஒருநாள் மாலையில் சொன்னார். ஆனால் சவத்தை 15 நாள் வரையில் புதைக்காமல் வைத்திருக்கப் போவதாகச் சொன்னார். "ஏன்?" என்றேன். அதற்கு அவர் சொன்ன காரணம் எவ்வளவிற்குப் பொருத்தமானதென்று எனக்கு விளங்கவில்லை. மாடலினின் அசாதாரண நோயின் தன்மையும், மருத்துவரின் தடுக்கமுடியாத வேண்டலும், தம் குடும்ப இடுகாடு வெகுதொலைவில் இருந்ததும் தம்மை அம் முடிவுக்கு வரும்படி செய்தன என்று சொன்னார். நான் அஷர் இல்லத்திற்கு வந்துசேர்ந்த நாளில் படிக்கட்டில்கண்ட மருத்துவனைப்பற்றிய நினைவு வந்ததும் அஷரின் விருப்பத்திற்கு மறுப்புக் கூறவில்லை.

வீட்டின் நிலவறையொன்றில் சவத்தைத் தாற்காலிக

மாக அடக்கம் செய்வதற்கு ஏற்பாடு செய்தார். அவர் கேட்டுக்கொண்டதின்பேரில் நானும் அவருக்கு ஒத்தாசை செய்தேன்.

சவப்பெட்டிக்குள் மாடலினின் உடலைவைத்து மூடினோம். இருவரும் சேர்ந்து பெட்டியைத் தூக்கிக்கொண்டு நிலவறைக்குச் சென்றோம். நிலவறை வெகுகாலமாக மூடியே கிடந்ததால் டார்ச்சு வெளிச்சங்கூடப் பாயமுடியாத அளவு புகைப்படலம் படர்ந்திருந்தது. அறை மிகவும் குறுகலானது; ஆனால் வெகு ஆழத்தில் இருந்தது வெளிச்சம் புகுவதற்கு எத்தகைய ஏற்பாடும் கிடையாது. நான் தூங்கிக்கொண்டிருந்த அறைக்கு நேர் கீழாக இருந்தது. அவ்வறை ஒரு காலத்தில் பழைய சாமான்கள் போட்டுவைக்கும் 'டஞ்சன்' அறையாக இருந்தது. பின்னர் வெடிமருந்துச் சரக்கு வைக்குமிடமாகப் பயன்பட்டது. அதற்கேற்பத் தரையின் ஒரு பகுதியிலும் கமான்வளைவின் உட்புறத்திலும் செப்புத்தகடு பதிக்கப்பட்டிருந்தது. தலைவாயிலில் பெரிய இரும்புக் கதவு இருந்தது. அக்கதவின் உள்பக்கத்திலும் செப்புத்தகடு பொருத்தப்பட்டிருந்தது. கனமான கதவாகையால் திறந்தபோது 'கிரீச்' 'கிரீச்' என்ற சப்தம் எழுந்தது. மொத்தத்தில் நிலவறை பீதியை உண்டாக்கக்கூடியதாய் இருந்தது.

கமான் வளைவு வழியாக நிலவறைக்குள் சென்றோம். அறைக்குள்ளிருந்த மரக்கட்டைகளின்மேல் சவப்பெட்டியை வைத்தோம். வைத்ததும் மூடியைச் சற்று நகர்த்தி மாடலினின் முகத்தை நோக்கினோம். அண்ணன், தங்கை இருவருடைய முகத்தோற்றமும் ஒரே மாதிரி இருப்பதைக் கண்டேன். அஷர் என் கருத்தைப் புரிந்துகொண்டு, தாங்களிருவரும் இரட்டையரென்றும், தங்களிருவருக்கும் எப்போதும் ஒரேவகையான உணர்ச்சிகள் இருந்துவந்தன என்றும் அஷர் குறிப்பிட்டார். சவத்தின் முகத்தை அதிகநேரம் பார்த்துக் கொண்டிருக்க முடிய

வில்லை. சவத்தின் கோரரூபத்தை எவ்வளவு நேரம் பய மில்லாமல் பார்த்துக்கொண்டிருக்க முடியும்! மாடலின் இளமைப் பருவத்திலேயே இறக்க நேர்ந்ததால் முகம் மூடு சன்னி கண்டவருக்கு இருப்பதுபோல் தோற்றமளித்தது. மூடியை மீண்டும் சரிப்படுத்தி திருகாணியால் இறுக்கி மூடினேம். திரும்பிவந்து இரும்புக் கதவை மூடிவிட்டு மேலே வந்துவிட்டோம்.

நாட்கள் சில கழிந்தன. அஷரின் மனநோய் முற்றி விட்டது. உணவை மறந்தார். உறக்கத்தைத் துறந்தார். எல்லாக் காரியத்தையும் கைவிட்டுவிட்டார். அறைவிட்டு அறை போவதும் வருவதுமாக அலைந்தார். முகத்தோற்றம் பயங்கரமாயிருந்தது. கண்களில் பிரகாசம் இல்லை. குரல் மாறுபட்டுவிட்டது. ஏதோ ஒரு விஷயத்தைப் பற்றித் தீவிரமாகச் சிந்தித்துக் கொண்டிருந்ததுபோல் தோன்றி யது. பித்துப்பிடித்தவன்போல் நடந்துகொண்டார். சில சமயங்களில் பலமணிநேரம் ஏதோ ஒரு சப்தத்தையே காதுகொடுத்து உற்றுக் கவனித்தவர்போல் அப்படியே நின்றுகொண்டிருந்தார். அவருடைய தோற்றத்தையும் விபரீதப் போக்கையும்கண்டு என் மனமும் கெட்டுவிட்டது.

அஷருடைய மனநோய் என்னையும் பீடிக்கலாயிற்று. அவரைப்போலவே எனக்கும் விபரீத மூடநம்பிக்கைகள் ஏற்படலாயின.

சவத்தை அடக்கம்செய்த எட்டாம் நாள் இரவு என் நிலை மிகவும் மோசமாய்விட்டது. விபரீதக் கற்பனைகள் தோன்றியவண்ணமாய் இருந்தன. தூக்கமே வரவில்லை. பயமாயிருந்தது. எதனுல் பயம் ஏற்பட்டது என்று யோசித்தேன்! என்ன யோசித்தும் பீதி அதிகரித்ததே யல்லாமல் காரணம் தெரியவில்லை. வீட்டிற்கு வெளியே புயல்காற்றுப் பலமாக அடித்துக்கொண்டிருந்தது. அறைக் குள் இருந்த திரைகளும் பிறபொருள்களும் படபடவென்று அடித்தன. அதனுல் பீதி உண்டாயிற்ரே என்றுகூட

எண்ணினேன். என்ன எண்ணியும் பயன் ஏற்படவில்லை. பயத்தால் உடல் நடுங்கியது. என்னையறியாமலேயே தலையைத் தூக்கினேன். காற்றிலே மிதந்துவந்த குரலோசை என் காதுகளுக்குப் பட்டது. அவ்வோசை எங்கிருந்து வந்ததெனத் தெரியவில்லை. பீதி எல்லையைக் கடந்துவிட்டது. படுத்திருக்க முடியவில்லை. படுக்கையை விட்டு எழுந்து அறைக்குள் நடமாடினேன், அப்படியாவது பீதியிலிருந்து விடுபெறலாமென்று.

அறையில் குறுக்கும் நெடுக்குமாக நடந்துகொண்டிருந்தபோது மாடிப்படியில் காலடி ஓசை கேட்டது. அஷர் வந்துகொண்டிருந்தார் என்பதை அறிந்துகொண்டேன். கதவைத் தட்டினார். வாருங்கள் என்றேன். கையில் விளக்குடன் உள்ளே நுழைந்தார் முகம் வழக்கம் போல் வெளிறிக்கிடந்தது. அவரைப் பார்ப்பதற்கு அருவருப்பாக இருந்தபோதிலும் அவர் வருகையை வரவேற்றேன் தனிமைத் துன்பம் தணியும் என்பதற்காக.

"நீர் அதைப் பார்க்கவே இல்லையா? பார்க்கத்தான் வேண்டும்" என்று பேசிக்கொண்டே பலகணிப்பக்கம் சென்றார். பலகணி வழியாகப் பலமான காற்று வந்தது. பலகணி வழியாக புறஉலக இரவுக்காட்சியைக் கண்டோம். இரவுக்காட்சி பயங்கரமாக இருந்தது. அதேசமயத்தில் வனப்பாகவும் இருந்தது. புயல்காற்று சுழற்காற்றாக மாறியது. மேகம் சூழ்ந்திருந்தபோதிலும் சுழற்காற்று சுழன்று சுழன்று வீசியதை உணரமுடிந்தது. சந்திரனும் பிரகாசிக்கவில்லை. விண்மீன்களும் மினுமினுக்கவில்லை. எனினும், வீட்டைச் சுற்றிலும் மங்கலான வெளிச்சம் பரவியிருந்தது.

"நீர் இதைப் பார்க்கக்கூடாது" என்று அஷரைப் பிடித்து அப்பால் இழுத்துவிட்டேன். "உங்களுக்கு அச்சமூட்டும் இத்தோற்றம் இயற்கை மின்சார நிகழ்ச்சியே, அல்லது அகழியிலிருந்து எழும் நச்சுவளியின் பிரகாசமாக

இருக்கலாம். கதவை மூடிவிடலாம். குளிர்காற்று உங்கள் உடலுக்கு ஆகாது. இதோ! நீங்கள் பெரிதும் விரும்பும் நாவல். நான் படிக்கிறேன். நீங்கள் கேளுங்கள். இப்படியாவது இவ்விரவு நேரத்தைப் போக்குவோம்." என்றேன்.

நான் படிப்பதற்கு எடுத்துக்கொண்டது சர் லான்ஸலாட் கானிங் எழுதிய 'பயித்தியகாரத்தனமான சோகம்' (Mad Trist) என்ற நாவல். இந் நாவல் உண்மையிலேயே அஷருக்குப் பிடித்ததுதானு என்பது எனக்குச் சரியாகத் தெரியாது. அவரைப் பலகணியைவிட்டு அப்பால் வரவழைக்க வேண்டும் என்பதற்காக அப்படிச் சொல்லிவைத்தேன். ஏதோ! நாவலைப் படித்தாலாவது அஷரின் பரபரப்பும் கலக்கமும் சற்றுக் குறையாதா என்று நம்பினேன்.

அந்த நாவலின் கதாநாயகன் எதல்ரெடு காட்டுக்குள் இருந்த குடிசைக்குள் சென்ருவது மழைக்கு ஒதுங்கிக் கொள்ளலாம் என்று எண்ணிக் கதவைத் தட்டினுன். ஆயின் உள்ளிருந்த சந்நியாசி கதவைத் திறப்பதாகக் காணும். சமாதான முயற்சி பயனளிக்காததால் பலாத்கார முயற்சியில் ஈடுபட முற்பட்டான். கதையின் இக் கட்டத்திற்கு வந்துவிட்டேன். கதையை மேலும் படித்தேன்:

"இயல்பாகவே திடநெஞ்சமுள்ள எதல்ரெடுக்குக் குடிவெறியும் சேர்ந்துவிட்டால் சொல்லவும் வேண்டுமோ? சந்நியாசியோடு மேலும் பேரம் பேச இஷ்டப்படவில்லை. மழை வலுப்பதையும் புயல் கிளம்புவதையும் கண்டு தன் கையிலிருந்த தண்டாயுதத்தால் குடிசைக் கதவை அடித்து நொறுக்கி ஒடித்துத் தள்ளினுன். கதவு ஒடிந்த சப்தம் காடு முழுவதும் எதிரொலித்தது."

இக் கட்டத்தில் படிப்பதைச் சற்று நிறுத்தினேன். வீட்டின் கோடியிலிருந்து கதையில் விவரிக்கப்பட்டது போன்ற—படபடவென்று மரம் ஒடிவதுபோன்ற—சப்தத்

தின் எதிரொலி வந்தது. ஒரு வேளை புயல் காற்றின் வேகத்தால் சன்னல்கள் தடார் தடார் என்று அடித்துக் கொண்டதனல் ஏற்பட்ட சப்தமாக இருக்கக்கூடும் என்று மனத்தைச் சமாதானப்படுத்திக் கொண்டு மீண்டும் கதையைப் படித்தேன்:

"பராக்கிரமசாலியான எதல்ரெட் குடிசைக்குள் நுழைந்ததும் தனக்கு அனுமதி அளிக்க மறுத்த சந்நியாசியைக் காணமல் திகைத்தான். குடிசைக்குள் சந்நியாசி இல்லை. கொடிய பூதம் இருந்தது. அந்தப் பூதம் பொன் மாளிகைக்குக் காவல்புரிந்து கொண்டிருந்தது. மாளிகையின் தரை வெள்ளியால் ஆனது. சுவரில் பளபளவென்று மின்னிய பித்தளைக் கேடயம் ஒன்று தொங்கிக்கொண்டிருந்தது. அதில்,

'எவன் பூதத்தைக் கொல்லுகின்றனே அவனுக்கு இக் கேடயம் பரிசாகும்' என்று எழுதியிருந்தது.

எதல்ரெட் தன் தண்டாயுதத்தைத் தூக்கிப் பூதத்தின் தலையில் ஓங்கி ஒரு அடி அடித்தான். 'கிரீச்' என்ற பேரிரைச்சலோடு பூதம் அடிசாய்ந்து விழுந்தது. அத்தகைய இரைச்சலை இதுவரையில் எதல்ரெட் கேட்டதே கிடையாது. காதுகளைப் பொத்திக் கொண்டான்."

இங்கும் படிப்பதை நிறுத்தினேன். கதையில் வந்த பூதம் கதறிய 'கிரீச்' என்ற ஒலி உண்மையாகவே என் காதுகளுக்குக் கேட்டது. இரண்டாம் தடவையும் இப்படி நடக்கவே எனக்குப் பயமாய் விட்டது. கடந்த சில நிமிடங்களுக்குள் அவரின் நடத்தையில் பெரும் மாறுதலைக் கண்டேன். எனக்கு எதிராக உட்கார்ந்திருந்த அவர் திரும்பி கதவைப் பார்த்து உட்கார்ந்துகொண்டார். அவருடைய உதடுகள் எதையோ முணுமுணுத்துக் கொண்டிருந்தன. தலையை நெஞ்சின்மேல் கவிழ்த்து உட்கார்ந்திருந்தார். எனினும் தூங்கவில்லை. கண்கள் திறந்திருந்தது பக்கப் பார்வைக்குத் தெரிந்தது. உடல் முன்னும் பின்னும்

அசைந்துகொண்டிருந்தது. கதையை மீண்டும் தொடர்ந்தேன் :

"பூதத்தின் கோபத்திற்கு ஆளாகாமல் தப்பித்த வெற்றிவீரன் கேடயத்தை எடுக்க முற்பட்டான். வழியில் கிடந்த பூதத்தின் சவத்தை அப்பால் அகற்றிவிட்டுக் கேடயத்தை எடுக்கப் போனான். அவன் எடுக்கும் வரையில் அது காத்திருக்கவில்லை. வெள்ளித் தரையின்மேல் விழுந்தது. க்ணீர்! கணீர்! என்ற நாதம் எழுந்தது."

இவ் வாக்கியத்தை முடித்தும் முடிக்காமலும் இருந்த நிலைமையில் கேடயம் வெள்ளித் தரைமேல் விழுந்தது போன்ற சப்தம் உண்மையிலேயே கேட்டது. 'கணீர்!' என்ற ஓசை எங்கிருந்தோ எதிரொலித்து வந்தது. இத் தடவை சமாளிக்க முடியவில்லை. எழுந்து ஓடிவிடலாம் போல் தோன்றியது. அஷர் உட்கார்ந்திருந்த நாற்காலிப் பக்கம் ஓடினேன். அவர் தோள்மேல் கைவைத்தேன். திடுக்கிட்டுத் திரும்பினார். அவர் வாய் முணுமுணுத்தது. குனிந்து அவர் பேசுவதைக் காது கொடுத்து உற்றுக் கவனித்தேன்.

"அது காதில் படவில்லை?—ஆம்! எனக்குக் கேட்கிறது. நன்றாகக் கேட்கிறது. கேட்டுக்கொண்டுதான் இருக்கிறேன்—நீண்ட—நீண்ட—நீண்ட—பல நிமிடங்களாக, பல மணிகளாக, பல நாட்களாக நான் அதைக் கேட்டுக்கொண்டுதான் இருக்கிறேன்—எனினும் தைரியம் இல்லை. நான் பாவி—கொடிய பாவி!—எனக்குத் தைரியம் இல்லை.... வாய்விட்டுப் பேச முடியவில்லை!...**நாம் அவளை உயிரோடு அடக்கம் செய்து விட்டோம்!** சவப் பெட்டியில் அவள் போராடிக்கொண்டிருந்ததை அறிவேன்—பல நாட்களுக்கு முன்பே அறிவேன். எனினும் அதைச் சொல்ல எனக்குத் தைரியம் வரவில்லை! இப்போது—இன்றிரவில்—எதல்ரெட—ஹா! ஹா! எதல்ரெட சந்நியாசியின் குடிசைக் கதவை ஒடித்தபோது ஏற்பட்ட சப்தம் போன்ற சப்தம் கேட்டதே! அது மாடலின் சவப்பெட்டியை உடைத்த சப்த

மாகும். பூதம் 'கிரீச்' என்று கத்தியதைப் போன்ற சப்தம் அவள் நிலவறையின் இரும்புக் கதவைத் திறந்தபோது ஏற்பட்டது. கேடயத்தின் கணீரொலி போன்ற சப்தம், அவள் நிலவறைக் கமான் வழிக்குள் தட்டுத்தடுமாறி வரும் போது ஏற்பட்ட சப்தமாகும்! நான் எங்குச் செல்வேன்? அவள் இப்போது இங்கு வந்துவிடுவாளே! என்னுடைய ஆத்திரத்தைக் கண்டிப்பதற்காக அவசர அவசரமாக வந்து கொண்டிருக்கிருளே! இதோ! அவளுடைய காலடி ஓசை கேட்கிறது! ஹா! ஹா! நான் பைத்தியக்காரன்! ஹா! ஹா!......இதோ அவள் கதவுக்கு வெளியே நிற்கிருள்..." என்று கதறினுர் அஷர்.

கதவுகள் திறந்தன. வெளியே மாடலின் நின்று கொண்டிருந்தாள். அவளுடைய உடையில் இரத்தக் கறைகள் படிந்திருந்தன. காயத்தின் அறிகுறிகள் பல காணப்பட்டன. கணநேரம் நடுங்கிக் கொண்டே நின்று கொண்டிருந்தாள். பின்னர் அழுதுகொண்டே தன் சகோதரனின் மேல் சாய்ந்தாள். அஷர் செத்துப் பிண மாகத் தரையில் சாய்ந்தார். அவர் எதிர்பார்த்தபடியே கொடிய பயத்துக்குப் பலியானுர்!

அறையைவிட்டு—அரண்மனையைவிட்டு—ஓடினேன்! ஓடினேன்! தலைகால் தெரியாமல் ஓடினேன்! புயல் கடுமையாக வீசியது. வழியில் திடீரென்று வெளிச்சம்! அவ் வெளிச்சம் எங்கிருந்து வந்தது என்று திரும்பிப் பார்த்தேன். உதய சந்திரனின் செந்நிற ஒளிக் கிரணங்கள் அஷர் இல்லக் கட்டிட வெடிப்பின் வழியாக வந்துகொண்டிருந்தன. நான் உற்றுப் பார்த்த போது அந்த வெடிப்பு விரிந்தது. அதன் வழியாகப் புயல் காற்று பொத்துக் கொண்டு வந்தது. சுவர்கள் சுக்கு நூருக இடிந்து விழுந்தன. கடலோசை போன்ற பேரிரைச்சல் கேட்டது. இடிந்த அஷர் இல்லத்திலிருந்து சரிந்து விழுந்து மண்ணும் கல்லும் அகழியை மூடிவிட்டன.

# பர்னிஸ்

துன்பம் பலதிறத்தது. துன்பத்திற்கு எல்லையே கிடையாது. பரந்த உலகத்தில் மனிதன் படும் துன்பமும் பரந்ததாக இருக்கிறது. துன்பக் கடல் கரை காண முடியாதது. துன்பத்தின் சாயல்கள் வானவில்லின் பலவகையான வண்ணங்களைப் போலப் பல வண்ணத்தவை; வானவில்லின் வண்ணங்கள் ஒன்றோடொன்று பின்னிக் கொண்டுள்ளன; பிரித்துப் பார்ப்பது கடினம்; வானவில் அடிவானத்தைத் தொட்டுக் கொண்டிருப்பதுபோல் துன்பம் மனித வாழ்க்கையின் வரம்பை எட்டிப் பிடிக்கிறது. அழகுள்ள வானவில்லை அழுகை தரும் துன்பத்திற்கு உவமையாகக் கூறுவது எப்படிப் பொருந்தும் என்று கேட்கிறீர்களா? சாந்தியின் சின்னமாகத் திகழும் வானவில் சோகத்தின் பிறப்பிடமான துன்பத்திற்கு உவமையாக முடியுமா? முடியும். துன்பம் இன்பத்தின் விளைவு. ஆனந்தத்திலிருந்துதான் ஆழ்ந்த சோகம் பிறக்கிறது. இன்றையத் துன்பம் நேற்றைய இன்பத்தின் நினைவாக இருக்கும், அல்லது நேற்றைய இன்பத்தின் பயனாக இருக்கும்.

எனக்கு என் பெற்றோர்கள் இட்ட பெயர் இகாஸ்; குடும்பப் பெயரை நான் சொல்லமாட்டேன். எனினும் உலகத்திலேயே எங்கள் பரம்பரைக் கூடங்களைப்போல் தொன்றுதொட்டுப் பாராட்டப்பட்டு வரும் கோபுரங்கள் வேறெங்கும் இல்லை. எங்கள் மரபை எல்லோரும் கனவு காணும் மரபு என்று அழைப்பர். குடும்ப மாளிகையின் அமைப்பு—வரவேற்பறைச் சுவர்களில் சித்திரிக்கப்பட்டுள்ள வண்ண ஓவியங்கள்—படுக்கையறையின் ஓவியத் திரைச்சீலை—ஆயுதக்கிடங்கின் அணிசுவர்களின் செதுக்கு வேலைகள்—ஓவியக்கலைக்கூடம்—நூல்நிலைய அறையின்

ரீதி—கடைசியாக, நூல்களின் தன்மை—இவையெல்லாம் எங்கள் குடும்பத்தைப்பற்றி உலகம் கூறுவதை உறுதிப்படுத்துகின்றன

என் குழந்தைப் பருவ வாழ்க்கையின் நினைவுகள் அந்த நூல் நிலைய அறைக்கும்—அதன் நூல்களுக்கும் சம்பந்தப்பட்டவை. அந்த அறையில்தான் என் தாயார் இறந்தது. நான் பிறந்ததும் அங்குத்தான். ஆனால் பிறப்பதற்கு முன் நான் அங்கு வாழவில்லை—அதாவது என் ஆன்மா அதற்கு முன் இருந்ததில்லை—என்று சொல்லுவது சரியல்ல. நீங்கள் மறுக்கலாம். ஆனால் ஆன்மா என்றுமே அழியாதது என்ற நம்பிக்கையுடையவன் நான். இதில், மற்றவர்களுக்கு நம்பிக்கை இருந்தாலும் சரி இல்லையென்றாலும் சரி. அதைப் பற்றி எனக்குக் கவலை இல்லை. ஆனால் ஒன்றும் மட்டும் நிச்சயம். முற்பிறப்பில் நடந்த நிகழ்ச்சிகள் மங்கிய நிழல்போன்று தெளிவற்ற எண்ணங்களாக அவ்வப்போது நினைவுக்கு வருவதை யாரும் இல்லையென்று சொல்லமுடியாது. அந்நிழலைப் பகுத்தறிவு என்னும் பகலவனால்கூட நீக்க முடியாது.

நூல்நிலைய அறையில் நான் பிறந்தேன். இல்லை! இல்லை! பிறக்கவில்லை. ஆழ்ந்த தூக்கத்திலிருந்து விழித்தெழுந்தேன். கற்பனை மாளிகையில்—கருத்தும் புலமையுமிக்க காவிய உலகில்—நான் இருக்கக் கண்டேன். பிதிர் பிடித்தவன் போல் ஆர்வத்துடன் சுற்றிலும் பார்த்தேன். எங்கேயோ இருந்து இப்புதிய இடத்திற்கு வந்து விட்டதாகத் தோன்றியது. ஆனால் எங்கிருந்து வந்தேன் என்பது தெளிவாகத் தெரியவில்லை. இதைப் பற்றிய சிந்தனை ஒழிந்தேன். பாலியப் பருவத்தைப் புத்தகங்களின் மத்தியிலே விளையாடிப் போக்கினேன். இளமைப் பருவத்தைப் பகற் கனவில் கழித்தேன். ஆண்டுகள் உருண்டோடின. மனிதப் பருவத்தின் நண்பகலும் வந்துவிட்டது. வாழ்க்கையின் வசந்தகாலமாகத் திகழ வேண்டிய வாலிபப் பரு

வத்தை வாழ்வின் தேக்கம் விழுங்கிவிட்டது. மனப்பான்மை தலைகீழாக மாறிவிட்டது. கண்ணால் காணும் உண்மைகளெல்லாம் கற்பனைக் காட்சிகளாகத் தோன்றின.

* * *

பர்னிஸ் என்னும் பாவை என் அத்தை மகள். அவளும் என் வீட்டில்தான் வளர்ந்தாள். எனினும் இருவரும் வெவ்வேறு விதமாக வளர்ந்தோம். எனக்கு நித்திய கண்டம்; பூரண ஆயுள்; நிரந்தர நோயாளி. நோயுக்கு என்பேரில் அளவு கடந்த காதல் போலும். ஆனால் பர்னிஸ் நாள் ஒரு மேனியும் பொழுதொரு வண்ணமுமாக வளர்ந்தாள். நான் மனச்சிறையில் மண்டிக் கிடந்தேன்; ஆழ்ந்த சிந்தனையில் என் உடலும் உயிரும் ஐக்கியமாகி விட்டன. அவள் புள்ளிமான் போல் துள்ளி விளையாடினாள். நான் தவசிபோல் மெய்மறந்து கிடந்தேன். அவள் இளங்கன்றுபோல் பயமறியாமல்—கவலை யில்லாமல் வாழ்ந்தாள்; காலச் சக்கரம் சுழன்றோடுவதையும் அறியாமல் சுகமாக வளர்ந்தாள்.

* * *

பர்னிஸ்! பர்னிஸ்! என்று அவளை அறை கூவி அழைக்கின்றது என் வாய். பழைய நினைவுகள் சுருள் சுருளாகக் கிளம்புகின்றன. இதோ! அவள் உருவம் என் கண்முன் காட்சியளிக்கின்றது. அன்றலர்ந்த செந்தாமரையெனத் தோன்றும் அவள் முகம்—ஆனந்தத் தாண்டவமாடும் அழகிய முகம்—கவலையே அறியாத களங்கமற்ற முகம்—புன்னகை தவழும் தண்முகம்—இதோ தெரிகின்றது! ஆஹா! என்ன அழகு! சேற்றிலே முளைத்த செந்தாமரை! அதற்கு உவமை அதேதான்! ஆனால்! அந்த அழகு இப்போது எங்கே போய் மறைந்தது. ஒன்றுமே விளங்கவில்லை. சொல்லமுடியாத சோகக் கதையாகத் தோன்றுகிறது. நோய்!— கொடிய நோய்! பொல்லாத நோய்!—

அவளைப் பிடித்தது. அவளை உருத்தெரியாமல் மாற்றிவிட்டது. மாறுதல்! கற்பனைக் கெட்டாத மாறுதல்! அவளுடைய மனத்திலே மாறுதல்; பழக்க வழக்கங்களிலே மாறுதல்; குணத்திலே மாறுதல்; **உருவத்திலும் மாறுதல்!** கொடிய மாறுதல்! கண்ணால் கண்டு சகிக்கமுடியாத மாறுதல்! அந்தோ! இன்பம் இருந்த இடத்தில் துன்பம்! துள்ளி விளையாடிய உடல் கிடை சேர்ந்து விட்டது! அழகு **அழிந்தது!** அழிவு வந்தது; போய் விட்டது. ஆனால் வெறுங் கையோடு போகவில்லை. ஆரணங்கின் அற்புத அழகையும் தன்னுடன் அழைத்துச் சென்று விட்டது. அழகே உருவான பர்னிஸ் பாழும் நோயுக்குப் பலியானாள். அந்தப் பர்னிஸ் எங்கே? அவளை மீண்டும் பார்க்கமுடியுமா?

அவளை இக்கதிக்கு ஆளாக்கிய—அவள் உள்ளத்தையும் உருவத்தையும் அடியோடு மாற்றிய—நோய் அழிவின் கருவிகளில் ஒன்றாகிய கொடுமையினும் கொடிய வலிப்பு நோயாகும். அடிக்கடி மயக்கம் போட்டு விழுந்து விடுவாள். பல தடவைகளில் மயக்கம் தெளிவது அரிதாகப் போய் விட்டது.

இதற்கிடையில் என் சொந்த நோய்—ஆம்! எனக்கே சொந்தமான நோய்தான்—நாளுக்கு நாள் கடுமையாகிக் கொண்டு வந்தது. அதன் கொடுமை மணிக்கு மணிக்கு—நிமிடத்திற்கு நிமிடம் அதிகரித்தது. கடைசியில் ஏதாவது ஒன்றிலேயே லயித்து விடும் ஒருவழிக் கிறுக்காக (Monomania) மாறிவிட்டது. இப்பிரபஞ்சத்தின் சாதாரணப் பொருள்களைப் பார்க்கும்போதுகூட ஆழ்ந்த சிந்தனையில் மூழ்கி விடுவேன். இது எதனால் என்று எனக்கு விளங்கவில்லை.

சில சமயங்களில் புத்தகத்தைப் பார்த்துக் கொண்டே மணிக்கணக்காக இருந்துவிடுவேன். பகல் நேரத்தில் கதவின்மேல் படும் மரத்தின் நிழலையே பார்த்துக் கொண்டு

பல மணி நேரம் அப்படியே உட்கார்ந்துவிடுவேன். இரவு முழுவதும் விளக்கின் ஒளியையோ அல்லது தீக்கொழுந்தையோ பார்த்துக்கொண்டே இருந்துவிடுவேன். மலரின் மணத்தைப் பற்றிய சிந்தனையில் நாட்கள் சில கழிந்துவிடும். ஏதாவது ஒரு சொல்லை மந்திரம் போல் திரும்பத் திரும்ப உச்சரித்துக்கொண்டே பல மணி நேரம் இருந்துவிடுவேன். இந்த மாதிரி ஏதாவது ஒன்றையே சிந்தித்துக் கொண்டு மெய்மறந்த நிலைகள் பலப்பல.

எனினும் என் நிலையைத் தவருகப் புரிந்துகொள்ளாதீர்கள். சாதாரணப் பொருள்களிலும் லயித்ததை கவிஞனின் கற்பனையாகவோ அல்லது துறவியின் தியானமாகவோ கருதிவிடாதீர்கள். என் கிறுக்குப் புத்தி கற்பனை உலகத்திற்கும் தியானத்திற்கும் சம்பந்தப்பட்டதல்ல; அவைகளுக்கு முற்றிலும் மாறுபட்டது. ஒரு பொருளிலே கருத்துச் செலுத்தும் கவிஞன் அல்லது ஆராய்ச்சியாளன் அதிலிருந்து தோன்றும் கருத்துக்களிலும் எண்ணங்களிலும் அப் பொருளையே மறந்து விடுகின்ருன்; பயன்மிக்க பகற் கனவின் முடிவில் சிந்தனையின் முதற்காரணத்தை மீண்டும் அறிகின்ருன். கவிஞனின் கருத்தைக் கவருவது—ஆராய்ச்சியாளனின் சிந்தனையிலே இடம் பெறுவது வீண் பொருளல்ல; அறிவுக்கு விருந்தளிக்கும் அரிய பொருள். ஆனால் என் கருத்தைக் கவர்ந்தவை பெரும்பாலும் வீணன பொருள்களே—எந்த விதமான முக்யத்வமும் இல்லாத பொருள்களே. என் பகற் கனவிலே எழுந்த கருத்துக்கள் மிகச் சிலவே. அச் சில கருத்துக்களும் கருத்தைக் கவர்ந்த பொருளைப்பற்றியவையே. என் சிந்தனைகள் என்றுமே இன்பம் தரவில்லை. கனவின் முடிவில் சிந்தனையின் முதற் காரணம் நினைவிற்கு வருவதில்லை. இதுவே என் நோயின் இயல்பு. சுருங்கச் சொல்லின் என் மனோசக்தி வெறும் கவனிப்பென்ருல் கவிஞனின் மனோசக்தி கற்பனை யாகும்.

என் வீட்டு நூல் நிலையத்திலிருந்த புத்தகங்கள் என்

இறுக்கு நோயை வளர்க்கவில்லையென்றாலும் என் வீணான, பயனற்ற கற்பனைகளுக்கு—மெய்ம்மறந்த நிலைக்கு ஏற்றனவாக இருந்தன.

பயனற்ற, அற்பப் பொருள்களால் பாதிக்கப்பட்ட என் பகுத்தறிவை டாலமி கூறிய கடற்பாறைக்குத் தான் ஒப்பிட வேண்டும். கொடிய அலைகளையும் கடும் புயலையும் எதிர்த்து நின்ற அப்பாறை ஒரு மென்மையான மலர்பட்ட மாத்திரத்தில் உடைந்ததாம்.

கொடிய நோயால் பர்னிஸிற்கு நேர்ந்த மன மாறுதல் என் பகற்கனவிற்கு ஏற்ற விருந்தாக அமைந்திருக்கக் கூடும் என்று சிலர் நினைக்கலாம். அதுதான் இல்லை. ஆனால் இறுக்குப் புத்தி இல்லாத நேரங்களில், அவளுக்கு நேர்ந்த கதியை நினைத்து வருந்தினேன். அவளுடைய இன்ப வாழ்க்கை வறண்ட பாலைவனமாக மாறிவிட்டதை எண்ணி யெண்ணிக் கலங்கினேன். ஏங்கினேன். மனம் புழுங்கினேன். இவ்வெண்ணங்களும் ஏக்கங்களும் எனக்கு மட்டுமே ஏற்பட்டனவல்ல. அந்தச் சூழ்நிலையில் எல்லோருக்குமே ஏற்பட்டிருக்கும். எனினும் என்னுடைய நோயிற்கே இயல்பான முறையில் என் சிந்தனை, முக்கியமல்லாத விஷயத்தில்—பர்னிஸின் உடலழகில் ஏற்பட்ட திடீர் மாறுதலில்—ஆளே அடையாளம் தெரியாத அளவிற்கு அவள் மாறியிருந்ததில்—லயித்துவிட்டது.

அவள் அழகே உருவான ஆரணங்காக இருந்தபோது, வனப்புமிக்க வனிதையாகத் திகழ்ந்தபோது, சிற்பி செதுக்காத பொற்சிலையாக இருந்தபோது நான் அவளைக் காதலிக்கவில்லை.

என் வாழ்க்கையே ஒரு தனிப்போக்கு. எண்ணங்கள் இதயத்திலிருந்து பிறக்கவில்லை; என் ஆசைகள் வெறும் மன ஆசைகளே.

அதிகாலையின் மங்கிய ஒளியிலே—நடுப்பகலில் தோட்டத்து மரங்களின் நிழலிலே—இரவில் சாந்தி நிலவும் நூல்

நிலைய அறையிலே அவளைப் பார்த்திருக்கிறேன்—உயிரோடு நடமாடும் பாவையாகவல்ல, கனவுலகக் காரிகையாக; பூவுலகில் வாழும் உயிர்பிராணியாகவல்ல, அருவப்பொருளாக; கண்டு களிக்கும் பொருளாகவல்ல, எண்ணிவியக்கும் பொருளாக; கண்டதும் காதல் கொள்ளும் காரிகையாகவல்ல, கற்பனை செய்து பார்க்கும் கருத்தாக.

ஆனால் இப்போது அவளைக் கண்டாலே என் குலையெல்லாம் நடுங்குகின்றது. அவள் அருகில் வந்தால் என் உடல் பயத்தால் வெளிறிப் போகின்றது. எனினும் அவளுக்கு நேர்ந்த கதிக்காகப் பரிதாபப்பட்டேன். அவள் நிலையைக் குறித்து வருந்தினேன். வெகுகாலமாக அவள் என்னைக் காதலித்து வந்தாள் என்பதை யூகித்தறிந்தேன். நல்லகாலத்தை நழுவவிட்டுப் பொல்லாத காலத்தில் கல்யாணத்தைப்பற்றி அவளிடம் பேசினேன்.

* * *

கடைசியாக எங்களுடைய சாந்திமுகூர்த்த நாளும் நெருங்கிக்கொண்டு வந்தது. குளிர்காலம், மாலைநேரம் காலத்திற்குப் புறம்பான முறையில் வெம்மையாகவும் அமைதியாகவும் இருந்தது. நூல்நிலையத்தின் உள்ளறையில் உட்கார்ந்திருந்தேன். தனியாக உட்கார்ந்திருப்பதாகவே நினைத்துக்கொண்டிருந்தேன். ஆனால் தலையை நிமிர்ந்து நோக்கியபோது எனக்கு முன்னால் பர்னிஸ் நின்றுகொண்டிருந்ததைக் கண்டேன். அவள் உருவம் மங்கலாகத் தெரிந்தது. அதற்குக் காரணம் என் கற்பனைதானா? அல்லது அறையில் சூழ்ந்திருந்த பனிப்படலந்தானா? அல்லது அறையில் பளிச் பளிச் என்று எரிந்துகொண்டிருந்த விளக்கொளிதானா? எது என்று என்னால் சொல்லமுடியவில்லை. அவள் வாய்திறந்து பேசவில்லை. கற்சிலைபோல் நின்றுகொண்டிருந்தாள். என்னாலும் பேசமுடியவில்லை; நா எழவில்லை; மெய் சிலிர்த்தது. தாங்கமுடியாத வேதனை என்னைத் தாக்கியது. நாற்காலியில் சாய்ந்தேன்.

கொஞ்ச நேரம் பேச்சு மூச்சற்றுக் கிடந்தேன். கண்களுக்கு மட்டும் அவள் உருவம் தெரிந்துகொண்டே இருந்தது.

அந்தோ ! பர்னிஸ் மெலிந்து இளைத்து எலும்பும் தோலுமாகக் குச்சிபோல் காணப்பட்டாள். பார்வையை அவள் முகத்தின்பக்கம் திருப்பினேன். நெற்றி உயரமாகவும் வெளுத்தும் இருந்தது. சுருண்ட கூந்தல் நெற்றிமேல் விழுந்து கன்னப் பொறியை மறைத்திருந்தது. முகத்தில் களையில்லை ; சோர்ந்து கிடந்தது. கண்கள் மங்கிக் கிடந்தன ; குழிவிழுந்திருந்தன. **பற்கள் இளித்தன ! பேய்ச் சிரிப்புச் சிரித்தன !** ஐயோ ! பற்களைக்கண்டு பயந்துவிட்டேன். கண்களை இறுக மூடிக்கொண்டேன். அக்கோரக் காட்சியைக் காணுமல் இருந்திருக்கக்கூடாதா ? கதவு மூடிய ஓசை கேட்டது. கண்களைத் திறந்துபார்த்தேன். அத்தை மகளை அறையில் காணவில்லை. அறையைவிட்டு வெளியே போய்விட்டாள். அவள் போய்விட்டாளேயன்றி அவள் உருவம் என் மனக்கண்களுக்கு மறையவில்லை. இளித்த பற்களின் பயங்கரத் தோற்றம் மனக்கண்களை விட்டு அகலவில்லை. **பயங்கரப் பற்கள் !** கோரப்பற்கள் இங்கேயும் இருந்தன ! அங்கேயும் இருந்தன ! எங்கும் இருந்தன. நீண்ட குறுகிய வெள்ளைப் பற்கள் ! பார்த்த விடமெங்கும் பற்களையே கண்டேன். வேறு பொருள்கள் புலப்படவில்லை; வேறு எண்ணங்கள் எழவில்லை ; வேறு கருமங்கள் என் கருத்தைக் கவரவில்லை, என் மனக்கண்களுக்குப் பர்னிஸின் பயங்கப் பற்கள் மட்டுமே காணப்பட்டன. அப்பற்களின் தன்மையை ஆராய்ந்தேன். அவைகளின் அதிசய அமைப்பைப்பற்றிச் சிந்தித்தேன். அவைகள் உதடுகள் அசையாமலேயே தாமே பேசக்கூடியவையோ என்ற எண்ணம் எழுந்தது. அவ்வளவு தான் ! பீதியால் உடலெல்லாம் நடுங்கியது. மாட்ஜெல் ஜெலியின், (Mad'selle Salle') **நடைகள் கூட உணச்சிகர மானவை** என்று சொல்லுவார்கள். பர்னிஸைப்பற்றிச்

சொல்லும்போது இன்னும் ஒரு படி உயரவேண்டும். **பர்னிஸின் பற்கள் எல்லாம் எண்ணங்கள்! எண்ணங்கள்!** இந்த மூடநம்பிக்கை என் பகுத்தறிவுக் கண்களை மூடிவிட்டது. **பற்களே எண்ணங்கள்!** ஆகையால் அப்பற்களின்மேல் அளவுகடந்த பற்றுதல் ஏற்பட்டது! அவைகளைப் பிடுங்கிக்கொண்டுவந்து சேர்த்தால்தான் பயம் தெளியும், குழப்பம் நீங்கும், அறிவு மீளும் என்று எண்ணினேன்.

இந்தவிதமாக மாலை நேரமும் கழிந்தது. இரவு வந்தது; இருள் சூழ்ந்தது. இரவுபோய் அடுத்த பகலும் வந்தது. இரண்டாவது இரவும் வந்துகொண்டிருந்தது. நான் இன்னும் அதேநிலையில்தான் இருந்தேன். ஆடாமல் அசையாமல் தன்னந் தனியனாய் மெய்மறந்த நிலையிலே அந்த ஏகாந்தமான அறையிலே அமர்ந்திருந்தேன். பர்னிஸின் பற்களின் பயங்கரத் தோற்றம் இன்னும் என்னைப் பயமுறுத்திக்கொண்டுதான் இருந்தது.

அறையில் ஒளியும் இருளும் மாறிமாறி வந்தும் அப்பற்கள் மட்டும் ஒரே பிரகாசமாய் காட்சியளித்த வண்ணமாய் இருந்தன. கடைசியில் அவலக் குரலும் ஒப்பாரியும் என் கனவைக் கலைத்தன. இருக்கையைவிட்டு எழுந்தேன். அறையின் கதவைத் திறந்தேன். முன்னால் அழுத கண்ணீரும் சிந்திய மூக்குமாகப் பணிப்பெண் நின்றுகொண்டிருந்தாள். அவள் பர்னிஸ் இறந்துவிட்டதாகச் சொன்னாள். காலையில் பர்னிஸிற்கு வலிப்பு வந்ததாம். வந்த வலிப்பு அவள் உயிரையும், வலித்துக்கொண்டே போய்விட்டதாம். அடக்கத்திற்கு வேண்டிய ஏற்பாடுகளெல்லாம் முடிந்துவிட்டனவாம்.

நூல் நிலைய அறையில் நான் மீண்டும் தன்னந் தனியனாய் உட்கார்ந்திருக்கக் கண்டேன். கலவரமிக்க கனவு கலைந்து எழுந்தவன்போல் காணப்பட்டேன். இப்போது நள்ளிரவு. அந்திப் பொழுதிலேயே பர்னிஸை அடக்கம்

செய்துவிட்டனர். அதற்குப் பின்னால் இவ்வளவு நேரம் வரையில் என்ன நடந்தது என்பது தெளிவாகத் தெரிய வில்லை. இவ்விடைவேளை என் வாழ்க்கையின் வரலாற்றி லேயே மிகப் பயங்கரமான பக்கம்; அச்சம் நிறைந்து, விளங்காத, அரைகுறையான சோக நிகழ்வுகள் எழுதப் பட்ட பக்கம். அவைகளை அழிக்க முயல்கிறேன். ஆனால் முடியவில்லை.

ஒரு பெண்ணின் முனகல் — அழுகுரல் — என் காது களில் ஓயாமல் ஒலித்துக் கொண்டிருந்தன. நான் ஏதோ செய்யத்தகாத செயலைச் செய்துவிட்டதாகத் தோன்றியது! அது என்ன செயல்? இக் கேள்வியை என்னை நானே உரத்த குரலில் கேட்டுக்கொண்டேன். அறையின் எதி ரொலி, " அது என்ன செயல் " என்று பதிலளித்தது.

எனக்குப் பின்னால் இருந்த மேஜையின் மேல் விளக்கு எரிந்துகொண்டிருந்தது. அதற்குப் பக்கத்தில் ஒரு பெட்டி இருந்தது. அது நான் அடிக்கடி பார்த்த பெட்டிதான். குடும்ப டாக்டரின் கைப்பெட்டி. அது எப்படி என் மேஜைக்கு வந்தது? அதைக் கண்டால் நான் ஏன் பயப் படுகிறேன்; அஞ்சி நடுங்குகிறேன்?

அறையின் கதவில் வெளிச்சம் பட்டது. செத்தவன் போல் வெளிறிப்போயிருந்த பணியாள் ஒருவன் ஓடி வந் தான். அவன் பார்வையில் பீதியும் பயமும் கலந்திருந்தன. தட்டுத் தடுமாறிக் கொண்டே ஏதோ சில வார்த்தைகள் சொன்னான். அவன் பேசும்போது அவன் உடல் நடுங்கியது; குரல் தழுதழுத்தது. அவன் என்ன சொன்னான்? அரை குறையான சில வாக்கியங்கள் காதில் விழுந்தன. இரவு நேரத்தின் அமைதியை எங்கிருந்தோ வரும் சோகக் குரல்— அழுகுரல் குலைத்ததாம். குரல் வந்த திக்கில் சென்று தேடி னார்களாம். பர்னிஸின் சவக்குழி தோண்டப்பட்டிருப்ப தையும் அதிலிருந்த சவம் இன்னும் மூச்சுவிடுவதையும் அசைவதையும் உயிரோடு இருப்பதையும்—கண்டனராம்.

# வால்டமார்

அல்லது

# இறந்தவர் பேசினார்

வால்டமாரின் சம்பவம் எங்கும் ஒரே பரபரப்பை உண்டாக்கிவிட்டது. எங்குப் பார்த்தாலும் அவரைப் பற்றிய பேச்சுத்தான். அந்த சம்பவத்தைப் பற்றிய பர பரப்பான பேச்சுக்கள் நிலவியதில் வியப்பொன்றுமில்லை. அவ்வாறு நிலவாதிருந்திருக்குமாயின் அது விந்தையிலும் விந்தையாக இருந்திருக்கும். சந்தர்ப்பங்கள் வேருக இருந் திருந்தால், அச்சம்பவத்திற்குச் சம்பந்தப்பட்டவர்களின் முழுச் சம்மதத்தோடு, மேலும் பரிசீலனை செய்வதற்கு வாய்ப்புக் கிடைக்கும் வரையில் அதை யாரிடமும் சொல்லு வதில்லை என்று நாங்கள் மறைத்து வைக்க முற்பட்டது விபரீதமாக முடிந்து விட்டது. உண்மையை அறியாத மக்கள் பலரும் பலவாருக விஷயத்தைத் திரித்துப் பேசலா யினர்; நம்பத்தகாத வதந்திகளைப் பரப்பலாயினர்.

அவ்வதந்திகளுக்கு ஒரு முற்றுப்புள்ளி வைக்க வேண் டும் என்பதற்காகவே வால்டமாரின் சம்பவத்தை நடந்தது நடந்தவாறு விளக்கிக் கூற முன் வந்துள்ளேன்.

கடந்த மூன்று ஆண்டுகளாக மெஸ்மரிசம் என் கவ னத்தை ஆக்ரமித்துவிட்டது. சுமார் 9 மாதங்களுக்கு முன் திடீரென்று ஒரு யோசனை தோன்றியது. மெஸ்மரி சத்தால் எத்தனையோ வகையான பரிசோதனைகள் செய் தேன். ஆனால் ஒரு சோதனையை—அதுவும் மிகவும் முக்கி யமான—அபூர்வமான—சோதனையைச் செய்து பார்க்கவே இல்லையே! அதாவது சாகுந் தருவாயில் உள்ளவனை மெஸ் மரிசம் செய்து பார்க்கவில்லை. இச்சோதனையையும் செய்து பார்க்க விரும்பினேன். மடிந்து கொண்டிருக்கும் மனிதன்

மெஸ்மரிசத்திற்கு மசியுமா? அப்படி அவன் மெஸ்மரிசத்திற்குக் கட்டுப்பட்டுக்கூடுமெனின் மரணம் மெஸ்மரிசத்தின் ஆற்றலை அதிகப்படுத்துமா அல்லது குறைக்குமா? மெஸ்மரிசத்தால் எவ்வளவிற்கு எவ்வளவு நேரம் வரையில் மரணத்தைத் தடுத்து நிறுத்த முடியும்? என்பன போன்ற கேள்விகளுக்குச் சரியான விடை கண்டு பிடிக்க விரும்பினேன். விந்தையான ஆசைதான்! ஆயினும் அதை நிறைவேற்றித்தான் ஆகவேண்டும் என்று தோன்றியது. ஆனால் அதை எவ்வாறு நிறைவேற்றுவது? பரிசோதனை செய்வதற்கேற்ற சந்தர்ப்பம் வாய்க்க வேண்டுமே! என் திட்டத்திற்கு யார் உடன்படக் கூடும்? சற்று சிந்தித்துப் பார்த்தேன். என் நண்பர் வால்டமாரின் ஞாபகம் வந்தது. வால்டமார்தான் அதற்குச் சரியான பேர்வழி.

வால்டமார் சிறந்த எழுத்தாளர். அவர் எழுதிய நூல்கள் யாவும் பிரசித்தி பெற்றவை. 1839-ஆம் ஆண்டிலிருந்து நியூயார்க் நகரில் வசித்து வந்தார். ஒல்லியானவர். தலை மயிர் கருப்பு. ஆனால் தாடி மீசைகளின் மயிர் வெள்ளை. தலை மயிர் பொய் மயிரோ என்றுகூட சந்தேகிப்பவர் பலர். வால்டமார் உணர்ச்சி மிக்கவர்; பயந்த சுபாவம் உடையவர். ஆகவே அவரை மெஸ்மரிசத்தால் வசப்படுத்துவது சுலபம். இரண்டொரு சமயங்களில் அவரை எளிதில் தூங்க வைக்க முடிந்தது. ஆனால் மற்ற சமயங்களில் என் முயற்சி பலிக்கவில்லை, அவருடைய உடல் நலம் சரியில்லாத காரணத்தால்.

அவர் எனக்கு அறிமுகமானதற்குச் சில மாதங்களுக்கு முன்பிருந்து அவருக்கு க்ஷயரோகம். அவர் உடல் நாளுக்கு நாள் தேய்ந்து வந்தது. தடுக்க முடியாத நோய்! வருந்துவதினால் என்ன பயன் என்று அவர் சர்வசாதாரணமாகப் பேசுவது வழக்கம். கூடிய சீக்கிரத்தில் தாம் அந்நோய்க்குப் பலியாகப் போவது திண்ணம் என்று தெரிந்தும் அவர்

கலங்கவில்லை. மரணத்திற்குச் சிறிதும் அஞ்சாதவராக இருந்து வந்தார்.

ஆகவே சாவுக்கும் மெஸ்மரிசத்திற்குமுள்ள தொடர்பைப்பற்றி ஆராய எண்ணியபோது வால்டமார் என் நினைவுக்கு வந்ததில் வியப்பொன்றும் இல்லை. அவருடைய தன்மையும் எனக்கு நன்கு தெரியும். அவருக்கு வேண்டியவர் யாரும் அமெரிக்காவில் இல்லை. சுருக்கமாகக் கூறின் அவர் விஷயத்தில் தலையிடுபவர் ஒருவரும் இல்லை.

என் திட்டத்தை அவரிடம் தெரிவித்தேன். என்ன ஆச்சரியம்! சிறிதும் தயங்காமல் என் கருத்துக்கு இசைந்தார். அதுவும் மிக்க ஆர்வத்தோடும் அக்கறையோடும், மரணத்தை மெஸ்மரிசம் தடுத்து நிறுத்துமா? நிறுத்தாதா? என்பதை அறிந்து கொள்ளுவதில் என்னைவிட அவருக்கு அதிக ஆவல் இருந்தது என்றுகூடச் சொல்லலாம்.

வால்டமாரின் நோயின் இயல்பும் என் திட்டத்திற்குச் சாதகமாயிருந்தது; சாவு நேரும் காலத்தை டாக்டர்கள் திட்டமாக அறிந்து சொல்லக்கூடியதாக இருந்தது. சாவு நெருங்கும் சமயத்தில் எனக்குத் தகவல் கொடுக்குமாறு வேண்டிக் கொண்டேன். சரி யென்றார்.

சொன்ன சொல்லைக் காப்பாற்றினார். சாவு நெருங்கிக் கொண்டிருந்த சமயத்தில் சீட்டெழுதிக் கொடுத்தனுப்பினார்:

என் அன்புள்ள ........,

உடனே புறப்பட்டு வாருங்கள். திருவாளர்கள் ம........., மு......... ஆகிய இரு டாக்டர்களும் ஒரே மனதாகச் சொல்லி விட்டனர், நான் நாளை நள்ளிரவுக்கு மேல் பிழைத்திருக்க மாட்டேன் என்று. நீங்கள் விரும்பியபடியே 24 மணி நேர அவகாசமிருக்கிறது.

வால்டமார்.

சீட்டெழுதிய அரைமணி நேரத்திற்கெல்லாம் அது

என் கைக்கு வந்து சேர்ந்தது. 15 நிமிடத்திற்குள் வால்டமாரின் வீட்டிற்குச் சென்று விட்டேன். பத்து நாட்களாகப் பார்க்காமல் அன்று அவரைப் பார்த்ததும் பிரமித்துப் போய் விட்டேன். பத்து நாட்களுக்குள் எவ்வளவு மாறுதல்! க்ஷயரோகத்தை என்புருக்கி நோய் என்று சொல்லுவதில் எள்ளளவும் தவறில்லை. உடல் மெலிந்து துரும்பு போல் ஆய்விட்டார். கன்னங்கள் குழிவிழுந்து ஒட்டிவிட்டன. முகத்தில் களையில்லை. தாடை எலும்புகள் பிதுங்கிக் கொண்டு காட்சி யளித்தன. இருமலும் கோழையும் ஓயாமல் வந்து கொண்டிருந்தன. நாடி ஒடுங்கி விட்டது. எனினும் தெளிவாகப் பேசக்கூடிய அளவிற்கு உடம்பில் சக்தி இருந்தது. நான் சென்ற சமயத்தில் நோட்டுப்புத்தகத்தில் குறிப்புக்கள் எழுதிக் கொண்டிருந்தார். படுக்கையில் தலையணைகளின்மேல் சாய்ந்து உட்கார்ந்திருந்தார். டாக்டர்கள் ம.. ...வும், மு.......வும் அவர் அருகில் இருந்து கவனித்துக் கொண்டிருந்தனர்.

வால்டமாரைக் குசலம் விசாரித்து விட்டு டாக்டர்களை அப்பால் அழைத்துச் சென்று நோயாளியின் நிலையைப் பற்றி விசாரித்தேன். இடது சுவாசப்பை 18 மாதங்களாகச் சிறிதும் பயன்படாத நிலையில் இருந்து வந்ததாம்; குருத்தெலும்புபோல் இறுகி விட்டதாம். வலது சுவாசப் பையின் மேல் பாகமும் ஏறக்குறைய அதே நிலையில்தான் இருந்ததாம்; கீழ்ப்பாகம் நைந்து போய் விட்டதாம். சுவாசப் பைகளில் ஓட்டைகள் ஏற்பட்டு விட்டனவாம். ஒரு பகுதி விலா எலும்போடு ஒட்டி விட்டதாம். அவ்வாறு ஒட்டியிருந்தது கடந்த மூன்று நாட்களில்தான் தெரிய வந்ததாம். வால்டமார் ஞாயிற்றுக்கிழமை நள்ளிரவில் இறந்து விடுவார் என்று டாக்டர்கள் கூறினர். நான் அங்குச் சென்றது சனிக்கிழமை மாலை 7 மணி.

டாக்டர்கள் ம .....வும், மு.........வும் நோயாளியின் நிலையை விளக்கிக் கூறிவிட்டு விடை பெற்றுச் சென்று

விட்டனர். அவர்களுக்கு மீண்டும் அங்கு வரவேண்டும் என்ற எண்ணம் இல்லை. எனினும், எனது வேண்டு கோளின் பேரில் ஞாயிறு இரவு 10 மணிக்கு நோயாளி யைப் பார்க்க வருவதாக இசைந்தனர்.

டாக்டர்கள் சென்ற பின்பு, நெருங்கிக் கொண்டிருக் கும் சாவைப் பற்றியும் என் பரிசோதனையைப் பற்றியும் வால்டமாரும் நானும் மனம் விட்டுப் பேசினோம். உட னடியாகப் பரிசோதனையைத் தொடங்குமாறு என்னை வற் புறுத்தினார். புதிய விஷயங்களை அறிந்து கொள்ளுவதில் அவ்வளவு ஆர்வம் அவருக்கு இருந்தது.

வால்டமாரைக் கவனித்துக் கொள்ள ஒரு ஆண் நர்சும் ஒரு பெண் நர்சும் இருந்தனர். அவர்களை மட்டும் சாட்சி யாக வைத்துக்கொண்டு பரிசோதனையைத் தொடங்க எனக்கு விருப்பம் இல்லை. அவர்களினும் நம்பத் தக்கவர் வேறு யாராவது முன்னிருந்து என் பரிசோதனையைக் கவ னித்துக் கொள்ளுவது நல்லதென்று தோன்றியது. அசம் பாவிதமாக ஏதாவது நேர்ந்துவிட்டால் உண்மையை நிரு பிக்க நம்பத்தக்க சாட்சிகள் வேண்டுமல்லவா? ஆகவே அடுத்த நாளிரவு சுமார் 8 மணிக்கு எனக்குத் தெரிந்த மருத் துவ மாணவர் மே...... வரும்வரையில் பரிசோதனையைத் தொடங்கவில்லை. டாக்டர்கள் வரும் வரையில் காத்திருக்க வேண்டுமென்று எண்ணினேன். எனினும் வால்டமார் அவசரப்படுத்தியதாலும் அவருடைய நிலை வர வர மிகவும் மோசமாய்க்கொண்டு வந்ததாலும் ஒரு கணங்கூடத் தாம திப்பதற்கு அவகாசமில்லை.

என் வேண்டுகோளுக்கிணங்கி மாணவர் மே......... நடந்த நிகழ்ச்சிகளை யெல்லாம் ஒன்று விடாமல் குறிப் பெடுத்துக் கொண்டார். அவ்வாறு அவர் எழுதிவைத்த குறிப்பின் துணைகொண்டு நடந்த நிகழ்ச்சிகளை விவரமாகக் கூற முற்படுகிறேன்.

வால்டமாரைப் பார்த்து, "நான் மெஸ்மரிசம் செய்

வது முழுச் சம்மதந்தானே! தங்கள் சம்மதத்தைத் திட்ட வட்டமாக மாணவர் மே.....விடம் சொல்லிவிடுங்கள்." என்றேன்.

அதற்கு அவர், "ஆம். என்னை மெஸ்மரிசம் செய்வது எனக்குச் சம்மதந்தான். காலம் தாழ்த்திவிட்டீரே என்று தான் வருந்துகின்றேன். உடனே மெஸ்மரிசம் செய்யத் தொடங்குங்கள்" என்றார்.

உடனே என் பரிசோதனையைத் தொடங்கினேன். என் மனோசக்தி முழுமையும் செலுத்தி மெஸ்மரிசம் செய்தேன். எனினும் அவ்வளவாகப் பயன் ஏற்படவில்லை. பத்து மணிக்கு டாக்டர்களும் வந்துவிட்டனர். அவர்களுக்கு என் திட்டத்தை விளக்கிக் கூறியபோது அவர்கள் எந்த விதமான மறுப்பும் கூறவில்லை. வால்டமாரின் வலது கண்ணையே உற்றுப் பார்த்து மனவசியப்படுத்த முயன்றேன்.

அச் சமயத்தில் வால்டமாரின் நாடித் துடிப்பு சரியாகப் புலப்படவில்லை. மூச்சு தட்டுத் தடுமாறி அரை நிமிடத்திற்கு ஒரு முறை வந்தது. கால் மணி நேரம் அதே நிலை இருந்தது. அதன் பின்னர்—பெருமூச்சு வந்தது. மூச்சு இழுப்பு நின்றுவிட்டது. உடல் பனிக்கட்டிபோல் சில்லிட்டுப் போய்விட்டது.

பதினொரு மணிக்கு ஐந்து நிமிடங்கள் இருக்கும்போது மெஸ்மரிசத்தின் அறிகுறிகள் காணப்படலாயின. கண்கள் சுழன்றன. கண் செருகத் தொடங்கியது. மீண்டும் மெஸ்மரிசப் பயிற்சியைச் செய்ததும் கண்கள் நன்றாக மூடிவிட்டன. வால்டமார் மனவசிய நித்திரையில் ஆழ்ந்துவிட்டார். அப்படியிருந்தும் திருப்தியடையாமல் மனோசக்தி முழுவதையும் செலுத்தித் தொடர்ந்து மெஸ்மரிசம் செய்தேன். வால்டமாரின் உடல் விறைத்துப்போகும் வரையில் பயிற்சியை விடவில்லை. கால்களை நீட்டிக் கைகளை விரித்துத் தலையைச் சற்று மேலே தூக்கியிருக்கும் நிலையில் உடல் கிடக்கும்படி செய்தேன்.

இதைச் செய்து முடிக்கும்போது நள்ளிரவு ஆய்விட் டது. உடன் இருந்தவர்களை வால்டமாரின் நிலையைப் பரி சோதித்துப் பார்க்கச் சொன்னேன். பலவிதமாகப் பரி சோதித்துப் பார்த்தனர். வால்டமார் மனவசியத் தூக்கத் தில் ஆழ்ந்துவிட்டார் என்பதை ஒப்புக்கொண்டனர். டாக் டர்கள் வியந்தனர், டாக்டர் ம...... இரவு முழுவதும் அங்கேயே தங்கியிருக்க முடிவு செய்துகொண்டார். டாக் டர் மு .....காலையில் மறுபடியும் வருவதாகக் கூறிச்சென்று விட்டார். மாணவர் மே......வும் நர்சுகளும் அங்கேயே இருந்தனர்.

வால்டமாரை அதே நிலையில் இருக்க விட்டுவிட்டு நாங் கள் சற்று நேரம் ஓய்வு எடுத்துக்கொண்டோம். 3 மணிக்கு வால்டமாரின் நிலையைக் கவனித்தோம். டாக்டர் மு...... செல்லும்போது வால்டமார் என்ன நிலையில் இருந்தாரோ அதே நிலையில்தான் அப்போதும் இருந்தார். நாடி துடிப் பது சரியாகத் தெரியவில்லை. அதே மாதிரிதான் மூச்சும். கண்கள் மூடியிருந்தன. கைகால்கள் கல்லைப்போல் விறைத் துச் சில்லென்றிருந்தன. எனினும் சாவின் சாயல் காணப் படவில்லை.

என் கையை அப்படியும் இப்படியுமாக அசைத்து அதற்கேற்ப வால்டமாரின் கையும் அசைகின்றதா என்று சோதித்துப் பார்த்தேன். முன்னர் அத்தகைய சோதனை களில் எனக்கு வெற்றி கிடைக்கவே இல்லை. ஆகவே அரை மனத்துடன் அச்சோதனையைச் செய்ய முற்பட்டேன். என்ன ஆச்சரியம்! என் கை சென்றபடியெல்லாம் வால்ட மாரின் கையும் நகர்ந்தது. பேச்சுக் கொடுத்துப் பார்க்கலாம் என்று தோன்றியது.

"வால்டமார்! தூங்கிக் கொண்டிருக்கிறீரா?" என்று கேட்டேன்.

பதில் கிடைக்கவில்லை. எனினும் அவருடைய உதடு கள் அசைவதைக்கண்டு மறுபடியும் அதே கேள்வியைக்

கேட்டேன். மூன்றும் தடவையும் கேட்டபோது உடல் குலுங்கியது. கண்கள் சற்றுத் திறந்தன. உதடுகள் துடித்தன.

"ஆம்! இப்போது தூக்கம். என்னை எழுப்பாதீர்கள்—இப்படியே நான் செத்துப் போகின்றேன்." என்று தட்டுத்தடுமாறிப் பேசினார்.

உடலைத் தொட்டுப் பார்த்தேன். முன்னிருந்தபடியே விறைத்துக் கிடந்தது. வலது கை நான் காட்டியபடியெல்லாம் நகர்ந்தது. மறுபடியும் பேச்சுக் கொடுத்தேன்.

"வால்டமார்! இப்போதுகூட நெஞ்சு வலிக்கிறதா?" என்று கேட்டேன்.

"வலி இல்லை—நான் மடிந்து கொண்டு இருக்கிறேன்." என்று பதில் வந்தது. குரல் முன்னைவிடத் தெளிவாக இருந்தது.

மீண்டும் தொந்தரவு செய்வது சரியல்ல என்று வாளா இருந்தேன். பொழுது விடியும் தருவாயில் டாக்டர் மு...... வந்து சேர்ந்தார். வால்டமார் இன்னும் சாகாமல் இருப்பதைக் கண்டு பெரிதும் வியந்தார். நாடியைப் பிடித்துப் பார்த்துவிட்டு மீண்டும் பேச்சுக் கொடுக்கச் சொன்னார்.

"வால்டமார்! இன்னும் தூக்கமா?" என்று கேட்டேன்.

பதில் வருவதற்குச் சற்றுத் தாமதம் ஏற்பட்டது. மீண்டும் மீண்டும் அதே கேள்வியைக் கேட்டேன். நான்காவது தடவை கேட்டபோது,

"ஆம்! இன்னும் தூக்கம்—செத்துக் கொண்டிருக்கிறேன்—" என்று பதில் வந்தது. பேச்சுத் தெளிவாக இல்லை. குரல் தணிந்து விட்டது.

சாவு வரும் வரையில் நோயின் துன்பம் தெரியாமலிருக்க வால்டமாரை அதே நிலையில் விட்டுவிடுவது நலம் என்று டாக்டர்கள் கருதினர்.

இன்னும் சில நிமிடங்களில் வால்டமார் இறந்துவிடுவார் என்று டாக்டர்கள் எண்ணினர். எனினும் மீண்டும் ஒரு தடவை பேச்சுக் கொடுத்துப் பார்க்க வேண்டுமென்று முன் கேட்ட அதே கேள்வியைக் கேட்டேன்.

நான் கேள்வி கேட்ட சமயத்தில் வால்டமாரின் முகத்தில் பெரும் மாறுதல் ஏற்பட்டது. கண்கள் சற்றுத் திறந்தன. கருவிழிகள் மேலே போய்விட்டன. உடல் செத்த பிணம்போல் வெளுத்துவிட்டது. நோயினால் வீங்கியிருந்த கன்னம் திடீரென்று குழிந்து எலும்போடு எலும்பாக ஒட்டிவிட்டது, எரிந்துகொண்டிருக்கும் மெழுகுவர்த்தி மூச்சுக்காற்றுப்பட்டு அணைந்துவிடுவதுபோல், பற்களை இறுக மூடியிருந்த மேல் உதடு விலகிவிட்டது. கீழ்த் தாடை கீழே குவிந்துவிட்டது. வாய் திறந்தது. வீங்கிக் கருத்துப்போன நாக்குத் தெரிந்தது. என்னுடன் இருந்தவர்கள் யாருமே மரணக் கொடுமைகளை நேரில் கண்டறியாதவர்கள். ஆகவே அக்கொடிய காட்சிகளைக்கண்டு எல்லோரும் பயந்துவிட்டனர். வால்டமாரின் தோற்றம் கொடூரமாய் இருந்தது. பார்க்கச் சகிக்கவில்லை.

வால்டமார் இறந்துவிட்டார். பிணத்தை நர்சுகளின் கண்காணிப்பில் விட்டுவிட்டு வெளியேற ஆயத்தமானோம். அச்சமயத்தில் வால்டமாரின் நாக்குப் பலமாக அசைவதைக் கண்டோம். அது ஒரு நிமிஷ நேரம் அசைந்தது அதன் பின்னர் திறந்த வாயிலிருந்து விவரிக்கமுடியாத சப்தம் வெளிவந்தது. அதைக் காதில் கேட்பதற்குக் கர்ண கடோரமாய் இருந்தது. அத்தகைய சப்தத்தை யாருமே கேட்டிருக்க முடியாது. அபூர்வமான சப்தம். அபூர்வத்திற்குக் காரணம் இரண்டு புதுஇயல்புகள் இருந்த அந்தச் சப்தத்தில் அச்சப்தம் வெகு தொலைவிலிருந்தோ அல்லது பூமிக்குள் உள்ள ஆழமான குகையிலிருந்தோ வந்த சப்தம் போல் இருந்தது. அப்படியிருந்தும் அச்சப்தம் என் காதுகளுக்குத் தெளிவாகக் கேட்டது. நான் கேட்ட கேள்விக்கு

அவர் சொன்ன பதில்தான் அவ்வாறு எனக்குப் பட்ட தெனக் கருதுகிறேன்.

"இன்னுமா தூக்கம்?" என்று நான் கேட்டேன் அல்லவா? அதற்குப் பதில் கிடைத்தது,

"ஆம்;—இல்லை;—நான்—தூங்கிக்கொண்டிருந்தேன்—இப்போது—இப்போது நான் இறந்து விட்டேன் என்று.

இறந்தவர் பேசினார். இறந்தவர் பேசினால் யாருக்குத் தான் பயமாய் இருக்காது? அங்கிருந்த எல்லோரும் பயந்து நடுங்கி ஒடுங்கிப் போயினர். மாணவர் மே............வுக்கு மயக்கம் வந்துவிட்டது. நரசுகள் பயந்து அறையை விட்டே ஓடிவிட்டனர். நானும் அச்சத்தால் நடுங்கினேன். எனினும் அறையைவிட்டு அகலவில்லை. மாணவரை மயக்கம் தெளிவிக்க ஒரு மணி நேரமாயிற்று. மாணவருக்குச் சுயஉணர்வு வந்ததும் வால்டமார் பால் எங்கள் கவனத்தைத் திருப்பினோம்.

வால்டமாரின் நிலை முன்னிருந்தபடியே இருந்தது' ஒரேயொரு புது மாறுதல். மூச்சு அடியோடு நின்றுவிட்டது. நாடித் துடிப்பில்லை. உடலில் இரத்தம் இருக்கின்றதா என்று பார்க்கக் கையில் சிறுகாயம் செய்தோம். துளி இரத்தங்கூட வரவில்லை. கையும் முன்போல் என் மனோ வசியத்திற்குக் கீழ்ப்படியவில்லை. என் கை சென்றபடியெல்லாம் அதையும் நகரும்படி செய்ய முற்பட்ட முயற்சி தோல்வியுற்றது. மெஸ்மரிசத்தின் கட்டு நீங்கவில்லை என்பதற்கு ஒரே ஒரு அறிகுறிதான் காணப்பட்டது. அதாவது, வால்டமாரை நான் கேள்வி கேட்டபோதெல்லாம் நாவு அசைந்தது. அவ்வசைவிலிருந்து என் கேள்விக்குப் பதில் கூற முயன்றார் என்று தோன்றியது. ஆனால் பேசும் அளவிற்குத் துணிவாற்றல் இல்லை. மற்றவர்கள் யார் கேள்வி கேட்டாலும் நாவசைவுகூட நிகழவில்லை. மற்றும் சில நர்சுகளை வரவழைத்தோம். வால்டமாரைப்

பத்திரமாக பார்த்திருக்கப் பணித்துவிட்டு டாக்டர்களும் மாணவரும் நானும் அங்கிருந்து வந்துவிட்டோம்.

மாலையில் மீண்டும் அவர் வீட்டுக்குச் சென்றோம். அவருடைய நிலையைப் பரிசோதித்துப் பார்த்தோம். முன்னிருந்த நிலையே நீடித்தது. எத்தகைய மாறுதலும் காணப் பெறவில்லை. அவரை மனோவசியத் தூக்கத்திலிருந்து எழுப்பலாமா; வேண்டாமா என்று சிறிதுநேரம் யோசித்தோம். எழுப்புவதனால் எத்தகைய நன்மையும் ஏற்படாதென்பதில் யாருக்கும் கருத்து வேறுபாடு இல்லை.

என்னுடைய திட்டம் நிறைவேறியது. என் கேள்விகளுக்கு விடைகள் கிடைத்துவிட்டன. மெஸ்மரிசத்திற்குச் சாவைத் தடுத்து நிறுத்தும் ஆற்றல் உண்டு என்பது தெளிவாயிற்று. அதைப்பற்றிச் சந்தேகமே இல்லை.

வால்டமாரை எழுப்பினால் உடனடியாக இறந்துதானே போய்விடுவாரென்று எழுப்பாமல் விட்டுவிட்டோம்.

அன்றுமுதல் சுமார் ஏழு மாதகாலம் ஒவ்வொருநாளும் வால்டமார் வீட்டிற்குச் சென்று அவரைப் பார்த்து வந்தேன். அவ்வப்போது டாக்டர்களும் மற்ற நண்பர்களும் அவரைப்பார்க்க என்னுடன் வந்திருந்தனர். அந்த 7 மாத காலம் முழுவதும் வால்டமாரின் உடல் அப்படியேதான் இருந்தது. முன்னிருந்த நிலையில் ஒரு சிறிதும் மாறுபடவில்லை. நர்சுகள் தொடர்ந்து கண்காணித்து வந்தனர்.

கடைசியாகக் கடந்த வெள்ளிக்கிழமையன்று வால்டமாரை எழுப்ப முறற்சிப்பது என்று முடிவு செய்தோம். அம்முயற்சி விபரீதமாகமுடியும் என்று தோன்றியிருந்தால், அம்முயற்சியில் ஈடுபட்டே இருந்திக்கமாட்டோம். அம்முயற்சியின் விபரீத விளைவே பலரும் பலவிதமாகப் பேசுவதற்குக் காரணமாயிற்று.

வால்டமாரை மெஸ்மரிசத் தூக்கத்திலிருந்து எழுப்ப வழக்கமான பயிற்சிகளையே செய்தேன். கொஞ்சநேரம்

ஒரு பயனும் தெரியவில்லை. பின்னர் தூக்கம் கலையத் தொடங்கியது. கருவிழி சற்றுக் கீழே இறங்கியது. அது இறங்கும்போது கண்களிலிருந்து மஞ்சள் நிறமான திரவம் குபு குபுவென்று வழிந்தது. அத்திரவம் துர்நாற்றம் வீசியது. டாக்டர் மு.........கேள்வி கேட்குமாறு தூண்டினர்.

"வால்டமார், இப்போது உங்களுடைய அபிலாஷைகள் என்ன என்று எங்களுக்குச் சொல்ல முடியுமா!" என்று கேட்டேன்.

கேள்வி கேட்ட மாத்திரத்தில் வால்டமாரின் கன்னம் வீங்கிவிட்டது. தாடைகளும் உதடுகளும் விறைத்திருந்த போதிலும் நாக்கு வேகமாக அசைந்தது. நான் முன்னர் விவரித்த பயங்கரச் சப்தம் கேட்டது.

"உங்களுக்குப் புண்ணியம் உண்டாகட்டும்—உடனே...உடனே............என்னைத் தூங்க வையும்...... அல்லது உடனே........எழுப்பி விடும்..................நான் இறந்து போனேன்," என்ற பதில் வந்தது.

நான் பயந்து விட்டேன். சிறிதுநேரம் திகைத்து நின்று விட்டேன். என்ன செய்வதென்றே தோன்றவில்லை. வால்டமாரை மீண்டும் தூங்கச் செய்ய முயற்சி செய்தேன். பயத்தின் காரணமாக மனேசக்தி செயலற்றுப் போய்விட்டது. தூங்கவைக்க முடியவில்லை. ஆகவே வேறு வழியின்றி எழுப்ப முயற்சி செய்தேன். வால்டமார் விழித்து எழுவதைப் பார்க்கவேண்டும் என்று எல்லோரும் ஒரே ஆவலாக இருந்தனர்.

என் முயற்சி வெற்றி அளித்தது. ஆனால், யாருமே எதிர்பாராதது நடந்தது. மெஸ்மரிசப் பாஸ்களை (Passes) வேகமாகச் செய்தேன். "இறந்தேன்! இறந்தேன்!" என்ற ஓசையோடு வால்டமாரின் உடல் கணநேரத்தில் திடீரென்று சுருங்கிவிட்டது; பொடிப் பொடியாக நொறுங்கி என் காலடியில் வந்து வீழ்ந்தது. படுக்கையின்மேல் அழுகிக் கெட்டுப்போய் நாறிய திரவம் பரந்து கிடந்தது.

## கரும்பூனை

நான் மிகக் கொடிய சம்பவமொன்றை உங்களுக்குக் கூறப் போகின்றேன். அச்சம்பவம் மிகக் கொடியதுதான். ஆனால் அது சர்வ சாதாரணமான சம்பவமே. அதை நீங்கள் நம்புவீர்களென்று நான் எதிர்பார்க்கவில்லை. நீங்கள் அதை நம்ப வேண்டுமென்று வேண்டிக்கொள்ளவும் இல்லை. நானே என்னை நம்பமுடியாமல் இருக்கும்போது, நீங்கள் அதை நம்பவேண்டுமென்று கேட்பதற்கு நான் பைத்தியம் பிடித்தவனா என்ன? எனக்குப் பைத்தியம் பிடிக்கவும் இல்லை; நான் பகல் கனவு காணவும் இல்லை. எனினும் நீங்கள் நம்பமுடியாத ஒரு சம்பவத்தையும் கூற முற்பட்டதன் நோக்கம் வேறு. நான் மரணத்தின் எல்லையை எட்டிப் பிடித்துக் கொண்டிருக்கிறேன். வீடு 'போ! போ!' என்கின்றது; காடு 'வா! வா!' என்று அழைக்கின்றது. நான் இப்பவோ, பிறகோ அல்லது நாளைக்கோ இறப்பது திண்ணம். இறக்கும் போதாவது மனச் சஞ்சலம் இல்லாமலிருக்க வேண்டுமென்று ஆசைப்படுகிறேன். என் நெஞ்சை அழுத்திக் கொண்டிருக்கும் பாரத்தைக் குறைக்க விரும்புகின்றேன். துன்பம் சொல்லக் குறையும். வெறும் வீட்டு நிகழ்ச்சிகளை நடந்தது நடந்தவாறு தெளிவாகவும் சுருக்கமாகவும் கூறவேண்டும் என்பதே என் உடனடியான நோக்கம். அன்றாட வாழ்க்கையிலே காணக்கூடிய சர்வ சாதாரணமான நிகழ்ச்சிகள்தான். ஆயினும் அவைகள் என்னை ஆட்டி அலைக்கழித்து விட்டன; ஆற்றொணாத் துன்பத்திற்கு ஆளாக்கின; அச்சத்தைத் தந்தன; என்னைக் கொஞ்ச கொஞ்சமாக அழித்துவிட்டன. அநேகம் பேருக்கு அத்தகைய நிகழ்ச்சிகள் அற்பச் செயலாகப் படலாம். ஆனால் எனக்கு அச்சத்தைத் தந்த அரிய செயல்களாக முடிந்தன. ஒருவேளை எதிர்காலத்தில், அமைதியும் சிந்திக்

கும் ஆற்றலும் அடக்கமும் மிக்க அறிஞர் எவராவது தோன்றி நான் அஞ்சி நடுங்கிய சந்தர்ப்பங்கள் அனைத்தும் இயல்பான காரண காரியத்தோடு கூடிய சாதாரண நிகழ்ச்சிகளேயென்று நிரூபித்துக் காட்டினாலும் காட்டக் கூடும்.

நான் இளமையிலிருந்தே பணிவும், பரிவும், உயிர்களின் பால் இரக்கப்படும் சுபாவமும் உடையவன். "நீ இப்படி இளகிய மனமுள்ளவனாக இருந்தால் உன்னால் வாழ முடியுமா இவ்வுலகில்!" என்று நண்பர்கள் அடிக்கடி கூறும் அளவிற்கு அருள் நெஞ்சினனாக இருந்துவந்தேன். உயிர்ப் பிராணிகளைக் கண்டால் எனக்கு வெகு பிரியம். பெற்றோர்கள் வாங்கித் தந்த நாய் முதலிய பலவகையான பிராணிகளையும் பிரியமாக வளர்த்தேன். அவைகளுக்கு ஆகாரம் கொடுப்பதும் அவைகளோடு கொஞ்சி விளையாடுவதும் ஆனந்தமான பொழுது போக்காக இருந்தன. அப்பிராணிகளை வெறும் விலங்கினங்களாக நான் எண்ணவில்லை நான் வேறு அவைகள் வேறாக நான் கருதவில்லை. அவைகளை என் உடன்பிறந்த சகோதர சகோதரிகளாகவும் விளையாட்டுத் தோழர்களாகவும் கருதி வந்தேன்.

இவ்வியல்பு நான் பெரியவனாக வளர்ந்த பின்புகூட மாறவில்லை. பெரியவன் ஆனபின்பும் உயிர்ப்பிராணிகளை வளர்ப்பதில் ஆர்வம் காட்டினேன்; அதிலே அளவுகடந்த இன்பம் பெற்றேன். நன்றியுள்ள நாயை வளர்த்து, அதன் அன்பிலும் விசுவாசத்திலும் திளைத்தவர்களுக்கு மிருக வளர்ப்பால் நான் பெற்ற இன்பத்தை விளக்கிக் கூறத் தேவையில்லை. நாய் போன்ற பிராணிகளை வளர்த்தவர்கள் அறிவார்கள், உயிர்ப்பிராணிகளின் கபடமற்ற அன்பை. பகுத்தறிவு உள்ளவர்களாகக் கருதப்படும் மனிதர்களின் அவநம்பிக்கையையும் போலி நட்பையும் கண்டு ஏமாற்றம் அடைபவர்கள் சுயநலமற்ற உயிர்ப்பிராணிகளின் தியாக உணர்வையும் பெருமையையும் அன்பின் மேன்மையையும் நன்கு அறிவார்கள். மனிதன் மிருகத்தைவிட உயர்ந்தவன்

என்று கருதப்பட்டாலும், மிருகம் மனிதனைவிடத் தியாகத்திலும் நன்றியறிதலிலும் சிறந்தது என்பது கண்கண்ட உண்மை. மனிதன் நடிப்பதிலே வல்லவன்; உள்ளொன்று வைத்துப் புறமொன்று பேசுவான்; அன்பு இல்லையென்றாலும் அன்பு உள்ளவன்போல் நடிப்பான். ஆனால் மிருகத்திற்கு நடிக்கத் தெரியாது; அதன் அன்பும் விசுவாசமும் கலப்பற்றவை. அவ்வன்பிலும் விசுவாசத்திலும் போலி நடிப்பில்லை, உண்மை நிலவுகிறது; சுயநலமில்லை, தியாகம் ததும்புகிறது; வஞ்சனை இல்லை, நன்றியறிதல் நிலவுகிறது.

எனக்கு வாழ்க்கைத் துணைவியாக வாய்த்த நங்கை நல்லாளும் என் இயல்புக்கு ஏற்றவளாகவே இருந்தாள். அவள் அடக்கமே உருவானவள்; பண்பும் பணிவும் உடையவள்; அன்பும் அருளும் இரக்கமும் அமையப் பெற்றவள்; இன்னா செய்தவருக்கும் இனியவே செய்யும் சால்புடையவள். உயிர்ப்பிராணிகளை வளர்ப்பதில் எனக்கிருந்த பிரியத்தைக் குறிப்பால் அறிந்துகொண்டு என் மனத்திற்குப் பிடித்த நல்ல பிராணிகளையெல்லாம் வாங்கிக் கொண்டு வந்து சேர்த்தாள் வீட்டில் வளர்ப்பதற்கு. 'காக்கை, குருவி எங்கள் சாதி' என்று கவிஞர் பாடினதுபோல் பல வகைப் பறவைகளும் பொன்மீன்களும் அழகிய நாயும் முயல்களும் சிறிய குரங்கு ஒன்றும் பூனை ஒன்றும் என் குடும்ப உறுப்பினர்களாயின.

பூனை பெரியது; அழகுள்ளது; கருநிறமானது; கூரிய புத்தியுடையது. என் மனைவி பூனையின் அறிவைக் கண்டு வியந்து பாராட்டும் போதெல்லாம், 'கரும்பூனைகளெல்லாம் சூனியக்காரிகளின் மாற்றுருவம்' என்ற பழங்காலப் பழமொழியைக் குறிப்பிடுவது வழக்கம். என் மனைவி இப்பழமொழியைக் குறிப்பிட்டது மூட நம்பிக்கையால் அல்ல; வினையாகவும் அல்ல; விளையாட்டாகத்தான்.

பிளட்டோ—இதுதான் அப்பூனையின் பெயர்—என் செல்லக் குழந்தையேதான். அவனோடு விளையாடுவதென்றால் அலாதிப் பிரியம். பிளட்டோவுக்கு நான்தான் ஆகாரம் அளிப்பேன். நான் வீட்டில் இருக்கும்போது அவன் என்னை விட்டுப் பிரியவே மாட்டான்; என்னை சுற்றிச் சுற்றிக் கொஞ்சி விளையாடுவான். நான் வெளியே சென்றாலும் என்கூடவே வரப் பிரியப்படுவான். அவனைத் தடுத்து நிறுத்தி வீட்டிலேயே விட்டுவிட்டுச் செல்வதற்கு வெகு சிரமப் படுவேன்.

இவ்வாறாக நானும் பிளட்டோவும் இணைபிரியாத உண்மைத் தோழர்களாகப் பல வருஷகாலம் நெருங்கிப் பழகி வந்தோம். காலப்போக்கில் என் சுபாவம் பெரிதும் மாறுபட்டு விட்டது. அன்புத் தெய்வம் வீற்றிருந்த என் உள்ளக்கோயில் சாக்கடை யாயிற்று. மதுவரக்கனுக்கு அடிமையானேன். இரக்கம், இருந்த இடம் தெரியாமல் மறைந்தது. நாளுக்குநாள் முன் கோபியானேன். முன்பு பரவசமளித்த பொருள்களெல்லாம் இப்போது வேப்பங் காய் ஆயின. எதைக் கண்டாலும் சீறி விழுந்தேன். இரக்கமற்ற அரக்கனானேன்.

மனைவியைக் கண்டால் பிடிப்பதில்லை. எடுத்ததற்கெல்லாம் அவள்பேரில் சீறி விழுந்தேன். கண்டபடியெல்லாம் திட்டினேன். வாயளவோடு நின்று விடாமல் என் கைவரிசையையும் காட்டினேன். பூமியினும் பொருமைசாலியான என் மனைவி என் சீற்றத்தையும் வசை மொழிகளையும் அடியையும் உதையையும் பொறுத்துக் கொண்டிருந்தாள். நான் பிரியத்தோடு வளர்த்து வந்த பறவைகளும் மீனும் நாயும் பிறவும் என் மாறுதலை உணர்ந்து கொண்டன. என்னைக் கண்டால் எமனைக் கண்டதுபோல் பயந்து நடுங்கின; என் அருகில் வருவதற்கு அஞ்சின. அவைகளை உதாசீனம் செய்தேன். அடித்துத் துன்புறுத்தினேன். பாவம்! வாயில்லாப் பிராணிகள்

என் மிருகவெறிக்குப் பலியாயின. முயல்களோ, குரங்கோ, நாயோ தற்செயலாக என் கண்ணுக்குத் தென்பட்டபோது அடிக்குத் தப்பியதே கிடையா. ஆனால் பிளட்டோ மட்டும் அடிக்குத் தப்பித்து வந்தான். அவன் மேல் எனக்கு அடியோடு வெறுப்பு ஏற்படவில்லை. அடிப்பதற்குத் தயங்குமளவிற்காவது அன்பு இருந்தது. ஆயினும் அதுவும் அதிக காலம் நிலைக்கவில்லை. மதுவரக்கனின் ஆதிக்கம் வலுப் பெற்றது. பிளட்டோவின் பேரில் இருந்த கொஞ்ச அன்பும் பறந்தோடி விட்டது. அவனும் என் குடிவெறிக்கு ஆளாயினான்.

ஒரு நாள் இரவு மூச்சுத் திணறும் வரையில் குடித்து விட்டு வீட்டிற்குத் திரும்பினேன். பிளட்டோவிற்கு என்னைக் காணப் பிடிக்கவில்லை போலும் என்று நானே முடிவு செய்து கொண்டேன். இந்தப் பூனைக்கு இவ்வளவு திமிரு! என்று அதைப் பிடித்து இழுத்தேன். வலி பொறுக்க முடியாமலோ அல்லது பயத்தினாலோ என் கையைக் கடித்து விட்டது. எனக்குப் பொல்லாத கோபம் வந்தது. கோபத்தில் என்னையே மறந்தேன். கோபத்தைக் கண்டதும் மனித இயல்பு பகலவனைக் கண்ட பனிபோல் மறைந்தது. மிருக இயல்பு வீறிட்டெழுந்தது. கேவலம்! நான் வளர்த்த கிடாவே என் மார்பில் பாய்வதா? சினம் பொங்கி எழுந்தது. பழிக்குப் பழி! சட்டைப் பையிலிருந்த கத்தியை எடுத்தேன். பூனையைக் கழுத்தைப் பிடித்து நெறுக்கிக் கத்தியால் அதன் கண்ணைத் தோண்டி யெறிந்தேன். அஞ்சாமல் செய்தேன் அப்பாவச் செயலை. அதை இப்போது நினைக்கும்போது குலையெல்லாம் நடுங்குகிறது; மெய் சிலிர்க்கிறது.

காலையில் எழுந்ததும் நான் செய்த பாவச் செயலை நினைத்து வருந்தினேன். ஒரு பாவமும் அறியாத பிளட்டோவின் குருட்டுக் கண்ணைப் பார்த்துப் பரிதாபப் பட்டேன். பரிதாபமெல்லாம் எவ்வளவு நேரத்திற்கு! மீண்

டும் குடியில் திளைத்தேன். செய்த தவறைப் பற்றிய நினைப் பொழிந்தேன்.

சில நாட்களில் பூனைக்குப் புண் ஆறிவிட்டது, கண்ணிருந்த இடத்தில் காசகலக் குழி! பார்ப்பதற்குப் பயங்கரமாக இருந்தது. இப்போதெல்லாம் பூனை துன்பத்திற்கு ஆளாகவில்லை. என் கண்களுக்குப் பட்டால்தானே! என்னைக் கண்டால் ஓடிப்போய் ஒளிந்து கொள்ளும்! என் பக்கமே தலை காட்டாது. ஒரு காலத்தில் என்னைக் கண்டதும் ஆவலோடு ஓடி வந்த பூனை இப்போது என்னைக் கண்டால் வெறுத்து ஓடுவதா? இதை நினைக்க நினைக்க மீண்டும் அப்பூனையின் பேரில் வெறுப்புத் தட்டியது.

வேண்டுமென்றே தவறு செய்யும் விபரீத மனப்பான்மை—கோணல் புத்தி—உடையவனானேன். ஒன்றைத் தவறு என்று தெரிந்தும் அதைச் செய்யும் மனப்பான்மை மனம் படைத்த மனிதனுக்கே இயல்பு போலும்! சட்டத்தை மீறுவது சரியல்ல என்று தெரிந்தும் சட்டத்தைச் சாக்கடைச் சரக்காகக் கருதுபவர்கள் எத்தனை பேர்!

கோணல் புத்தி என் இறுதி வீழ்ச்சிக்கு ஏதுவாயது. ஒன்றன்பின் ஒன்றாகப் பல தவறுகளைச் செய்யக் காரணமாய் அமைந்தது. துன்பத்தைத் துன்பத்திற்காகவே—தவறைத் தவறுக்காகவே செய்ய விழையும் மனப்பான்மை, யாருக்கும் தீங்கு செய்தறியாத பூனையை அடியோடு ஒழித்துக்கட்ட முற்பட்டது. அது வருந்திச் சாவதைக் கண்டு களிக்க விழைந்தது என் விபரீத மனப்போக்கு!

ஒரு நாள் காலையில் பூனையைப் பிடித்து அதன் கழுத்தில் சுருக்குப் போட்டு மரத்திலே தொங்க விட்டேன். அப்பூனை என்மேல் மிகவும் பிரியமாக இருந்தது என்று தெரிந்தும் அதை மரத்திலே தொங்க விட்டேன். அப்பூனையால் எனக்கு எத்தகைய இடையூறும் இல்லையென்று தெரிந்தும் அதைத் தூக்கிலிட்டேன். அதைக் கொலை செய்

வது பாவம் என்று தெரிந்தும் அதைக் கொலை செய்தேன். மன்னிக்க முடியாத குற்றம்! எவனும் செய்யத் துணியாத செயல்!

பாவச் செயலைச் செய்தேன்! வாயில்லாப் பிராணியை வதைத்தேன்! செய்த பாவத்திற்காக மனம் வருந்தவில்லை. செய்த கொலைக்காக உடல் நடுங்கவில்லை. ஒரு பாவமும் அறியாத அப்பாவிபோல் வீடு தீப்பிடித்து வெந்ததுகூடத் தெரியாமல் நிம்மதியாகத் தூங்கினேன். நான் படுத்திருந்த படுக்கையிலும் தீப்பிடித்த பின்புதான் தூக்கம் கலைந்தது. திடுக்கிட்டு எழுந்தேன். தீயுக்கு இரையாகாமல் தப்பிப் பிழைத்தேன். என் மனைவியும் தப்பித்து விட்டாள். வேலைக்காரனும் உயிர் தப்பினான். வீடு முழுதும் எரிந்து சாம்பலாயிற்று. என் சொத்துச் சுகமெல்லாம் சாம்பலாயின. அதுமுதல் என் மனம் ஒடிந்துவிட்டது. நம்பிக்கையை இழந்தேன்.

வீடு தீப்பிடித்து எரிந்து, என் சொத்துச் சுகமெல்லாம் போனதற்கும் நான் செய்த பாவத்திற்கும் முடிபோட்டுப் பார்க்க விரும்பவில்லை. அவ்வளவிற்கு நான் பலஹீனன் அல்ல. ஆயினும் நடந்த சம்பவங்களைச் சிறிதும் விடாமல் கூறிவிடுகிறேன்.

வீடு தீப்பற்றி எரிந்ததற்கு அடுத்த நாள் அந்த இடத்தைப் பார்வையிடச் சென்றிருந்தேன். எல்லாச் சுவர்களும் இடிந்து விழுந்து விட்டன. நடு அறைச் சுவர் ஒன்று மட்டும் புதிதாகக் கட்டப்பட்டதாகையால் இடியாமல் இருந்தது. அந்தச் சுவரோரமாகத்தான் நான் தலையை வைத்துப் படுத்துத் தூங்கிக் கொண்டிருந்தேன். அச்சுவரண்டையில் பலபேர் கூடியிருந்தனர். ஏதோ ஒன்றை உற்றுப் பார்த்துக் கொண்டிருந்தனர். கூட்டத்திலிருந்து "புதுமை! புதுமை! விந்தையிலும் விந்தை!" என்பன போன்ற பேச்சுக்கள் வந்தன. அவர்கள் வியக்கும்படியாக அங்கு என்ன இருந்தது என்பதை அறிய எனக்கும் ஆவ

லாக இருந்தது. அவ்விடத்திற்குச் சென்று கூட்டத்தின் கவனத்தைக் கொள்ளை கொண்ட காட்சியைக் கண்டேன். அடித்தளத்தில் செதுக்குச் சித்திரம்போல் காட்சி யளித் தது பெரிய பூனையின் உருவம். கழுத்தைச் சுற்றிலும் கயிறு கட்டியிருந்ததின் அடையாளமும் இருந்தது!

அப்பேய்த் தோற்றத்தைக் கண்டு பயந்தேன். நடுங்கி னேன். கடையில் நடந்த சம்பவம் ஞாபகத்திற்கு வந் தது. வீட்டிற்குப் பக்கத்தில் இருந்த மரத்தில் பூனையைக் கட்டித் தொங்கவிட்ட சம்பவம் நினைவிற்கு வந்தது. வீடு தீப்பற்றிய செய்தி பரவியதும் ஊர் மக்களே அங்கு வந்து கூடிவிட்டனராம். கூட்டத்தவர் என்னை எழுப்புவதற்கு முயன்றிருக்க வேண்டும். ஒன்றும் முடியாமல் போகவே மரத்தில் தொங்கிக் கொண்டிருந்த பூனையை விடுவித்து ஜன்னல் வழியாக நான் தூங்கிக் கொண்டிருந்த அறையில் வீசியெறிந்திருக்க வேண்டும், அப்படியாவது என்னை எழுப்பலாமென்று. சுவர்கள் இடிந்து விழுந்ததினால் அப் பூனை நசுங்கித் தரையில் பதிந்துவிட்டது. தரையின் சுண் ணாம்பும் பூனையின் உடல் வெந்தபோது வெளிவந்த அமோ னிய வாயுவும் சேர்ந்து அப்புடைவுச் சித்திர உருவப்படம் உண்டாகி யிருக்க வேண்டும்.

இவ்வாறாக நடந்ததை ஒருவாறு யூகித்து அறிந்து விட்ட போதிலும், அவ்வுருவப் படத்தின் பேய்த் தோற் றம் மாதக் கணக்கில் என் மனதைவிட்டு அகலவில்லை. இதற்கிடையில் இரக்க உணர்வு மீண்டும் தளிர்க்கத் தொடங்கியது. பூனை செத்ததற்காக வருந்தினேன். அவ்வருத்தத்தைக் குறைக்க அதே மாதிரியான வேறு ஒரு பூனையைப் பிடித்து வளர்க்கலாம் என்று எண்ணினேன்.

ஒரு நாளிரவு சாராயக் கடையில் உட்கார்ந்துகொண் டிருந்தேன். அரைகுறையான போதை. என் எதிரே இருந்த சாராயப் பீப்பாயின்மேல் ஏதோ ஒரு கரும்பொருள் இருந்தது கண்ணுக்குப் பட்டது. உற்றுப் பார்த்தேன்.

என்ன பொருள் என்று தெரியவில்லை. எழுந்து பீப்பாய்க்கு அருகில் சென்று பார்த்தேன். அப்பொருளைக் கையால் தொட்டுப் பார்த்தேன். கரும் பூனை! பெரிய பூனை. புளூட்டோ எவ்வளவு பெரியதோ அவ்வளவு பெரியது. புளூட்டோவைப் போலவே இருந்தது. எனினும் இரண்டிற்கும் ஒரு சிறு வேறுபாடு. புளூட்டோவிற்கு உடல் முழுவதும் கருநிறம். ஒரு வெள்ளை மயிர்கூடக் கிடையாது. ஆனால் புதுப் பூனைக்கு நெஞ்சில் கொஞ்சம் வெள்ளை நிறம் இருந்தது.

என் கைபட்டதும் அப்பூனை எழுந்து நின்றது. மியாவ்! மியாவ்! என்று கத்தியது. என் கையைத் தன் நாக்கால் நக்கியது. ஆகவே அது என்னைக் கண்டு சந்தோஷப்பட்டதாகத் தோன்றியது. இந்த மாதிரி பூனைதானே நான் தேடிக் கொண்டிருந்தது! ஆகவே அதை விலை கொடுத்து வாங்க விரும்பினேன். கடைக்காரனை விலை கேட்டேன். அது தன்னுடைய பூனையல்ல; அதைப்பற்றித் தனக்கு ஒன்றுமே தெரியாதென்று கூறிவிட்டான் கடைக்காரன்.

பூனையைத் தடவி கொடுத்தேன். நான் வீட்டிற்குத் திரும்ப ஆயத்தமானபோது அதுவும் என்னைப் பின்தொடர ஆரம்பித்தது. தடுக்கவில்லை. வழியில் நின்று நின்று தட்டிக் கொடுத்தேன். வீட்டை அடைந்ததும் பலகாலம் பழகிய பூனைபோல் நடந்து கொண்டது. என் மனைவியின் அன்பையும் கவர்ந்து விட்டது.

செத்துப்போன பூனையின் ஞாபகமாகப் புதுப் பூனை கிடைத்து விட்டதற்காக மகிழ்ச்சி அடைந்தேன். அதை அன்பாகப் பராமரித்தேன். ஆனால் அவ்வன்பு வெகு காலம் நீடிக்கவில்லை. நாளுக்கு நாள் அதன்பேரில் இருந்த பிரியம் குறையத் தொடங்கியது. அது எதனால்? பழகப் பழகப் பாலும் புளிக்குமோ! வரவர அதன்மேல் அருவருப்புக் கொண்டேன். அது என்னை அண்டவொட்டாமல் தடுத்

தேன். எனினும் அடித்துத் துன்புறுத்தவில்லை. பழைய பாவச் செயல் ஞாபகத்தில் இருந்ததின் காரணமாக.

அதை வெறுப்பதற்கு ஓரளவு காரணமும் இருந்தது என்றுதான் சொல்ல வேண்டும். புதுப் பூனைக்கும் பிளூட்டோவைப் போல் ஒரு கண் குருடு.

அதற்குக் கண் குருடு என்பதை நான் முதலில் கவனிக்கவில்லை. இரவு நேரத்தில் அதை அழைத்து வந்ததால் அதைப்பற்றிக் கவனிக்க முடியாது போயிற்று. அடுத்த நாள் காலையில்தான் உண்மையை அறிந்தேன். புதுப்பூனைக்கும் கண் இல்லையே என்று தெரிந்ததும் என் மனைவி பெரிதும் பரிதாபப்பட்டாள். அதிக அன்போடு அதைப் பராமரித்தாள். இரக்கமே உருவான என் மனைவி கண்ணிழந்த பூனையைக் கண்டு இரக்கப்பட்டது இயற்கையே. நானும் ஒரு காலத்தில் இரக்கமுள்ள மனிதனாகத்தான் இருந்தேன்; அன்பால் அனைத்துயிர் பேணினேன்; ஆனந்தம் அடைந்தேன். ஆனால் இப்போது இரக்கமற்ற அரக்கனாக மாறியிருந்த காரணத்தால் கண்ணற்ற பூனையைக் கண்டு கழிவிரக்கம் கொள்வதற்கு மாறாக அருவருப்புப் பட்டேன்; வெறுத்தேன்.

நான் அப்பூனையை வெறுத்தேன்; ஆனால் அப்பூனை என்னை வெறுக்கவில்லை. என் வெறுப்பு அதிகரிக்க அதிகரிக்க அதன் அன்பு அதிகரித்தது. நான் எங்குச் சென்றாலும் அது என் நிழல்போல் தொடர்ந்தது. நான் உட்கார்ந்தால் அது என் நாற்காலிக்கடியில் வந்து பதுங்கிக் கொள்ளும், அல்லது என் முழங்கால்மேல் தொத்தும்; நாக்கினால் நக்கும். நான் எழுந்து நடந்தால் அது என் கால்களுக்கிடையே வந்து வளைத்துக் கொள்ளும், அல்லது துணியைப் பிடித்து மேலே ஏறித் தொத்தும். அது இப்படியெல்லாம் செய்யும்போது அதை ஒரே அடியாக அடித்துக் கொன்று போடலாம் என்று தோன்றியது. எனினும் பழைய பாவச் செயல்பற்றிய நினைவும் பூனையிடம் எனக்கு

ஏற்பட்ட ஒரு கிலியும் என்னை அவ்வாறு செய்யாமல் தடுத்தன.

அப்பூனையைக்கண்டு கிலி ஏற்படுவதற்குக் காரணம்? அது என்னை அடித்துக் கொன்றுவிடும் என்ற பயமல்ல. வேறுவகையான பயம். அதை என்னென்று சொல்லுவேன்! சொல்லுவதற்கே அவமானமாக இருக்கிறது. சிறையில் அடைபட்டுக்கிடக்கும் இந்நிலையில்கூட அதைப் பற்றிச் சொல்லுவதைக் கேவலமாகவே கருதுகின்றேன்!

பூனையைப் பார்த்தபோதெல்லாம் ஒரு கற்பனை உருவம் என் கண்முன் வந்து நிற்கும். அதுவும் பயங்கர உருவம்! என் மனைவி புதுப்பூனையின் கழுத்திலிருந்த வெள்ளை யடையாளத்தை அடிக்கடி சுட்டிக் காட்டினாள். அவ் வெள்ளை அடையாளம் ஒன்றே புதுப்பூனைக்கும் பழைய பூனைக்குமிருந்த வெளிப்படையான வேறுபாடு என்பதை ஏற்கனவே கூறியுள்ளேன். அவ்வெள்ளை அடையாளம் சற்று அகலமானதுதான். எனினும் முதலில் அது தெளிவாகத் தென்படவில்லை. நாளடைவில் நன்கு புலப்படலாயிற்று. வெறுமனே புலப்படவில்லை; ஒரு பயங்கரப் பொருளின் உருவத்தைப்போலவே காட்சியளித்தது!

அது என்ன பொருள் என்று சொல்லுவதற்குப் பயமாக இருக்கிறது. அக்காட்சியைக்கண்டு பயந்தேன்; நடுங்கினேன். தைரியம்மட்டும் இருந்திருந்தால் அதைக் கண்டு நான் பயப்பட்டிருந்திருக்கமாட்டேன். பயப்பட்டுப் பாழ்பட்டும் ஆய்விட்டது. இனி அதைப்பற்றிச் சொல்லுவதில் என்ன தயக்கம்! சொல்லிவிடுகிறேன்.

பூனையின் கழுத்திலிருந்த வெள்ளை அடையாளம் பயங்கரத் தூக்குமரத்தைப் போலிருந்தது! பூனையைப் பார்த்தபோதெல்லாம் தூக்குமரமே என் கண்முன் காட்சியளித்தது! தூக்குமரம்! மனிதனுக்கு மரணத்தைத்தரும் மரம்! பாவத்திற்குப் பழிவாங்கும் பேய்! குற்றவாளியின்

குருதியைக் குடிக்கும் பிசாசு! பாசக் கயிறால் உயிரைக் கட்டி யிழுத்துச் செல்லும் எமன்!

நாளுக்குநாள் பீதி வலுப்பெற்றது. அமைதியை இழந்தேன். ஆற்றொணுத் துன்பத்திற்கு ஆளானேன். கேவலம் ஒரு சாதாரண உயிர்ப்பிராணி — நான் எந்த உயிர்ப்பிராணியைத் தூக்கிலிட்டுக் கொலை செய்தேனோ அந்தப் பிராணியின் இனத்தைச் சேர்ந்தது — என்னை மீளாத் துன்பத்திற்கு ஆளாக்கியது. நானோ மனிதன்— உயிர்களிலெல்லாம் உயர்ந்தவன்—கடவுளின் பிரதிபிம்ப மாகத் திகழ்பவன். அதுவோ ஒரு மிருகம்—சிந்திக்கும் ஆற்றல் இல்லாதது. அது எனக்குப் பகைவனு! மிருகத் தால் மனிதனுக்குத் துன்பமா! அந்தோ! இரவு பகல் எந் நேரமும் அமைதியே கிடையாது; ஓய்வு கிடையாது. பகலெல்லாம் பாழாய்ப்போன பூனை என்னை விட்டகலாது. இரவில் பயங்கரக் கனவுகளும் கற்பனைகளும் என்னை நிம் மதியாகக் கண்ணயரவிடமாட்டா. காலையில் எழுந்திருக் கும்போது முதலில் அந்தப் பூனையின் முகத்தில்தான் விழிக்கவேண்டும்! அது என் நெஞ்சின்மேல்தான் படுத்துத் தூங்கிக்கொண்டிருக்கும்! அதன் பளுவு என் நெஞ்சை அழுத்தும்!

கொஞ்சநஞ்சமிருந்த நல்ல எண்ணமும் என் நெஞ்சை விட்டகன்றது. கெட்ட எண்ணங்கள் குடிகொண்டன. உள்ளத்தில் இருள் சூழ்ந்தது! பீதி! பீதியினுல் அமைதி யின்மை! அதனுல் ஒரு வெறி! மூர்க்கத்தனமான வெறி! எதைக்கண்டாலும் — யாரைக்கண்டாலும் — ஏன்? என் மனைவியைக் கண்டாலும்—வெறுப்பாக இருந்தது. திடீர் திடீரென்று சினம் பொங்கி யெழுந்தது. என் சினத்திற்கு அதிகமாக ஆளானவள் என் மனைவியே; சகித்துக்கொண்டு வாளா இருந்தவளும் அவளே!

மனிதனை மாக்களினும் வேறுபடுத்தும் பகுத்தறிவை இழந்தேன்! அறிவின் பயனுன அன்பை இழந்தேன்! அன்

பிலிருந்து பிறக்கும் அருளை இழந்தேன்! இரக்கத்தை இழந்தேன்! மனிதப் பண்பையே இழந்தேன்! இருந்த சொத்துக்களையும் வாழ்க்கை வசதிகளையும் இழந்தேன்! பயன்! மிருகமானேன்; மூர்க்கனுனேன் ; இரக்கமற்ற அரக்கனுனேன். ஏழையும் ஆனேன். பழைய வீட்டில் குடியிருக்கவேண்டியதாயிற்று. அவ்வீட்டிற்குள் நிலவறை ஒன்று இருந்தது.

ஒருநாள் நானும் என் மனைவியும் வீட்டு வேலையாக வீட்டின் நிலவறைக்குச் சென்ருேம். படிக்கட்டில் இறங்கிக் கொண்டிருந்தபோது பூனையும் எங்களைப் பின் தொடர்ந்தது. அது குறுக்கே வந்ததினுல் கால் தடுக்கிக் கீழே விழப்போனேன். நல்லவேளை, சுவரைப் பிடித்துக் கொண்டு விழாமல் சமாளித்துக்கொண்டேன். பூனையின் மேல் பொல்லாத கோபம் வந்துவிட்டது. கோபம் என்ருல் இவ்வளவு அவ்வளவு என்று சொல்லமுடியாத கோபம்! வெறி! பழைய பாவச் செயலைக்கூட மறந்துவிட்டேன். அதைத் தாக்கக் கோடாரியை எடுத்தேன். ஓங்கி அடித்தேன். அந்த அடிமட்டும் பட்டிருந்தால் அந்த இடத்

திலேயே எட

அடி அதன்

தடுத்துவிட்

வதை செய்

பூனையை—

வந்த கோப

அவள் பிடி

கோடாரியை

இடத்தில்

டுண்ட மரம்

கொலையைப்பற்றிச் சிந்திக்கவில்லை. மனைவியைக் கொலை செய்துவிட்டேனேஎன்று துடிக்கவில்லை. பிணத்தைஎப்படி மறைப்பது என்பதில்தான் சிந்தனை சென்றது. எக் காரணத்தைக்காட்டி சவத்தை வீட்டைவிட்டு வெளியே எடுத்துச் செல்லுவது! அண்டை வீட்டுக்காரர்களுக்கு எப்படியும் தெரிந்துவிடும். ஆகவே வேறுவழி என்ன என்று யோசித்தேன். பல யுக்திகள். பிணத்தைத் துண்டு துண்டாக வெட்டிக் காய்கறிகளை அறிவதுபோல் நறுக்கித் தீயில்போட்டு எரித்துவிடலாமா? அல்லது நிலவறையின் அடித்தளத்தில் குழிதோண்டிப் புதைத்துவிடலாமா? அல்லது புறவடைக் கிணற்றுக்குள் தூக்கிப்போட்டு விடலாமா? அல்லது ஒரு பெட்டிக்குள் சரக்கைப்போல் போட்டு அடைத்துக் கூலியாளை வரவழைத்து வெளியே கொண்டு சென்று விடலாமா? இப்படியாகப் பலப்பல யோசனைகள் தோன்றின. கடைசியாகச் சுலபமான வழி ஒன்று தோன்றியது. நிலவறைச் சுவற்றில் புதைத்து விடலாமென்று முடிவுசெய்தேன்.

என் முடிவுக்கு ஏற்றமுறையில்தான் இருந்தது நிலவறையும். சுவர்கள் கெட்டியாக இல்லை. ஏற்கனவே அடுப்பங்கரை இருந்த இடம். சமீபத்தில்தான் மூடப் பட்டது. காரைகூட இன்னும் உலரவில்லை. மூடியிருந்த பாகத்தைப் பிரித்தெடுத்து பிணத்தை உள்ளே வைத்துப் பழையபடிக்குச் சுவரை மேவிவிடுவதென்று திட்டமிட் டேன். யாரும் கண்டுபிடிக்க முடியாதல்லவா?

கடப்பாரையால் செங்கற்களைப் பெயர்த்தெடுத்தேன். பிணத்தை உள்சுவரோடு சுவராக நிறுத்திச் செங்கல்களை அடுக்கிச் சுவரைப் பழையபடிக்கு மேவினேன். சுண்ணாம்பு மணல் முதலியவைகளைக் கொண்டுவந்து காரை தயாரித் துக் கட்டிய சுவருக்குப் பூசினேன். எல்லாம் சரியாக முடிந்தது. சுவர் பழையபடிக்கே இருந்தது. எந்தவிதமான புதுமாறுதலும் காணப்படவில்லை. இடித்துப் புதிதாகக்

கட்டியது என்று யாருக்குமே சந்தேகம் வராது; இடிந்து கிடந்த காரையைத் தூசுகூட விடாமல் அகற்றி அப்புறப்படுத்தினேன். என் வேலை வெற்றிகரமாக நிறைவேறியது.

என்னை இச்செயலுக்கு ஆளாக்கின பூனையைத் தேடினேன். எங்கு தேடியும் காணப்படவில்லை. கண்ணுக்குப் பட்டிருந்தால் அதே நிமிஷத்தில் அதை எமலோகத்திற்கு அனுப்பி இருந்திருப்பேன். ஆனால் அது கண்ணுக்குத் தென்படவேயில்லை. என் கோபத்தைக்கண்டு பயந்து கண்ணுக்கு எட்டாததூரம் ஓடிப்போய் மறைந்துவிட்டது போலும். அப்படி அது தொலைந்ததே நல்லதாய் போய் விட்டது. என்னைப் பிடித்திருந்த பீதி நீங்கியது. பெரும் விடுதலை! நிம்மதியாகத் தூங்கினேன். கொலைசெய்த பழியிருந்தும் தூங்கினேன். அடுத்த இரவும் அதற்கு அடுத்த இரவும் அதேமாதிரி நிம்மதியாகத் தூங்கினேன். பூனை வரவேயில்லை. இனி என்றுமே வராது என்ற தைரியம் பிறந்தது. துன்பம் தொலைந்தது. மட்டில்லாத மகிழ்ச்சி அடைந்தேன். கொலைக்குற்றத்தைக்கூடப் பொருட்படுத்த வில்லை. பூனைப் பயம் நீங்கியது அவ்வளவு பெரிய விடுதலையாக இருந்தது! என் மனைவியைப்பற்றிப் பலர் விசாரித்தனர். சாதுரியமாகப் பதில் சொல்லிச் சமாளித்துக் கொண்டேன்.

கொலை நடந்ததற்கு நான்காம் நாள் என் வீட்டிற்குப் போலீஸ்காரர்கள் வந்தனர். வீடு முழுவதையும் சோதனை போட்டார்கள். நிலவறைக்குச் செல்லவில்லை. அவர்களைக் கண்டு நான் அஞ்சவில்லை. தயங்கவில்லை. கலவரப்பட வில்லை. என்னையும் உடன் வைத்துக்கொண்டே சந்து பொந்து மூலை முடுக்கு எல்லாம் தேடினர். கடைசியாக நிலவறைக்குச் சென்றனர். அப்பவும் நான் பயப்படவில்லை. நடுங்கவில்லை; நெஞ்சு படபடக்கவில்லை. அறை முழுவதையும் சர்வ சாதாரணமாகச் சுற்றிக் காட்டினேன்.

போலீஸ்காரர்களுக்குப் பரம திருப்தி. என்னை எள்ளள வும் சந்தேகிக்கவில்லை. விடைபெற்றுக்கொண்டு புறப்படத் தயாராயினர். சந்தோஷத்தை அடக்க முடியவில்லை. அவர் களுக்கு நான் குற்றவாளியென்ற சந்தேகம் அறவே நீங்கி விட்டது என்பதை மேலும் தெளிவுபடுத்திக்கொள்ள அவர்களோடு கொஞ்சநேரம் பேசவேண்டுமென்று தோன் றியது.

படியில் ஏறிச் சென்றுகொண்டிருந்தவர்களைக் குறுக் கிட்டு, "உங்கள் சந்தேகம் தெளிந்ததற்கு மகிழ்ச்சி யடை கிறேன். நீங்கள் எல்லோரும் சுகமாக வாழவேண்டும். இது பாருங்கோ! இந்த வீடு இருக்குதே! நல்ல கெட்டியாகக் கட்டப்பட்ட வீடு. (ஏதாவது பேசவேண்டுமே என்ற அவ சரத்தில் என்ன பேசுவது என்ன பேசக்கூடாது என்று யோசிக்காமலேயே பேசினேன்.) ஆமாங்கோ! மிக நன்று கக் கட்டப்பட்ட வீடு. இந்தச் சுவர்கள்...போகிறீர்களா? .. இந்தச் சுவர்கள் எவ்வளவுத் திண்மையாகக் கட்டப்பட் டுள்ளன! அடடா! நீங்களே பாருங்கள்!" என்று சொல்லிக்கொண்டே வெற்றிபெற்ற பெருமிதத்தோடு, என் மனைவியின் சவத்தை அடக்கம் செய்திருந்த இடத் தைக் கையில் வைத்திருந்த பிரம்பினுல் தட்டினேன்.

தட்டினமாத்திரத்தில் சுவற்றிலிருந்து சப்தம் வந்தது. முதலில் குழந்தையின் அழுகைக் குரல்போல் விட்டுவிட்டு ஒலித்தது. பின் திடீரென்று சைரன் ஒலிப்பதுபோல் கீச் சென்று ஒரே சப்தமாகக் கேட்டது. மனிதக் குரலேயல்ல; உறுமல்! ஊளையிடுதல்! நரகத்தில் அவதிப்படும் உயிர் கள் வேதனை தாங்கமாட்டாமல் அலறும் குரல் போன்ற அழுகை!

அக் குரல் என் செவிகளில் பட்டபோது நான்பட்ட அவதியை விவரித்துக்கூற முடியுமா? பகீரென்றது! மயங்கி எதிர்ச் சுவரண்டைபோய் விழுந்தேன். போலீஸ்காரர் களும் அசைவற்று நின்றுவிட்டனர். திரும்பச் செல்ல

இருந்தவர்களைத் தடுத்து நிறுத்தியது திடீரென்று கேட்ட கூக்குரல். சிறிது நேரத்திற்குள் சுவரை இடித்துவிட்டனர். சிதைந்து அழுகி நாறிக்கிடந்த பிணம் தெரிந்தது. அதன் தலையின்மேல் என்னைக் காட்டிக் கொடுத்த பயங்கரப் பூனை உட்கார்ந்திருந்தது. அது போட்ட கூச்சல்தான் என்னைக் குற்றவாளிக் கூண்டிலே ஏறும்படி செய்தது! அவசரத்தில், சவத்தின்மேல் பூனை உட்கார்ந்திருந்ததையும் காணுமல் சுவரை மூடிவிட்டேன் போலும்!

# தவளை-தத்தி

எங்கள் அரசரைப்போல் வேடிக்கை விநோதங்களில் ஆர்வம் உள்ளவர் எவருமே இல்லையென்று சொல்லலாம். அவர் வேடிக்கை விநோதங்களுக்காகவே வாழ்ந்தவராகத் தோன்றினர். அவருடைய ஆதரவைப் பெறவேண்டுமானல் வேடிக்கையாக நல்ல கதையை நல்ல முறையில் சொன்னல் போதுமானது. ஆகவே அவருடைய ஏழு அமைச்சர்களும் தமாஷ் பேர்வழிகளாக இருந்ததில் வியப்பொன்றும் இல்லை. அவர்களும் அரசரைப் போலவே கொழுத்துப் பருத்த மழ மழப்பான உடலுள்ளவர்களே.

மனிதன் வேடிக்கைகளை அனுபவிப்பதினல் கொழுக்கின்ருை அல்லது கொழுத்த மனிதர்களிடமிருந்துதான் வேடிக்கைகள் சுரக்குமா என்பது எனக்குத் திட்டமாகத் தெரியாது.

வேடிக்கையின் நயத்தைப்பற்றிக்கூட அரசருக்கு அக்கறையில்லை. ஆபாச வேடிக்கைகளைக்கூட ஆர்வத்தோடு அனுபவிப்பர். அதிலும் வெறும் வேடிக்கைப் பேச்சுக்களை விட வேடிக்கைச் சம்பவங்களை அதிக ஆர்வத்தோடு வரவேற்பார்.

அக் காலத்தில் அரண்மனைகளில் தமாஷ் பண்ணுவதே தம் தொழிலாகக் கொண்ட கோமாளிகள் பலர் இருந்தனர். பெரும் ஊதியமே கொடுக்க வேண்டியதில்லை! அரண்மனை எச்சில் கிடைத்தால் போதுமென்று எத்தனையோ பேர்வழிகள் எந்த நிமிடத்திலும் எந்தவிதமான வேடிக்கை விநோதமும் செய்து காட்டத் தயாராக இருந்த காலம்! ஆகவே கோமாளிகளுக்குப் பஞ்சமில்லை.

எங்களுடைய அரசரும் காலத்தின் கோலத்திற்கேற்ப ஒரு கோமாளியை அரண்மனையில் வைத்துப் பேணி வந்தார். அரசருக்கு எப்போதும் முட்டாள்தனமான பேச்சுக்

களோ வேடிக்கைகளோ இருந்துகொண்டே இருக்கவேண்டும். அவருடைய ஏழு அமைச்சர்களின் ஞானத்திற்கு ஈடு கட்ட அஞ்ஞானப் பேச்சும் செயலும் தேவைப்பட்டன போலும்!

அரசருடைய கோமாளி வெறும் கோமாளிமட்டுமல்ல; குள்ளனும் முடவனும் ஆவான். ஆகவே அவன் அரசரின் செல்லக் குழந்தையாக இருந்ததில் வியப்பொன்றும் இல்லை.

அக் காலத்தில் அரண்மனைகளில் கோமளிகளைப் போலவே குள்ளன்களும் மலிந்திருந்தனர். கேலி செய்வதற்கு ஒரு கோமாளியும், கேலிக்கு ஆளாவதற்கு ஒரு குள்ளனும் இல்லையென்றால் அரசர்களுக்குப் பொழுதே போகாது! கோமாளிகளில் நூற்றுக்குத் தொண்ணூற்றொன்பதுபேர்கள் கொழுத்த பேர்வழிகளாகவும் இருந்தனர். ஆகவே தவளை-தத்தி (இதுதான் எங்கள் அரசருடைய கோமாளியின் பெயர்.) யிடம் இம்மூன்று இயல்புகளும் ஒருங்கே அமையப்பெற்றிருந்தது அரசனுக்குப் பரம திருப்தி யளித்தது.

தவளை-தத்தி என்பது அக் கோமாளியின் இயற்பெயரல்ல; அரசர் தம் ஏழு அமைச்சர்களின் ஆலோசனையின் பேரில் இட்ட பெயர். அவன் முடவன்; அவனால் எல்லோரையும்போல் நேராக நிமிர்ந்து நடக்க முடியாது; நெளிந்து அசைந்து தவளைபோல் தத்தித் தத்தித்தான் செல்லுவான். அவன் அவ்வாறு நடப்பதே அருமையான கேளிக்கையாக இருந்தது அரசருக்கு!

தவளை-தத்திக்குக் கால்கள் நொண்டியாக இருந்த போதிலும் கைகள் நல்ல உறுதியுள்ளவைகளாக இருந்தன. ஒன்று குறையாக இருந்தால் வேறொன்று உயர்வாக இருப்பது இவ்வுலக இயற்கைதானே! கால்களின் அங்கஹீனத்தைக் கைகளின் அசாதாரண வலிமை ஈடுகட்டி விட்டது. கைவலிமையின் காரணமாக மரமேறுதல், கயிறு தொத்துதல் போன்ற செயல்களில் கைதேர்ந்த திறனுக

இருந்தான் தவளை-தத்தி. மரமேறுதல், கயிறு தொத்து தல் போன்ற பயிற்சிகளைப் பொருத்த வரையில் தவளை—தத்தியைத் தவளையோடு ஒப்பிடுவதினும் அணில்பிள்ளை அல்லது வனத்தை அழிக்கும் வானரத்தோடு ஒப்பிடுவதே சாலப் பொருந்தும்!

தவளை-தத்தி எந்த நாட்டிலிருந்து வந்தவன் என்று திட்டமாகத் தெரியவில்லை. எனினும், வெகு தொலைவி லிருந்த—யாரும் கேள்விப்பட்டிராத—ஏதோ ஒரு அநாகரிக நாட்டிலிருந்து வந்தவன் என்று மட்டும் தெரியும். அதுவும் தானாக வரவில்லை. வலுக்கட்டாயத்தின்பேரில் வரவழைக் கப்பட்டான்—ஏன்?-கைதியாகக் கொண்டு வரப்பட்டான், அரசனின் படைத்தலைவனால். போரில் வெற்றிபெற்ற படைத் தலைவன் தவளை-தத்தியையும் சந்த நடையாள் என்ற யுவதியையும் பிடித்துக்கொண்டுவந்து அவர்களை அரசருக்குத் தன் வெற்றிப் பரிசாக அளித்தான்.

தவளை-தத்தியும் சந்தநடையாளும் ஒன்றாகக் கைதி செய்யப்பட்டுக் கொண்டுவரப் பெற்ற காரணத்தால் அவர் களிடையே நெருங்கிய உறவும் தொடர்பும் ஏற்பட்டன. விரைவில் இணைபிரியாத நண்பர்களாய் விட்டனர். தவளை-தத்தி பலவகையான வேடிக்கை விநோதங்களைச் செய்து காட்டி வந்தபோதிலும், அரண்மனையில் நல்ல பேரும் புக ழும் பெறவில்லை. ஆனால், சந்தநடையாள் குள்ளச்சி யாக இருந்தபோதிலும் நல்ல அழகி; ஒப்புயர்வற்ற நாட் டியக்காரி. ஆகவே அவளை எல்லோரும் விரும்பினர்; பாராட்டினர். ஆகவே அவளுக்கு அரண்மனையில் நல்ல செல்வாக்கு இருந்தது அவள் தவளை-தத்தியின் நன்மைக் காகத் தன் செல்வாக்கைப் பயன்படுத்தத் தவறவில்லை.

அரண்மனையில் ஒரு சமயம் பெரிய விழா ஒன்று (என்ன விழா என்பதை மறந்துவிட்டேன்) நடைபெற ஏற்பாடாயிற்று. அவ் விழாவின்போது பொய் முகக் கூத்து நடத்த முடிவு செய்தார் அரசர். தவளை-தத்தி

யும் சந்த நடையாளுமில்லாத பொய்முகக் கூத்தோ அல்லது அதுபோன்ற வேறு விளையாட்டுக்களோ அரண்மனையில் நடைபெறு! தவளை-தத்திப் புதுப் புதுவகையான வேடங்களைப் புனைந்து உரைப்பதிலும் அவைகளுக்கேற்ற உடைகளை அமைத்துத் தருவதிலும் கைதேர்ந்தவன். அவனுடைய துணையில்லாமல் எதுவுமே நடைபெறுது.

கூத்து நடக்கவுள்ள இரவு வந்துவிட்டது. கூத்தரங்கத்தில் சந்த நடையாளின் மேற்பார்வையில் சகலவிதமான அலங்காரங்களும் செய்து முடிக்கப் பெற்றன. அரண்மனை கோலாகலமாக இருந்தது. எங்கு பார்த்தாலும் பொய்முகக் கூத்தைப்பற்றிய பேச்சுத்தான். ஏறக்குறைய எல்லோரும் அவரவர் புனையும் வேடத்தைப்பற்றியும் உடைகளைப் பற்றியும் முடிவுசெய்து விட்டதாகத் தெரிந்தது. பலர் ஒரு வாரத்துக்கு முன்பே—ஒரு மாதத்திற்கு முன்பேகூட—முடிவுசெய்து விட்டனர், என்ன வேடம் போடுவதென்று. ஆனல் அரசரும் அமைச்சர்களும் எந்தவிதமான யோசனையோ முடிவோ செய்யாமலிருந்தனர். அவர்கள் ஒரு முடிவுக்கு வருவதில் ஏன் காலந் தாழ்த்தினர் என்று தெரியவில்லை: ஒருவேளை அவர்கள் கொழுத்துப் பருத்து உருண்டு திரண்டிருந்ததால் ஒன்றும் முடிவுசெய்ய முடியவில்லையோ! எது எப்படியாயினும் நேரம் நெருங்கிவிட்டது. கடைசி உபாயமாக தவளை-தத்தியையும் சந்தநடையாளையும் அழைத்துவர ஆள் அனுப்பினர்.

அரசரின் ஆணைக்கேற்ப இணைபிரியாத இரு நண்பர்களும் அரண்மனைக்கு வந்து சேர்ந்தனர். அப்போது அரசரும் ஏழு அமைச்சர்களும் ஆனந்தமாக மதுபானம் அருந்திக் கொண்டிருந்தனர். தவளை-தத்திக்கு மதுபானம் சற்றும் பிடிக்கவே பிடிக்காது. ஏனென்றல் மதுவெறி அவனைப் பித்துப் பிடித்தவன்போல் ஆக்கிவிடும். இதை நன்கு அறிவார் அரசர். அறிந்திருந்தும் தவளை-தத்தியைக்

கொஞ்ச நேரம் ஆட்டிவைத்து வேடிக்கை பார்க்கவேண்டு மென்று அவனைக் குடிக்குமாறு வற்புறுத்தினர்.

"ஏ! தவளை-தத்தி! இங்கே வா!...இந்தா! இந்தப் புட்டியைக் காலி செய். இங்கு இல்லாத உன் நண்பர்களை நினைத்துக் குடி......மது உள்ளே போனால்தான் மதி தோன்றும்......என்ன வேடம் புனையலாம் என்று யோசித்துச் சொல். வேடம் புதுமையாக இருக்கவேண்டும். ஒரே மாதிரியான வேடங்களைப் போட்டுப் போட்டுச் சலித்துப் போய்விட்டது. யாருமே இதுவரையில் கண்டறியாத வேடமாக இருக்கவேண்டும். வா! குடி! குடித்தால் தான் மூளை சுறு சுறுப்பாக வேலை செய்யும்!" என்றார் அரசர்.

தவளை-தத்தி அரசரிடமிருந்து மதுக்கோப்பையை வாங்கிக் கொண்டான். வேடிக்கையான பதில் ஏதாவது சொல்லவேண்டும் என்று எண்ணினான். பெரிதும் முயன்றான். அன்று அவனுடைய பிறந்த நாள். ஆகவே, "இல்லாத நண்பர்களை நினைத்துக் குடி" என்ற ஆணை அவனுக்குத் தன் தாய்நாட்டை நினைவூட்டியது. அவனையும் அறியாமல் துக்கம் பீறிட்டு எழுந்தது. கண்களில் நீர் ஆறாகப் பெருகியது. கண்ணீர்த் துளிகள் மதுக்கிண்ணத்தில் விழுந்தன. வேண்டா வெறுப்போடு மதுவை அருந்த முற்பட்டான்.

"ஹ!......ஹ!......ஹா!......ஹா!" என்று சிரித்துக் கொண்டே, எவ்வளவு நல்ல மதுபானம் தெரியுமா? உன் கண்கள் பளபளப்பதைப் பார்!" என்றார் கொடுங்கோலரசர்.

பாவம்! அரசர் சொன்னதுபோல் தவளை-தத்தியின் கண்கள் பிரகாசிக்கவில்லை; கோவைப் பழம்போல் சிவந்து விட்டன. வெறி தலைக்கேறி பித்துப் பிடித்தவன் போலாயினன். காலிக் கிண்ணத்தைக் கீழே வைத்துவிட்டு எல்லோரையும் ஏறிட்டுப் பார்த்தான். அரசரின் வேடிக்கை

வெற்றி பெற்றதைக் கண்டு எல்லோரும் மகிழ்ந்து கொண்டிருந்தனர்.

"காரியத்தைக் கவனிப்போம்," என்றார் பிரதம அமைச்சர்.

"ஆம்!...தவளை-தத்தி! எங்கே? உன் யோசனையைக் கூறு பார்ப்போம். வேடங்கள்!...நாங்கள். எல்லோரும் வேண்டுவது வேடங்கள்!......ஹா!......ஹா!......ஹா...!" என்று சிரித்தார் அரசர்.

அரசர் சிரிக்கவே ஏழு அமைச்சர்களும் சிரித்தனர்.

தவளை-தத்தியும் சிரித்தான் வேறு வழியின்றி.

"என்ன? இன்னுமா யோசனை தோன்றவில்லை!" என்றார் பொறுமையிழந்த புவியரசர்.

"புதுமையாக ஏதாவது கண்டுபிடிக்க முயற்சி செய்து கொண்டிருக்கிறேன்" என்றான் தவளை-தத்தி, ஏதாவது பதில் சொல்லிவைக்க வேண்டுமே என்பதற்காக. பாவம் அவனுக்கு ஒரே தடுமாற்றம் மது அருந்திய காரணத்தால்.

"முயற்சி செய்கிறாயா? அப்படியென்றால் என்ன அர்த்தம்? ஓஹோ! புரிந்து கொண்டேன்...இன்னும் கொஞ்சம் மது தேவை போலும்! இந்தா... இதையும் குடி" என்று சொல்லிக் கொண்டே மற்றொரு கிண்ணத்தில் மதுவை நிரப்பி அதைக் குள்ளனிடம் கொடுத்தார் மதி கெட்ட மன்னர்.

குள்ளன் பேந்தப் பேந்த விழித்தான்.

"குடி! இல்லையென்றால் என் பொல்லாத கோபத்துக்கு ஆளாவாய்!" என்றார் ஆணவக்கார அரசர்.

தவளை-தத்தி தயங்கினான். அரசருக்குக் கோபம் பொங்கி யெழுந்தது. அமைச்சர்கள்கூட அஞ்சி நடுங்கினர். சந்நடையாளுக்குச் சப்த நாடிகளும் ஒடுங்கி விட்டன. அரசர் வீற்றிருந்த அரியாசனத்தண்டை சென்று அவர் காலில் விழுந்து கெஞ்சிக் கேட்டாள், தன் நண்பனுக்கு உயிர் பிச்சை தருமாறு.

அவளுடைய துணிச்சலைக் கண்ட அரசர் திகைத்துப் போய் விட்டார் என்ன செய்வது, என்ன பேசுவது என்றே அவருக்குத் தோன்றவில்லை சில நிமிட நேரம். கடைசியில் அவளை உதைத்துத் தள்ளினார். மதுக்கிண்ணத்தை அவள் மேல் வீசி எறிந்தார்.

அரைநிமிட நேரம் நிசப்தம் நிலவியது. அந் நிசப்தத்தைக் கிழித்துக்கொண்டு எங்கிருந்தோ வந்தது 'நற' 'நற' வென்று பற்களைக் கடிப்பது போன்ற சப்தம்!

"என்ன? என்ன எதற்காக இந்தச் சப்தம்?" என்றார் அரசர் கோபத்தோடு, குள்ளனைப் பார்த்து.

தவளை-தத்திக்கு மதுவெறி குறைந்துவிட்டது.

"நான்.........நானா! என்னால் எப்படி அந்தமாதிரி சப்தம் செய்திருக்கமுடியும்?" என்றான் தவளை-தத்தி ஏதுமே அறியாதவன்போல.

"அச்சப்தம் வெளிப்பக்கம் இருந்து வந்தமாதிரி தோன்றியது ஜன்னல் கம்பிகளில் கிளி தன் சிறகுகளைப் பட படவென்று அடித்ததனால் ஏற்பட்ட சப்தமாயிருக்கக் கூடும்!" என்றார் அதிசய அமைச்சர்களில் ஒருவர்.

"உண்மை. எனினும் அச்சப்தமானது தவளை-தத்தியின் பற்கள் கிடுகிடு என்று நடுங்கியதனால் ஏற்பட்டது என்று என்னால் ஆணையிட்டுக்கூடக் கூறியிருக்கமுடியும்" என்று பதிலளித்தார் பாராளும் மன்னன். இப் பதிலைக் கேட்ட தவளை-தத்தி கொல்லென்று சிரித்தான். அரசரும் ஒரு கோமாளி என்ற முறையிலே அவன் சிரிப்பைக்கண்டு வெகுளவில்லை. வாயைத் திறந்து தன் கொட்டைப் பற்களைக் காட்டினான் தவளை-தத்தி. இன்னும் எவ்வளவு மதுவேண்டுமானாலும் குடிக்கத் தயார் என்றான். அரசரின் கோபம் தணிந்து உள்ளம் குளிர்ந்துவிட்டது. மீண்டும் ஒரு கோப்பை மதுவைக் குடித்துவிட்டு, பொய்முகக் கூத்துத் திட்டத்திற்கு வரலானான்.

ஒரு துளி மதுகூட குடிக்காதவன்போல் எந்தவிதமான

பதட்டமும் இல்லாமல் அமைதியாகப் பேசினன் தவளை-தத்தி :

"எனக்கு ஒரு யோசனையும் தோன்றமல்தான் இருந்தது. ஆனல் மன்னுதி மன்னர் சந்தநடையாளின்மேல் மதுக்கிண்ணத்தை வீசி எறிந்தபோது— ஜன்னல் கம்பிகளில் கிளி தன் சிறகுகளைப் படபடவென்று அடித்த போது—திடீரென்று எனக்கு ஒரு யோசனை புலப்பட்டது. எங்கள் நாட்டில் பெர்ய்முகக் கூத்தின்போது அடிக்கடி ஆடப்படும் விளையாட்டு ஞாபகத்திற்கு வந்தது. அது எங்ளுக்குத்தான் பழக்கப்பட்ட விளையாட்டேயல்லாமல் இங்கு முழுக்க முழுக்கப் புதிசு. ஆனல் அதற்கு எட்டுப் பேர் வேணுமே !..........."

"எட்டுப் பேர்தானே. இதோ நாங்கள் எட்டுப்பேர் இருக்கிறோம். நானும் என் ஏழு அமைச்சர்களும் சேர்ந்தால் எட்டுப் பேர்...........ஹா............ஹா............ என்ன பொருத்தம்! என்ன பொருத்தம்! பலே! பலே! உன் மூளையே மூளை. அது என்ன விளையாட்டு !........." என்றார் அரசர் ஆனந்தத்தோடு.

" நாங்கள் அதை ' **எட்டு-சங்கிலி-ஊராங்-ஊட்டான்*** ' என்று சொல்லுவோம். நன்றுகமட்டும் நடித்துவிட்டால் அவ் விளையாட்டு வெகுபிரமாதமாய் இருக்கும்! " என்றன் தவளை-தத்தி.

" நாங்கள் நன்றுக நடிப்போம் " என்றார் அரசர்.

" அவ்விளையாட்டின் சிறப்பு என்னவென்றல், வேடிக்கை பார்க்கவரும் பெண்கள் எல்லோரும் பயந்துவிடுவார்கள்" என்றன் தவளை-தத்தி.

" ஹா !...... ஹா !......" என்று ஆனந்தத்தாண்டவமாடினர்கள் அரசரும் அமைச்சர்களும்.

---

*ஊராங் ஊட்டான் காட்டு மனிதன் என்னும் வானரம். வாலில்லாக் குரங்கு. மயிர் சிவப்பாயிருக்கும். இதனுடைய மூளை மனிதனுடைய மூளையை ஒத்திருக்கும்.

"உங்களுக்கு நானே ஊராங்-ஊட்டான் வேஷம் போட்டுவிடுகிறேன். வெகு ஜோராக இருக்கும். வேஷம் போட்டபின் உங்களைப் பார்த்தால் அசல் ஊராங்-ஊட்டான் போலவே இருக்கும். விழாவிற்கு வருபவர்கள் உங்களைக்கண்டு வியப்பதோடு பயந்து நடுங்குவர்" என்று சொல்லி அரசரின் ஆர்வத்தை மேலும் தூண்டிவிட்டான் தவளை-தத்தி.

"ஓ! அப்போ பிரமாதந்தான்! தவளை-தத்தி! நீ பலே ஆள்! நீதான் எனக்குப் பொருத்தமான ஆள்!" என்று வியந்தார் மன்னர்.

"சங்கிலியின் கலகலப்புச் சப்தம் கூட்டத்தில் பரபரப்பையும் குழப்பத்தையும் உண்டாக்கும். நீங்கள் உங்கள் சொந்தக்காரரிடமிருந்து ஒன்ருகத் தப்பித்து ஓடிவந்ததாகக் கருதப்படும். ஆடம்பரமாகவும் அலங்காரமாகவும் உடையணிந்த சீமான்களும் சீமாட்டிகளும் நிறைந்த ஒரு கூட்டத்திலே எட்டு-சங்கிலி-ஊராங் ஊட்டான் மிருகங்கள் ஆவேசத்தோடு நுழைந்தால் எப்படியிருக்கும் என்பதை நீங்கள் இப்போது கற்பனைகூட செய்துபார்க்க முடியாது!" என்ருன் தவளை-தத்தி.

"அதற்கென்ன சந்தேகம்!" என்ருர் அபூர்வ அரசர்.

நேரமாய்விட்டதால் தவளை-தத்தியின் அற்புதமான திட்டத்தை நிறைவேற்ற அரசரும் அமைச்சர்களும் அவசரமாக எழுந்தனர்.

இக்கதை நடந்த காலத்தில் நாகரிக நாடுகளில் ஊராங் ஊட்டானைக் காண்பது அரிது. தவளை-தத்தி அந்த மிருகத்தின் உருவ அமைப்பை உள்ளது உள்ளவாறே காப்பி அடித்தான். ஆகவே வேடம் வெகு பொருத்தமாகவும் இயற்கையாகவும் இருந்தது.

அரசருக்கும் அமைச்சர்களுக்கும் முதலில் உடலோடு உடலாக ஒட்டும்படியான மேல்சட்டையும் கால்சட்டையும் அணியப்பெற்றன. அவைகளின்மேல் தார் பூசப்

பட்டது. தாருக்குமேல் மெல்லிய உரோமங்கள் ஒட்ட லாம் என்று ஒருவர் யோசனை கூறினர். உரோமங்கள் ஒட்டுவதைவிட செஞ்சணல் நாருகளை ஒட்டுவதுதான் பொருத்தம் என்று அந்த யோசனையை மறுத்துவிட்டான் தவளை-தத்தி. தாருக்குமேல் செஞ்சணல் நார் கெட்டியாக ஒட்டப்பெற்றது. நீண்ட சங்கிலி ஒன்று வரவழைக்கப் பட்டது. அச்சங்கிலியை முதலில் அரசரின் இடையில் சுற்றிக்கட்டி அடுத்து அதேவிதமாக ஒவ்வொரு அமைச்சரின் இடையிலும் சுற்றிக்கட்டிக் கடைசியில் எல்லோரையும் வட்டமாக நிறுத்திச் சங்கிலியைப் பிணைத்து மீதமுள்ள பாகத்தை வட்டத்தின் குறுக்கே இரு வட்டங்கள்போன்று கட்டிமுடித்தான் தவளை-தத்தி. மையத்தில் தொங்கும் முடிச்சைப் பிடித்து மேலே தூக்கினுல் எட்டுப்பேரும் புகைவண்டித் தூரிப் பொம்மைகளைப்போல அந்தரத்தில் தொங்கவேண்டியதுதான்!

கூத்தரங்கம் மிகப் பெரியது. வட்டமானது. அதன் கூரை குடைபோல் குவிந்தது. கூரையின் உச்சியில் சாள ரம் ஒன்று இருந்தது. அதைத் தவிர வேறு சாளரங்கள் கிடையா. அச்சாளரத்தின் வழியாக, அரங்கத்தினுள் சங்கிலி ஒன்று தொங்க விடப்பட்டிருந்தது. அச்சங்கிலி இராக்காலங்களில் பெரிய சரவிளக்கைத் தொங்கவிடுவ தற்காக வைக்கப்பட்டிருந்தது. விளக்கை விருப்பம்போல் மேலே ஏற்றுவதற்கும் கீழே இறக்குவதற்கும் தக்க ஏற் பாடு இருந்தது. இதற்காக இணைக்கப்பட்டிருந்த மாற் றுச் சங்கிலி சாளரத்தின் வழியாகக் கொண்டு செல்லப் பட்டுக் கூரைமேல் விடப்பட்டிருந்தது. ஆகவே கூரை மேலிருந்து அச்சங்கிலியை இழுத்தால் விளக்கு மேலெழும்; தளர்த்தினுல் விளக்குக் கீழே இறங்கும்.

அறையின் அலங்கார வேலைகளெல்லாம் சந்தநடை யாளின் சொந்தக் கருத்தின்படி செய்து முடிக்கப்பெற்றன. சில விவரங்களில் அவளுக்குத் தவளை-தத்தி வழி காட்டி-

னான். அவனுடைய ஆலோசனையின்பேரில் தொங்கு
விளக்கை அகற்றி விட்டார். தொங்கு விளக்கு அறை
யின் மத்தியில் எரிந்து கொண்டிருந்தால் மெழுகு வர்த்தி
கள் உருகிச் சொட்டு சொட்டாகச் சொட்டும். அத்துளி
கள் கூட்டத்தினரின் உடைகளின் மேல் விழுந்து அவை
களைக் கெடுத்துவிடக் கூடும். பெரும் கூட்டம் கூடும்
போது விளக்கினடியில் யாரும் வராமல் இருக்க முடியுமா?
ஆகவேதான் சரவிளக்கு அகற்றப்பட்டது. எனினும்
அறைக்குள் வெளிச்சம் வேண்டுமே! அதற்காக மண்ட
பத்தைச் சுற்றிலுமிருந்த மாடக்குழிகளில் மெழுகு வர்த்தி
கள் வைக்கப்பட்டன. அவையன்றி அறையின் சுவரோ
ரத்தில் மொத்தம் 50 அல்லது 60 தீவட்டிகள் நாட்டி
வைக்கப்பட்டன.

குவளை-தத்தி கூத்தரங்கத்தில் ஜனங்கள் திரளாகத்
திரண்ட பின்புதான் அரசரையும் அமைச்சர்களையும்
அனுப்புவதாக முடிவு செய்திருந்தான். அதன்படியே நள்
ளிரவு வரையில் அவர்கள் கூத்தரங்கத்திற்கு வரவில்லை.
நள்ளிரவாயிற்று. அரங்கத்தில் பெருங்கூட்டம் கூடிவிட்
டது. நிற்க இடமில்லை. கடிகாரம் டாண்! டாண்!
என்று 12 தடவை அடித்தது. எட்டு ஊராங் ஊட்டான்
களும் ஒன்றோடொன்று பின்னிக் கொண்டு அரங்கத்தில்
நுழைந்தன. நுழைந்ததும் கால் தடுக்கி ஒன்றாக விழுந்
தன. சங்கிலியின் சலசலப்பு கூடியிருந்த ஜனங்களின் கவ
னத்தைக் கவர்ந்தது. எல்லோரும் மிருகங்களைக் கண்டு
அஞ்சினர்; திகைத்தனர். கூட்டத்தில் ஒரே பரபரப்பு;
குழப்பம்; கூச்சல். அரசரின் அகம் மகிழ்ந்தது. எதிர்
பார்த்தது நிறைவேறி விட்டதல்லவா? உண்மையாகவே
ஊராங் ஊட்டான்கள்தான் உள்ளே வந்து விட்டதாக
எல்லோரும் எண்ணினர். பெண்களில் பலர் மூர்ச்சித்து
விழுந்தனர். அரங்கத்திற்குள் எந்த விதமான ஆயுதமும்
கொண்டுவரக் கூடாதென்று அரசர் ஏற்கனவே ஆணை

யிட்டு இராமல் இருந்திருந்தால் மிருக வேடத்தில் வந்திருந்த அரசரையும் அமைச்சர்களையும் கூடியிருந்த ஜனங்கள் ஆயுதங்களால் தாக்கி அடித்துக் கொன்றிருப்பர். தாக்குவதற்கு ஆயுதம் இல்லாமல் போகவே தப்பியோடப் பார்த்தனர். ஆனால் தப்பியோடுவதற்கு வழி ஏது? தவளை - தத்தியின் முன்னேற்பாட்டின்படி அரசரும் அவருடைய கோஷ்டியாரும் அரங்கத்தில் நுழைந்தவுடனேயே கதவு மூடப்பட்டு பூட்டுப் போடப்பட்டு சாவி தவளை-தத்தியிடம் ஒப்படைக்கப்பட்டது.

அரங்கத்தில் குழப்பமும் கலவரமும் உச்சநிலையை அடைந்தன. ஒவ்வொருவரும் தம்மைக் காப்பாற்றிக் கொள்ளுவதில் கவனம் செலுத்தினர். குழப்பத்தால் அமைதியிழந்த கூட்டத்தின் நெருக்கமே உண்மையான ஆபத்தாக இருந்தது. இதற்கிடையில் அரங்கத்தின் கூரை மேல் போடப்பட்டிருந்த சங்கிலி சாளரத்தின் வழியாகக் கொஞ்ச கொஞ்சமாகக் கீழே இறங்கியது. அதன் கொக்கி தரையை எட்டிப் பிடிக்கும் வரையில்.

மிருகவேடம் புனைந்திருந்த அரசரும் அமைச்சர்களும் அரங்கத்தில் அங்குமிங்கும் அலைந்து கடைசியாகச் சங்கிலி தொங்கிக் கொண்டிருந்த இடத்திற்கு வந்து சேர்ந்தனர். அவர்களின் பின்னாலேயே வந்து கொண்டிருந்த தவளை-தத்தி அவர்களை மேலும் உற்சாகப்படுத்திவிட்டு அவர்களைப் பிணைத்திருந்த சங்கிலி வட்டத்தின் மைய முடிச்சைத் தூக்கிச் சாளரத்தின் வழியாகத் தொங்கிக் கொண்டிருந்த சங்கிலிக் கொக்கியில் மாட்டினான். மாட்டின மாத்திரத்தில் கூரையின் மேல் மறைவாக உட்கார்ந்திருந்த யாரோ ஒருவர் சங்கிலியை இழுக்க, கொக்கி கைக்கெட்டாத தூரம் மேலே சென்று விட்டது. அதன் காரணமாக ஒராங் ஊட்டான்கள் ஒன்று சேர்க்கப்பட்டன. கூட்டத்தவர் உண்மையை உணர்ந்து விட்டனர். நடந்தது அவ்வளவும் பொய்முகக் கூத்தின் ஒரு பகுதியே என்பதைப்

புரிந்து கொண்டனர். கலக்கம் களிப்பாக மாறியது. கூடியிருந்த ஜனங்கள் அனைவரும் கைகொட்டிச் சிரித்தனர். என்றுமே கண்டறியாத புதுமையான வேடிக்கையல்லவா? வயிறு புடைக்கச் சிரித்தனர்.

"அவர்களை என் பொறுப்பில் விட்டு விடுங்கள்!... அவர்களை என் பொறுப்பில் விட்டு விடுங்கள்!... அவர்களை உற்று பார்ப்பதற்குக் கொஞ்சம் அவகாசம் கிடைத்தால் போதும், அவர்களை இன்னாரென்று அடையாளம் கண்டுபிடித்துச் சொல்லிவிடுவேன்..." என்று உரக்கக் கத்தினான் தவளை-தத்தி.

தவளை-தத்தி கூட்டத்தின்மேல் தத்தித்தத்திச் சென்று சுவரை அடைந்து திவட்டி ஒன்றைப் பிடுங்கிக் கொண்டு, மீண்டும் அதே மாதிரி தத்தித் தத்தி அறையின் மையத்தை அடைந்தான். குரங்குபோல் அரசர் தலைமேல் தாவி, அங்கிருந்து, தொங்கிக்கொண்டிருந்த சங்கிலியில் தொத்திக் கொண்டான். ஊரான் ஊட்டான்களைப் பார்ப்பதற்காகத் திவட்டியைக் கீழே தாழ்த்திப் பிடித்தான்.

"இவர்கள் இன்னாரென்று கண்டு பிடித்து விடுவேன்" என்று மீண்டும் கத்தினான்.

எல்லோரும் (அரசர், அமைச்சர்கள் உள்பட) வயிறு புடைக்கச் சிரித்தனர்.

தவளை-தத்தி சீழ்க்கை யடித்தான். சங்கிலி வேகமாகச் சுமார் 40 அடி உயரம் மேலே சென்றது. எட்டு மிருகங்களும் ஒன்றோடொன்று மோதிக்கொண்டு அந்தரத்தில் தொங்கின. தவளை-தத்தியும் கூடவே மேலே சென்றான். மீண்டும் திவட்டியைத் தாழ்த்திப் பிடித்து அவர்களை இன்னாரென்று கண்டுபிடிப்பவன்போல் பாவனை செய்தான்.

கூடியிருந்தமக்கள் அனைவரும் ஆச்சரியத்தால் மலைத்து மெய்ம்மறந்து நின்றுவிட்டனர். வாயைத் திறந்துகொண்டு அந்தரத்தில் ஆடிய காட்சியைக் கண்ணிமைக்காமல் பார்த்

துக் கொண்டிருந்தனர். நிசப்தம் நிலவியது. அந் நிசப்தத்தைக் கலைத்தது, அரசர் சந்நடையாளின்மேல் மதுக் கிண்ணத்தை வீசி எறிந்தபோது ஏற்பட்ட சப்தம்போன்ற "கடாக்! கடாக்!" என்ற சப்தம்.

ஆனால் இத்தடவை அச்சப்தம் எங்கிருந்து வந்ததென்ற சந்தேகம் இல்லை. தவளை-தத்தி அரசரையும் அமைச்சர்களையும் முறைத்துப் பார்த்துத் தன் கோரப்பற்களை நறநறவென்று கடித்ததினால் ஏற்பட்ட சப்தந்தான்.

"ஹ!... ஹ!... ஹ!... ஹ!... இவர்கள் இன்னாரென்று தெரிகிறது இப்போது" என்று வெற்றிச் சிரிப்புச் சிரித்தான் தவளை-தத்தி. அரசரை உற்றுக் கவனிப்பவன் போல் பாவனை செய்துகொண்டே தீவட்டியை அரசரின் உடலில் முட்டவைத்தான். உடல் முழுக்கக் கெட்டியாக ஒட்டியிருந்த சணலில் தீப்பற்றிக்கொண்டது. அரைநிமிட நேரத்திற்குள் மற்ற ஊராங் ஊட்டான்களின்பேரிலும் தீப்பரவி விட்டது. எரியும் நெருப்பிலே எண்ணெய்யை வார்த்தாற்போல், எரியும் சணலோடு உருகிய தாரும் சேர்ந்துகொண்டது. தீ கொழுந்துவிட்டு எரிந்தது. கூடியிருந்த ஜனங்கள் எரிந்துகொண்டிருந்த எட்டு மிருகங்களையும் பார்த்துப் பரிதாபப்பட்டார்களேயன்றி வேறொன்றும் செய்வதற்கில்லை. தீ குப்பென்று மேலெழும்ப ஆரம்பிக்கவே தவளை-தத்தி சங்கிலியைத் தொத்திக்கொண்டே உயரத்திற்குச் சென்றுவிட்டான். அவன் சங்கிலியில் தொத்திக்கொண்டு மேலே சென்றதை எல்லோரும் ஆச்சரியத்தோடு பார்த்தனர். நிசப்தம் நிலவியது. இதுதான் சமயமென்று தவளை-தத்தி மீண்டும் பேசலானான்:

"இந்த பொய்முகக் கூத்தாடிகள் யாரென்று கண்டு பிடித்துவிட்டேன். இதோ இவன்தான் (அரசரைச் சுட்டிக் காட்டி) இப் பாராளும் மன்னன்—இரக்கமற்ற அரக்கன்—மதுவுண்டு மதிகெட்டுக் கூத்தாடும் மடையன்—ஏழைப் பெண்ணைச் சிறிதும் தயங்காமல் அடித்த அகங்

-கார அரசன். இவர்கள் யார் தெரியுமா? அறிவில்லாத அரசனுக்குத் துணைபோன மதிகெட்ட ஏழு மந்திரிகள்—முழு முட்டாள்கள். அடியேன் தவளை-தத்தி—அரசனுக்கு ஆனந்தம் அளித்த கோமாளி! இதுவே என் கடைசிக் கேளிக்கை—."

தவளை-தத்தியின் சிறிய சொற்பொழிவு முடிவதற்கும் அவனுடைய திட்டம் நிறைவேறுவதற்கும் சரியாக இருந்தது. அவன் பேச்சு முடியும்போது அவனிட்ட தீயும் தன் அழிவு வேலையை முடித்துவிட்டது. வெந்து கருகிய எட்டு பிணங்களும் சங்கிலியில் தொங்கின. பழிக்குப் பழி! அடிமை தன்னைக் கொடுமைப் படுத்தின அரசனை அழித்து விட்டான்!

தவளை-தத்தி தீவட்டியைப் பிணங்களின்மேல் வீசி எறிந்துவிட்டுச் சங்கிலியின் மேலேறிச் சென்று சாளரத்தின் வழியாக உச்சியைக் கடந்து சென்று மறைந்தான்.

கூரையின்மேல் உட்கார்ந்துகொண்டு சங்கிலியை இழுத்துத் தவளை-தத்தியின் திட்டத்தை நிறைவேற்ற உதவி செய்த ஆள் வேறு யாருமல்ல; சாட்சாத் சந்நடையாளே தான். பழிக்குப் பழி வாங்குவதில் வெற்றி பெற்ற இரு நண்பர்களும் இரவோடு இரவாகத் தப்பியோடிவிட்டனர் தங்கள் தாய் நாட்டுக்கு.

# களவுபோன கடிதம்

18...ஆம் ஆண்டு. இலையுதிர் காலம். கதிரவன் மறைந்து விட்டான். கதிரவன் எப்போது மறைவானோ என்று ஏங்கிக்கொண்டிருந்த இரவு நேரம் தன் தலையைக் காட்டத் தொடங்கியது. இரவின் இணைபிரியாத் தோழனான இருள் சூழத் தொடங்கியது. பாரிஸ் மாநகரில் என் நண்பர் ஆகஸ்த் டியூப்பின் அவர்களின் இல்லத்தில் நூல்நிலைய அறையில் அவரும் நானும் வீற்றிருந்தோம். ஒரு மணி நேரம் நிசப்தம் நிலவியது. சிகரெட்டுப் புகை அறையெங்கும் வட்டமிட்டது. மாலையில் நாங்கள் இருவரும் பேசிக்கொண்டிருந்த விஷயங்களைப்பற்றிச் சிந்தித்துக்கொண்டிருந்தேன்.

நான் சிந்தனையில் லயித்து மெய்மறந்திருந்தபோது கதவைத் திறந்துகொண்டு உள்ளே வந்தார் எங்களுடைய பழைய நண்பர் இருவாளர் ஜீ—. அவர் பாரிஸ் போலிஸ் படைத்தலைவர். துப்பறியும் நிபுணர் என்று பெயர் பெற்றவர். பல ஆண்டுகளுக்குப் பின் அவரை மீண்டும் சந்திக்கும் பேறு கிடைத்தது குறித்துப் பேருவகையடைந்தோம். அகமகிழ்ந்து வரவேற்றோம். ஆசனத்தில் அமர்ந்தார்.

விளக்கேற்ற எழுந்த டியூப்பின், ஜீ— பேச ஆரம்பிக்கவே விளக்கை ஏற்றாமலேயே அப்படியே உட்கார்ந்துவிட்டார்.

"தொல்லைப்பிடித்த ஆபீஸ் விஷயம் ஒன்றைப்பற்றி தங்களைக் கலந்து பேசவே இங்கு வந்துள்ளேன்" என்றார் ஜீ—.

"அப்படியானால் விளக்கே அவசியமில்லை" என்றார் டியூப்பின்.

"புதுமையான கருத்து!" என்றார், தம்மால் புரிந்து

கொள்ள முடியாத எதையுமே புதுமை! புதுமை! என்று உரைக்கும் படைத்தலைவர்.

"முற்றிலும் உண்மை" என்றார் டியூப்பின், படைத் தலைவருக்குச் சிகரெட் ஒன்றைக் கொடுத்துவிட்டுத் தம் நாற்காலியை அவருக்குப் பக்கத்தில் இழுத்துப் போட்டுக் கொண்டே.

"பேச வந்த விஷயம் என்னவோ? கொலை சம்பந்த மான விஷயமல்லவே?" என்றேன் நான்.

"அப்படியொன்றுமில்லை. வெகு சாதாரணமான விஷயந்தான். அதை நாங்களே சமாளித்துக்கொள்ள முடியும். எனினும் அவ்விஷயம் மிகவும் விசித்திரமான தாக இருப்பதால் அதை டியூப்பின் தெரிந்துகொள்ள ஆசைப்படுவாரே யென்று சொல்லவே வந்தேன்."

"சாதாரணமானது, ஆயின், விசித்திரமானது!" என்று வியந்தார் டியூப்பின்.

"ஆமாம். ஆனால் சரியாகப் பார்க்கப்போனால் அது சாதாரணமுமல்ல; விசித்திரமுமல்ல. அது வெகு எளிய விஷயமாக இருந்தும் எல்லோரையும் திகைக்க வைக் கின்றது."

"ஒருவேளை அதன் எளிமையே தங்களைத் திகைக்க வைப்பதற்குக் காரணம் போலும்" என்றார் என் நண்பர்.

"என்ன! அர்த்தமற்ற பேச்சாக இருக்கின்றதே" என்று சிரித்தார் படைத் தலைவர்.

"அதாவது, விஷயத்தின் புதிர் வெகு சாதாரண மானது போலும்" என்றார் டியூப்பின்.

"அட கடவுளே! அந்தமாதிரியான புதிரும் உளதோ?"

"தானாகவே விளங்கக் கூடியது"

"ஹா! ஹா! ஹ! ஹோ! ஹோ..." என்று பலமாகச் சிரித்தார் ஜீ—.

"அது போகட்டும். விஷயம் என்ன என்று தெரிந்து கொள்ளலாமா?" என்று கேட்டேன்.

"தாராளமாக! சொல்வதில் தயக்கம் ஒன்றுமில்லை. எனினும் ஓர் எச்சரிக்கை. நான் சொல்லப்போகும் விஷயம் வேறு யாருக்கும் தெரியக்கூடாது. அதைப் பரம இரகசியமாக வைத்துக் காப்பாற்ற வேண்டும். இரகசியம் வெளி வந்தால் என் வேலைக்கே ஆபத்து."

"யாரிடமும் சொல்ல மாட்டோம். பயமில்லாமல் சொல்லுங்கள்" என்றேன் நான்.

"சொல்ல விருப்பம் இல்லையென்றால் விட்டு விடுங்கள்" என்றார் டியூப்பின்.

"விருப்பம் இல்லாமல் இருந்தால் நான் இங்கு வந்திருக்கவே மாட்டேன். விஷயத்தைச் சொல்லுகின்றேன். கவனமாகக் கேளுங்கள். அரண்மனையில் முக்கியமான பத்திரம் ஒன்று களவுபோய் விட்டதாகப் பெரிய இடத்திலிருந்து தகவல் கிடைத்துள்ளது. அதைக் களவாடியவர் இன்னார் என்பதும் தெரியும். அவர் களவாடியதை ஒருவர் கண்ணாரவே கண்டார். அப் பத்திரம் இன்னும் அவரிடந்தான் இருக்கின்றது என்பதும் தெரியும்."

"அது எப்படித் தெரியும்?" என்று கேட்டார் டியூப்பின்.

"அதுவா? அப் பத்திரத்தின் தன்மையிலிருந்தும், களவாடியவனிடமிருந்து அது கை மாறியிருந்தால் உடனே ஏற்பட்டிருக்கக்கூடிய சில விளைவுகள் இதுவரை ஏற்படாமலிருப்பதிலிருந்தும் இன்னமும் அது அவனிடம்தான் இருக்கிறதென்று நிச்சயமாக ஊகிக்கலாம். அப்பத்திரத்தைப் பயன்படுத்தி அத்தகைய விளைவுகளை உண்டாக்க வேணும் என்கிற நோக்கத்துடன் தானே அதைத் திருடியிருக்கிறான்!"

"இன்னும் கொஞ்சம் விளக்கமாகச் சொன்னால் நல்லது" என்றேன் நான்.

"சரி. அந்தப் பத்திரமானது அதை வைத்திருப்பவருக்கு, குறிப்பான ஒருவர்மேல் சாய்கால் செலுத்தும் சக்-

தியை அளிக்கிறது" என்று விடை கூறினர் போலீஸ் தலைவர். எளிதில் புரிந்துகொள்ள முடியாத வகையில் குயுக்தியாகப் பேசுவதில் இவருக்கு எப்போதும் ஒரு தனி விருப்பம்.

"இன்னமும் எனக்கு சரியாக விளங்கவில்லை" என்ருர் டியூப்பின்.

"இன்னமா விளங்கவில்லை! சொல்லுகிறேன் கேளுங்கள். மூன்ரும் மனிதர் ஒருவர்—அவர் இன்னரென்று கூற நான் விரும்பவில்லை—அவருக்கு இப்பத்திரத்தில் அடங்கியவற்றைத் தெரியப்படுத்திவிட்டால் மிகப் பெரிய அந்தஸ்திலுள்ள ஒருவருடைய கௌரவத்திற்கு இழுக்கு நேரிடுதல் கூடும். இந்த உண்மையைப் பயன்படுத்திக் கொண்டு அப் பெரிய அந்தஸ்தாளரின் மேல் தன் செல்வாக்கைச் செலுத்தும் வாய்ப்பு அந்தப் பத்திரத்தை வைத்திருப்பவனுக்கு ஏற்படுகிறது."

அப்போது நான் குறுக்கிட்டு, "அதைத் திருடியவன் தன்னைப்பற்றி அதை இழந்தவர் என்ன கருத்துக் கொண்டிருக்கிருர் என்பதை அறிந்திருந்தால் மாத்திரமே அவர் மேல் அவன் சாய்கால் செலுத்துவதற்கு இடந்தரும் அல்லவா? அது இருக்கட்டும், அவ்வளவு பெரிய அந்தஸ்தாளர் மேல் அவ்வாறு செய்யத்துணியும் தைரியம் யாருக்கு...?"

"திருடியவர், அமைச்சர் டி...என்பவர். நேர்மையானவை, நேர்மையற்றவை, எவற்றையும் செய்யத் துணிந்தவர். அவர் திருடிய வகையும் துணிச்சலும் வியக்கத்தக்கவை. திருடிய இடம் அரண்மனையின் அந்தப்புரம். களவு போன பத்திரம் ஒரு கடிதம். கடிதத்தைப் பெற்ற அந்த சீமாட்டி அரண்மனையின் அந்தப்புறத்தில் தனியாக இருந்தபோது கிடைக்கபெற்ற கடிதம். அவள் அதைப் பிரித்து படித்துக் கொண்டிருந்தபோது, யாருக்கு அது தெரியக் கூடாதோ அவரே அங்குத் திடுமென வந்துவிட்டார். அவர் அந்தப்புறத்திற்குள் நுழைவதைக் கண்ட அவள்

அக்கடிதத்தை ஒளிக்க முயன்று, முடியாமல் போகவே மேஜையின் மேலேயே வைத்துவிட்டாள். இத்தருவாயில் அமைச்சர் 'டி' உள்ளே நுழைந்தார். அவருடைய சிவிங்கிக் கண்களுக்கு அக்கடிதம் தப்பவில்லை. முகவரியைப் பார்த்து அது இன்னருடைய கையெழுத்து என்பதை அடையாளம் தெரிந்து கொண்டார். அவளுடைய பரபரப்பையும் தடுமாற்றத்தையும் பார்த்து அக்கடிதத்தில் ஏதோ ஒரு இரகசியம் இருக்கவேண்டும் என்பதையும் யூகித்துத் தெரிந்து கொண்டார். வழக்கம்போல் தாம் வந்த காரியத்தை அவசர அவசரமாகக் கவனித்தார். வந்த காரியம் முடிந்தபின் அவள் மேஜைமேல் வைத்திருந்த கடிதத்தையொத்த வேருெரு கடிதத்தைத் தம் சட்டைப் பையிலிருந்து எடுத்துப் பிரித்துப் படிப்பதுபோல் பாவனைசெய்து பின் அதை அவளுடைய கடிதத்திற்குப் பக்கத்தில் வைத்து விட்டார். மீண்டும் அவளுடன் பதினைந்து நிமிடங்கள் பொது விஷயங்களைப்பற்றிப் பேசினர். கடைசியாக விடைபெற்றுக்கொண்டு வெளியேறினர். போகும்போது தம் கடிதத்திற்குப் பதிலாக அவளுடைய கடிதத்தை எடுத்துக் கொண்டு போய் விட்டார். அவள் அதைப் பார்த்துக் கொண்டிருந்தும் ஒன்றும் செய்வதற்கில்லாமல் வாளா இருந்தாள். தன் அருகில் மூன்ரும் மனிதர் ஒருவர் இருக்கும்போது அமைச்சரைத் திருப்பி அழைத்துக் கடிதத்தைக் கேட்கத் தைரியமில்லை'' என்று விஷயத்தைக் கூறி முடித்தார் ஜீ—.

''அவர் அவள்மேல் பூரண சாய்கால் செலுத்துவதற்குரிய நிலைமை, களவாடியவர் குண விசேஷங்களைப்பற்றி களவாடப்பட்டவர் அறிவார் என்னும் உண்மையை களவாடியவர் அறிவார் என்னும் காரணத்தால் நிச்சயமாகி விட்டதே! நீங்கள் அறிய விரும்பியது இதுதானே?'' என்ருர் டியூப்பின் என்னைப் பார்த்து.

''ஆமாம். கடிதத்தைக் களவாடியவர் தாம்பெற்ற ஆதிக்கத்தைக் கடந்த சில மாதங்களாக அரசியல் காரியங்

களுக்குக் கையாண்டு வருகிறார். கடிதத்தை இழந்தவர் அதை எப்படியும் திருப்பிப்பெறவேண்டும் என்று முயற்சி செய்துவருகின்றார். ஆனால் இக் காரியத்தை வெளிப்படையாகச் செய்வதற்கில்லை. ஆகவே வேறுவழியின்றி கடிதத்தைத் திருப்பிப் பெறும் பணியை என்னிடம் ஒப்படைத்து விட்டார்" என்று பதிலளித்தார் போலிஸ் அதிகாரி.

"உங்களைத் தவிர வேறு யாரிடத்தில் அப்பணியை ஒப்படைக்கமுடியும்!" என்றார் டியூப்பின் புகைச் சுருளுக்கிடையே.

"நீங்கள் என்னைப் புகழ்கின்றீர் எனினும் நான்தான் அவ்வேலைக்குத் தக்க ஆள் என்ற கருத்து நிலவியிருக்க வேண்டும் என்று தோன்றுகிறது." என்றார் அதிகாரி அக மகிழ்ச்சியோடு.

"உங்கள் பேச்சிலிருந்து அந்தக் கடிதம் இன்னும் அந்த அமைச்சரிடந்தான் இருக்கிறது என்று தோன்றுகிறது. கடிதத்தை வெறுமனே வைத்திருக்கும் வரையில் தான் அவர் ஆதிக்க நிலைமை நீடித்திருக்கும். கடிதத்தைக் கையாள முற்பட்டால் அவ்வாதிக்கம் போய்விடுமல்லவா?" என்றேன் நான்.

"உண்மை! உண்மை! இதே கருத்தை அடிப்படையாக வைத்துக்கொண்டுதான் நானும் காரியத்தில் இறங்கியுள்ளேன். ஆகவே முதலில் அமைச்சரின் அறையைச் சோதனை போடுவதற்கு ஏற்பாடு செய்தேன். அவர் அறியாவண்ணம் சோதனையை நடத்தப் பெரும் சிரமப்பட்டோம். அவர் அதை அறிந்துவிட்டால் எனக்குப் பேராபத்து நேரிடும் என்பதை நான் அறிவேன்," என்றார் ஜீ—.

"ஆனால் இந்தச் சோதனைகளெல்லாம் தங்களுக்கு எம்மாத்திரம்! இத்தகைய சோதனைகள் பல நடத்தியுள்ளனர் பாரிஸ் போலிஸ் குழுவினர்."

"ஆமாம்! போலிஸ் படையினரின் சோதனைத் திறமையைப் பற்றி எனக்கு எள்ளளவும் சந்தேகம் கிடை

யாது. அப்படிச் சந்தேகம் ஏதாவது இருந்திருந்தால் அமைச்சர் அறியாவண்ணமே சோதனையை நடத்தமுடியும் என்ற நம்பிக்கை ஏற்பட்டிருக்காது. அமைச்சரின் பழக்க வழக்கங்களும் என் திட்டத்திற்குச் சாதகமாகவே இருந்தன. அமைச்சர் இரவு நேரங்களில் பெரும்பாலும் வீட்டில் இருக்கமாட்டார். வேலைக்காரர்களும் மிகச் சிலரே. அவர்கள் அமைச்சரின் அறைக்குச் சற்று தூரத்தில்தான் தூங்குவது வழக்கம். மேலும் அவர்கள் குடிப்பித்தர்கள். குடித்துவிட்டுத் தூங்கினார்களானால் எமனே வந்தாலும் அவர்கள் அசையமாட்டார்கள்.

"உங்களுக்குத் தெரியுமே, என்னிடத்தில் பாரிஸ் நகரில் எந்த வீட்டையும் எந்த அறையையும் திறப்பதற்குச் சாவிகள் உள்ளன என்று. மூன்று மாதகாலம் இரவு நேரங்களில் அவர் விடுதியைத் துருவித்துருவிச் சோதனை போட்டேன். களவுபோன கடிதத்தைக் கண்டெடுத்துவிட்டால் எனக்குப் பெருமை; புகழ்; ஏராளமான வெகுமதி! ஆகவே என் உற்சாகத்திற்கும் விடாமுயற்சிக்கும் அளவேது! களவாடியவர் பலே பேர்வழி! எனக்கு மூத்த பிள்ளையாக இருப்பார்போல் இருக்கிறது. என் கைவரிசைகளெல்லாம் அவரிடம் நடக்கவில்லை. அவர் விடுதியில் நாங்கள் தேடாத இடமே இல்லை என்று சொல்லலாம். மூலை முடுக்கு, சந்து பொந்து — எல்லா இடங்களிலும் தேடினோம். கடிதத்தை எங்கெந்த இடங்களில் ஒளித்து வைக்க முடியுமோ அந்தந்த இடங்களிலெல்லாம் தேடினோம்! என்ன தேடியும் பயன் கிடைக்கவில்லை."

"அதுசரி. அவர் அக்கடிதத்தைத் தம் விடுதியில்தான் ஒளித்து வைத்தேயாகவேண்டும் என்ற கட்டாயமென்ன? வேறெங்காவது ஒளித்து வைத்திருக்கக்கூடாதா?" என்று நான் கேட்டேன்.

"வேறெங்கும் ஒளித்துவைத்திருக்க முடியாது. எந்த நிமிடத்திலும் அக்கடிதத்தை எடுக்கவேண்டிய அவசியம்

இருப்பதால் அதை வேறிடத்தில் வைத்திருக்க முடியாது" என்றார்.

"எடுக்கவேண்டிய அவசியமா?" என்றேன் நான்.

"அதாவது அதைக் கிழித்தெறியவேண்டிய நிலை" என்றார் டியூப்பின்.

"அப்படியானால் கடிதம் அவர் விடுதியில்தான் இருக்கும். சந்தேகமேயில்லை. அவர் அதைத் தன்னிடத்திலேயே வைத்திருக்கவும் முடியாது" என்றேன் நான்.

"உண்மை! உண்மை! முற்றிலும் உண்மை! என் ஆட்கள் அவர் செல்லும் வழியில் ஒளிந்திருந்து இருதடவை அவர் உடை முதலியவைகளைச் சோதித்தனர்" என்றார் போலிஸ் அதிகாரி.

"இத்தொல்லையை நீங்கள் தவிர்த்திருக்கலாம். 'டி'— என்ன அவ்வளவு பெரிய முட்டாளா? வழிச்சோதனை நடக்கக்கூடும் என்பதை எதிர்பார்த்து முன்னெச்சரிக்கையாக நடந்துகொண்டிருப்பார்" என்றார் டியூப்பின்.

"முழு முட்டாளல்ல. ஆனால் கவிஞர். கவிஞர் முட்டாளுக்கு மூத்தபிள்ளை தானே!" என்றார் ஜீ—.

"உண்மைதான். நானும் அந்த இனத்தைச் சார்ந்தவன்தான்." என்றார். டியூப்பின் பெருமூச்சு விட்டுக்கொண்டே.

"எப்படியெப்படிச் சோதனை போட்டீர்கள் என்று விளக்கிச் சொல்லமுடியுமா" என்று நான் கேட்டேன்.

"எல்லா இடத்தையும் அவசரமில்லாமல் சாவகாசமாகத் தேடினோம். கட்டிடம் முழுவதையும் சோதனை போட்டோம். அறை அறையாகத் தேடினோம். அறைகள் ஒவ்வொன்றையும் தேடுவதற்கு ஏழு இரவுகள் ஆயின. முதலில் தட்டுமுட்டுச் சாமான்களைச் சோதனை போட்டோம். எல்லா மேஜைகளையும் திறந்து பார்த்தோம். நன்கு பயிற்சிபெற்ற போலிஸ் அதிகாரியின் கண்களுக்கு அகப்படாத இரகசிய மேஜையும் இருக்கமுடியுமா? பெட்டி

களைத் தேடினோம். அடுத்தபடியாக நாற்காலிகளைச் சோதித்தோம். நீண்ட ஊசிகளினால் மெத்தைகளை குத்திச் சோதித்தோம். மேஜைகளின் மேற்பலகைகளை நீக்கிப்பார்த்தோம்."

"மேஜையின் மேற்பலகைகளை ஏன் நீக்கினீர்கள்?"

"ஏதாவது ஒரு பொருளை ஒளித்துவைக்க விரும்புகின்றவர் சில சமயங்களில் மேஜையின் மேற்பலகையைப் பிரித்தெடுத்துக் கால்களைக் குடைந்து அக்குழிகளில் அப்பொருளை வைத்து மீண்டும் பலகையை முன்போல் பொருத்தி வைப்பதுண்டு. கட்டில் கால்களையும் இந்த மாதிரி பயன்படுத்தக்கூடும்."

"தட்டிப்பார்த்துக் குழியிருப்பதைக் கண்டுபிடிக்க முடியாதா?" என்று நான் கேட்டேன்.

"முடியாது. மறைக்கவேண்டிய பொருளைக் குழியில் வைத்துச் சுற்றிலும் பஞ்சை வைத்து அடைத்துவிடுவர். மேலும் சப்தம் செய்யாமல் அல்லவா நாங்கள் சோதனை போடவேண்டியிருந்தது."

"ஆனால் எங்கெந்தச் சாமான்களில் அக்கடிதத்தை ஒளித்து வைக்கமுடியுமோ அந்தந்தச் சாமான்களையெல்லாம் நீங்கள் அக்கு வேறு ஆணி வேருகப் பிரித்துப் பார்த்திருக்க மாட்டீர்கள். கடிதத்தை நன்ருகச் சுருட்டி ஊசி போல் திரட்டி நாற்காலி இடுக்குக்களில்கூட வைத்துவிடலாமே, எல்லா நாற்காலிகளையும் துண்டுத் துண்டாகப் பிரித்துப் பார்த்திருக்க மாட்டீர்கள்!"

"நாற்காலிகளைப் பிரிக்கவில்லையென்ருலும் இடுக்குக்களையெல்லாம் பரிசோதித்தோம். ஏன்? எல்லாத் தட்டுமுட்டுச் சாமான்களின் இணைப்புக்களையெல்லாம் மிகவும் சக்திவாய்ந்த நுண்ணேக்காடியால் ஆய்ந்து பார்த்தோம். சமீபத்தில் கலைக்கப்பட்டதின் அறிகுறிகள் தென்பட்டதை யெல்லாம் பிரித்துப் பார்க்கத் தவரவில்லை, அணுப்போன்ற நுண்ணிய தூசியும் ஆப்பிள் பழம்போல் பெரிதாகத் தோன்றும். வச்சிரம் கலைந்திருந்தாலே, அல்

லது இணைப்பில் வழக்கத்திற்கு மாருகச் சற்றும் பெரிய சந்திருந்தாலே போதும் எங்கள் சந்தேகத்தைக் கிளப்ப."

"கண்ணுடிச் சட்டங்களையும் படுக்கைகளையும் படுக்கை உறைகளையும் திரைச் சீலைகளையும் கம்பளங்களையும் சோதனை போட்டீர்களா?"

"ஆமாம், தட்டுமுட்டுச் சாமான்களையெல்லாம் துருவித்துருவி ஆராய்ந்து பார்த்த பின் வீட்டையே பரிசோதிக்கத் தொடங்கினேம். நுண்ணேக்காடியால் வீடு முழுவதையும் அங்குல அங்குலமாகத் தேடினேம். அண்டையிலிருந்த மற்றுமிரு வீடுகளையும் பரிசோதித்தோம்."

"அண்டை வீடுகளைக் கூடவா? அப்பப்பா! அளவு கடந்த சிரமம்!" என்று வியந்தேன் நான்.

"பின்னே! சிரமம் இல்லாமல் ஆகுமா? சாதாரண வெகுமதியா?"

"தரைகளைக்கூடவா சோதனை போட்டீர்கள்?"

"தரைகளில் கற்கள் பதிக்கப்பட்டிருந்தன. அதனுல் அதிகம் சிரமம் இல்லை. கற்களுக்கிடையே இருந்த சாந்துகளைச் சோதித்தோம். எந்த இடத்திலும் சாந்து கலைக்கப் படவில்லை."

"டி—யின் தஸ்தாவேஜிகளையும் புத்தகங்களையும் சோதித்தீர்களா?"

"அவைகளை விட்டுவிடுவோமா? எல்லாக் கட்டுக்களையும் எல்லாப் புத்தகங்களையும் பிரித்துப் பார்த்தோம். புத்தகங்களை உதறிப் பார்த்ததோடு திருப்தியடையாமல் அட்டைகளின் கனத்தைக்கூட அளந்து பார்த்தோம்; நுண்ணேக்காடியால் ஆய்ந்து பார்த்தோம். பையிண்டிங் கலைந்திருந்த புத்தகங்களையும் புதிதாகப் பையிண்டிங் செய்யப்பட்டிருந்த புத்தகங்களையும் ஊசியால் குத்திச் சோதனை போட்டோம்."

"தரைமேல் விரித்திருந்த கம்பளத்தின் கீழ் தேடினீர்களா?"

" ஆமாம். கம்பளங்களையெல்லாம் எடுத்து உதறிப் பார்த்தோம்."

" சுவரில் ஒட்டியிருந்த காகிதங்களை ?"

" அவைகளையுந்தான்."

" நிலவறைகளில் தேடினீர்களா ?"

" தேடினோம்."

" அப்படியானால் நீங்கள் நினைத்ததுபோல் கடிதம் அவர் விடுதியில் இருக்க முடியாது " என்றேன் நான்.

" அப்படித்தான் போல் இருக்கிறது, டியூப்பின் ! இதற்கு என்ன வழி? ஏதாவது யோசனை கூறுங்களேன் !" என்று வேண்டிக் கொண்டார் போலிஸ் அதிகாரி.

" அமைச்சர் விடுதியை இன்னுமொரு தடவை சோதனை போட்டுப் பாருங்களேன்."

" இன்னுமொரு தடவையா ! அவசியமே இல்லை. கடிதம் அங்கு இல்லை என்பது திண்ணம்."

" அதைத் தவிர வேறு வழி இருப்பதாக எனக்குத் தோன்றவில்லை. ஆமாம் ! கடிதத்தின் அடையாளங்கள் தங்களுக்குத் தெரியுமா ?" என்று கேட்டார் டியூப்பின்.

" கடிதத்தின் அடையாளங்களைத் தெரியாமலிருந்தால் அதை எப்படித் தேட முடியும்."

கடிதத்தின் அங்க அடையாளங்களை விவரமாக எடுத்துக் கூறினார். கடைசியில் ஏமாற்றத்துடன் விடைபெற்றுச் சென்றார்.

ஒரு மாதம் கழித்து அவர் மறுபடியும் வந்தார். ஏதேதோ பேசிக் கொண்டிருந்தோம். கடைசியில் நான் பழைய சமாச்சாரத்தைப் பற்றி விசாரிக்க முற்பட்டேன்.

"ஜீ—! காணுமல் போன கடிதம் என்னுயிற்று. அமைச்சரை அசைக்க முடிந்ததா ?" என்று கிண்டலாகக் கேட்டேன் நான்.

" திருட்டுப் பயல் சாகமாட்டேங்கிருனே ! டியூப்பின் சொன்னுரே'ன்னு அவன் விடுதியை மறுபடியும் ஒரு

முறை சோதனை போட்டுப் பார்த்தேன். பயன் இல்லை. எல்லாம் வீண் முயற்சி.''

"கடிதம் கிடைத்தால் எவ்வளவு வெகுமதி கிடைக்கும் என்று சொல்லவேயில்லையே!'' என்று டியூப்பின் வினவினார்.

"வெகுமதியா? ஏராளமான வெகுமதி. இவ்வளவு தான் என்று திட்டமாகச் சொல்லமாட்டேன். ஆனால் ஒன்று. கடிதத்தைக் கொண்டு வந்து கொடுப்பவருக்கு நான் 5000 வெள்ளிக் காசுகள் கொடுக்கத் தயார். நாள் செல்லச் செல்ல கடிதத்தின் அவசியமும் அதிகமாகிக் கொண்டே இருக்கிறது. அன்றிருந்ததைவிட இன்று வெகுமதி இருமடங்காய் விட்டது. இன்னும் கொஞ்ச நாள் போனால் அது மும்மடங்கானாலும் ஆகலாம்.''

"என்ன இருந்தாலும் இவ்விஷயத்தில் நீங்கள் முழுத் திறமையும் செலுத்தவில்லை என்றுதான் சொல்லவேண்டும். இன்னும் கொஞ்சம் முயற்சி செய்ய வேண்டும்'' என்றார் டியூப்பின் வெகு சாதுரியமாக.

"எப்படி?''

"எப்படியா? வேறு யாருடைய உதவியையாவது நாடுவதுதானே! அபர்நேதே-யின் கதை தெரியுமா உங்களுக்கு?''

"அபர்நேதே நாசமாய்ப் போகட்டும்! அவர் பேச்சு எதற்கு?''

"ஒரு சமயம் அபர்நேதேவை கஞ்சப் பிரபு ஒருவர் ஏமாற்றப் பார்த்தார். அபர்நேதே பிரபல டாக்டர் அல்லவா? கஞ்சப் பிரபு தமக்கு என்ன நோய் என்பதைப் பற்றிக் காசு கொடுக்காமலேயே தெரிந்துகொள்ள வேண்டுமென்று ஆசைப்பட்டார். ஆகவே தக்க சமயத்தை எதிர் பார்த்துக் கொண்டிருந்தார். ஒருநாள் டாக்டர், கஞ்சப்பிரபு இன்னும் சில நண்பர்கள் எல்லாம் ஒன்றாக உட்கார்ந்து கொண்டு உலக விஷயங்களைப் பற்றிப் பேசிக்கொண்டிருந்தனர். கஞ்சப் பிரபு இதுதான் சமயமென்று 'ஒரு

ஆளுக்கு வியாதியின் சின்னம் இன்னின்ன மாதிரியெல்லாம் இருக்கிறது. அந்த ஆளின் நோய் நிவிருத்திக்கு என்ன கொடுப்பீர்கள்' என்று டாக்டரைக் கேட்டார். ஒரு ஆள் என்று குறிப்பிட்டது தம்மையேதான். டாக்டர் ஏமாறவில்லை. உண்மையை உணர்ந்துகொண்டார். 'அறிவுரை' கொடுப்பேன் என்று சுடச் சுடப் பதில் கொடுத்தாராம்."

"என்னை அந்தக் கஞ்சப் பிரபு என்று எண்ணிவிட்டீர்களா? எனக்கு யார் உதவி செய்தாலும் தக்க ஊதியம் வழங்க சித்தமாக இருக்கின்றேன், 5,000 வெள்ளிக் காசுகள் வேண்டுமானாலும் கொடுக்கச் சித்தமாயுள்ளேன்." என்று சிறிது குழப்பத்துடன் சொன்னார் போலிஸ் அதிகாரி.

"அப்படியானால் 5000 வெள்ளிக்காசுகளுக்கு ஒரு செக்கு எழுதிக் கொடுங்கள். இந்த இடத்திலேயே அந்தக் கடிதத்தைத் தாங்கள் பெறலாம்" என்று பதிலளித்தார் டியூப்பின்.

நான் மலைத்துப் போய்விட்டேன். போலிஸ் அதிகாரி திகைத்துத் திக்குமுக்காடினார். திறந்த வாயை மூடாமல், வைத்த கண்ணை எடுக்காமல் டியூப்பினையே பார்த்துக் கொண்டிருந்தார். சிறிது நேரத்தில் சுய உணர்வு பெற்றுச் செக்குப் புத்தகத்தை எடுத்து 5000 வெள்ளிக் காசுகளுக்கு செக்கு ஒன்றை எழுதிக் கையெழுத்திட்டு அதை டியூப்பினுக்குக் கொடுத்தார். எல்லாம் சரியாக இருக்கின்றனவா என்று கவனித்துவிட்டு செக்கை டியூப்பின் தன் கையேட்டில் வைத்துக் கொண்டார்; மேஜையைத் திறந்து கடிதத்தை எடுத்துப் போலிஸ் அதிகாரிக்குக் கொடுத்தார். அவர் அதை வாங்கிக்கொண்டு போய்விட்டார்.

அவர் சென்றபின் டியூப்பின் கடிதம் கிடைத்த வரலாற்றை விவரித்துக் கூறலானார்:

"பாரிஸ் போலிஸ் படையினர் திறமைமிக்கவர்கள்; விடா முயற்சியும் அறிவுக் கூர்மையும் தந்திரமும் உடைய

வர்கள் ; கடமையில் தவருதவர்கள். ஆகவே ஜீ.—அமைச் சரின் விடுதியைச் சோதனை போட்ட விதத்தை விளக்கிச் சொன்னபோது அவரை நான் முழுக்க முழுக்க நம்பினேன். அவர் அத்தகைய சோதனையை நடத்தியே இருப்பார். அதைப்பற்றி ஐயமே இல்லை."

"அப்படியா ?" என்று வியந்தேன் நான்.

"ஆமாம். அவர்கள் கையாண்ட முறைகள் மிகச் சிறந்தவை மட்டுமல்ல; செவ்வனே செயல்படுத்தவும்பட் டன. அவர்கள் தேடிய இடங்களுக்குள் அக் கடிதம் ஒளித்து வைக்கப்பட்டிருப்பின் அதை நிச்சயமாகக் கண் டெடுத்திருப்பார்கள்."

இதைக் கேட்டதும் எனக்குச் சிரிப்புத்தான் வந்தது எனினும் அவர் பேச்சு விளையாட்டாகத் தெரியவில்லை. வினையாகவே பேசினுர்.

"முறைகள் உயர்ந்தவை; நன்கு கையாளவும் பட் டன. எனினும் அவர்கள் எடுத்துக்கொண்ட காரியத்திற் கும் சம்பந்தப்பட்ட ஆளின் நிலைக்கும் பொருத்தமில்லை. ஜீ.—திறமைசாலி ; நல்ல முறைகளைத் தெரிந்தவர். அவை களைத் தழுவியே தம் காரியங்களை நிறைவேற்றுவார். ஆனுல் அவருக்கு சமயோசித புத்தி இல்லை. ஒற்றை, இரட்டை விளையாட்டில் கைதேர்ந்த பையன் ஒருவனைப் பற்றிக் கேள்விப்பட்டேன். அது இந்தச் சமயத்தில் நினை வுக்கு வருகிறது. ஒற்றை, இரட்டை விளையாட்டு சுலப மான விளையாட்டுத்தான். ஒருவர் தம் கையில் சில கோலி களை வைத்து மூடிக்கொண்டு மற்ருெருவரை ஒற்றையா ? இரட்டையா ? என்று கேட்பார். அடுத்தவர் சொல்லுவது சரியென்ருல் அவருக்கு வெற்றி ; இல்லையென்ருல் தோல்வி. இதுதான் ஒற்றை, இரட்டை விளையாட்டு. இந்த விளை யாட்டில் அந்தப் பையன் கைதேர்ந்தவன் ; பள்ளிக்கூடப் பையன்கள் எல்லோரையும் வென்றுவிட்டான். ஒற்றை இரட்டை சொல்லுவதில் அவன் சில சூட்சுமங்களைக்

கையாண்டான். அவன் எதிராளியின் அறிவுக் கூர்மையை அளந்து பார்ப்பதின் மூலம் சரியான விடையைக் கண்டு பிடித்து விடுவான். உதாரணமாக அவனோடு ஒற்றை, இரட்டை விளையாடுபவன் மிகவும் சாதாரணப் பேர்வழி என்று வைத்துக்கொள்ளுவோம். அவன் கையில் கோலி களை வைத்து மூடிக்கொண்டு ஒற்றையா, இரட்டையா என்று கேட்டால் நம் பையன் 'ஒற்றை' என்று பதில் சொல்லுவான். இத் தடவை தோல்வி. ஆனால் அடுத்த தடவை வெற்றி. ஏனெனில் அப் பேர்வழி இரண்டாம் தடவையில் ஒற்றைப்படை எண்ணிக்கையில் கோலிகளை வைத்திருப்பான். இவ்வளவிற்குத்தான் அவன் தந்திரம் எல்லாம். இதை அம்மாணவன் யூகித்து அறிந்து கொண்டு 'ஒற்றை' என்று பதில் சொல்லி வெற்றி பெறுவான். இந்த விதமாக ஒவ்வொருவருடைய மனப்போக்கையும் அறிந்து சரியான பதில் அளித்து வெற்றி பெற்று வந்தான் அப் பையன். இந்த அறிவை மற்ற மாணவர்கள் 'அவனுடைய அதிருஷ்டம்' என்று வியந்தனர். அந்த அதிர்ஷ்டந்தான் என்ன?" என்று வினவினர்.

"அது வேறு ஒன்றுமில்லை; விடை சொல்ல வேண்டியவர் போட்டியாளரின் அறிவுத் திறனை அறிந்துகொள்ளுவதே யாகும்."

"அதேதான். மற்றவர்களின் மனத்தை அவனால் எப்படி அறிய முடிந்தது என்று விசாரித்தேன். அதற்கு அவன் பின்வருமாறு பதிலளித்தான்: 'மாற்றான் எவ்வளவு அறிவாளி அல்லது முட்டாள், எவ்வளவு நல்லவன் அல்லது கெட்டவன், அவனுடைய எண்ணங்கள் என்ன என்பதை அறிந்துகொள்ள அவனுடைய முகபாவனையை உற்றுக் கவனித்து அதேவிதமான முகபாவனையை நானும் வரவழைத்துக் கொள்ளுவேன். அப்போது என் மனத்தில் என்னென்ன எண்ணங்கள் உருவாகின்றன என்பதைக் கவனித்துத் தெரிந்துகொள்ளுவேன். இதுவே என் வெற்றி

யின் இரகசியம்.' இதுவே ராச்போகால்டு, லா பூகிவ், மாக்கியவெல்லி, காம்பனீலா ஆகியவர்களின் அறிவுக்கூர்மையின் அடிப்படையாகும்" என்ருர் டியூப்பின்.

"மாற்ருனின் மனத்தை அறிவதானது அவனுடைய அறிவைச் சரியாக அளவிடுவதைப் பொருத்தது. அப்படித்தானே?" என்று வினவினேன் நான்.

"ஆமாம். போலிஸ் அதிகாரியும் அவருடைய சகாக்களும் மாற்ருரின் மனத்தை அறிந்துகொள்ளத் தவறிவிட்டனர்; அவர்கள் தங்கள் திறமையையும் எண்ணங்களையுமே கவனித்தார்கள். மறைத்து வைத்த கடிதத்தைத் தேடுவதில் தாங்களாயிருந்தால் அதை எங்கெந்த இடத்தில் மறைக்க முற்பட்டிருப்பார்களோ அந்தந்த இடங்களில் தான் தேடினர். அவர்கள் எண்ணியது பொதுவாக நோக்குமிடத்துச் சரியாக இருக்கலாம்; பெரும்பாலோரின் பொதுவான கருத்தாகவும் இருக்கலாம். ஆனுல் தனிப்பட்ட குற்றவாளி ஒருவரின் தந்திரம் அவர்கள் கருத்துக்கும் எண்ணத்திற்கும் அப்பாற்பட்டதாக இருக்கும்போது அவர்களுடைய முயற்சி பயனளிப்பதில்லை; பழுதடைகிறது. போலிஸ் படையினர் சந்தர்ப்பத்திற்கும் சூழ்நிலைக்குமேற்பத் தங்கள் சோதனை முறைகளை மாற்றிக்கொள்ளுவதில்லை. எல்லாச் சமயங்களிலும் ஒரேவிதமான முறைகளையே கையாளுகின்றனர். அசாதாரண நெருக்கடியோ ஏராளமான வெகுமதியளிப்போ இருந்தால் கொள்கைகளைச் சிறிது மாற்றுவார்கள். அதுவும் பழங்காலக் கொள்கைகளைக் குருட்டுத்தனமாகப் பின்பற்றுவதாக இருக்கும். டி—யின் வழக்கு இதற்குத் தக்க சான்ருகும். காணுமல்போன கடிதத்தைத் தேடப் போலிஸ் படையினர் வழக்கமான முறைகளைத் தானே பின்பற்றினர். முறைகளை மாற்ற முயன்ருர்களா? வழிச்சோதனை, வீட்டைத் தேடுதல், புத்தகங்களில் தேடுதல், தட்டு முட்டுச் சாமான்களைச் சோதித்தல், நுண்ணேக்காடியால் ஆய்

தல்—இவையெல்லாம் பழைய முறைகள் தானே. இவைகளில் போலிஸ் அதிகாரி காலப் போக்கில் பழகிப்போன ஒரே மாதிரியான கொள்கைதானே பிரதிபலிக்கின்றது. நாற்காலியின் காலில் குழி பண்ணி அதில் கடிதம்போன்ற பொருளை ஒளித்து வைப்பார்கள் என்று போலிஸ் அதிகாரி சொன்னாரே! எத்தகையவர் இந்தமாதிரி முறைகளைக் கையாளுவர் என்று யோசித்தாரா? சாதாரண மக்கள் அதுவும் சாதாரண சமயங்களில் இத்தகைய முறைகளைக் கையாளுவர். இந்த முறைகளைக் கையாளப்பட்ட சமயங்களில் சற்று சிரத்தையோடு சோதனை போட்டால்கூட ஒளித்துவைத்த பொருளைத் தேடிக் கண்டெடுத்துவிடலாம். ஆகவே போலிஸ் அதிகாரி நினைத்த முறைகளையே மாற்றார்கள் கையாண்டார்களானால் அவர் மறைத்த பொருள்களைக் கண்டு எடுத்துவிடுவார். ஆனால் ஒளித்து வைத்த முறை அவர் கொள்கைக்கு முரண்பாடாக இருந்தால் அவர் முயற்சி பயன் நல்குவதில்லை. ஆகவே போலிஸ் அதிகாரி காணாமல்போன கடித விஷயத்தில் வெற்றி பெறாததற்குக் காரணம் அமைச்சர் டி—சாதாரணமான முறைகளைத்தான் கையாண்டிருக்கக்கூடும் என்று எண்ணியதே யாகும். அவர் தோல்விக்கு வேறொரு காரணமும் உண்டு. அதாவது அமைச்சர் ஒரு கவிஞர் என்பதற்காக அவரை ஒரு முட்டாள் என்று எண்ணிவிட்டார். எல்லா முட்டாள்களும் கவிஞர் என்று அவர் எண்ணுகிறார் போலும். எல்லாக் கவிஞர்களும் முட்டாள்கள் என்று அவர் எண்ணியதும் தப்பாகும்'' என்றார் டியூப்பின்.

"அமைச்சர் கணிதநூல் வல்லார்; கவிஞர் அல்ல என்று நான் எண்ணுகிறேன்'' என்றேன் நான்.

"இல்லை, இல்லை. அவரை நான் நன்கு அறிவேன். அவர் கணிதநூல் வல்லார் மட்டுமல்ல; கவிஞருமாவார்; நல்ல பகுத்தறிவாளர். வெறும் கணிதவியலாளராக மட்டும் இருந்திருந்தால் எதையும் எண்ணிப் பார்த்

திருக்கமாட்டார்; போலிஸ் அதிகாரி வெற்றி பெற்றிருப்பார்."

"நீங்கள் சொல்லும் கருத்துக்களெல்லாம் புதுமையாக, வழக்குக்கு மாறுனவைகளாக உள்ளனவே! வழிமுறை வழிமுறையாகப் போற்றப்பட்டுவரும் கருத்தைக் காற்றில் பறக்கவிட்டுவிடுவீர்கள்போல் இருக்கின்றதே! கணித காரணமே சிறந்த காரணம் எனக் கருதப்படுகிறதே!"

"பொதுக் கருத்துக்களெல்லாம் — உடன்பாடுகளெல்லாம் முட்டாள்தனமானவை. ஏனெனில் அவைகளைப் பெரும்பான்மையோர் ஏற்றுக்கொள்ளுகின்றனர் என்று ஓர் அறிஞர் கூறியுள்ளாரே அதற்குத் தாங்கள் என்ன சொல்லுகின்றீர்? கணித காரணமே சிறந்த காரணம் என்ற கருத்தை உலகில் வழங்கச் செய்தவர்கள் கணிதவியலாளர்களே. எடுத்துக்காட்டாக சிறந்த நோக்கத்திற்காகப் பயன்படக்கூடிய இயற்கணிதவியலில் பகுவியல் (analysis) என்ற சொல்லைப் புகுத்தியுள்ளனர். இந்த ஏமாற்று வித்தையைத் தோற்றுவித்தவர்கள் பிரெஞ்சுக்காரர்களே' என்று பதிலளித்தார் நண்பர்,

"பாரிஸ் எண்கணிதவியலாளரைக் கண்டால் தங்களுக்குப் பிடிக்காது போலும்!"

"கணிதவியலாளர் கற்பிக்கும் காரணகாரிய முறையை நான் எதிர்க்கிறேன். கணிதம், அமைப்பையும் அளவையும் பற்றிய அறிவியலாகும். கணித காரணம்என்பது அமைப்பு, அளவு ஆகியவற்றைக் கவனித்ததின்பேரில் செலுத்தப்பட்ட தருக்கம் ஆகும். அறிவியற்கணித (Pure Algebra) முடிவுகளைக்கூட பொது உண்மைகள் என்று கருதுவது பெரும் பிழையாகும். இப்பிழையைப் பல்கலைக் கழகத்தாரும் உணரவில்லை. கணித வெளிப்படை உண்மைகள் பொது வெளிப்படை உண்மைகளல்ல. அமைப்பு, அளவு ஆகியவைகளின் தொடர்புபற்றி மெய்யென்று கருதப்

படுவது பண்பியலில் பெரும்பாலும் பெரும் பொய்யாகக் கருதப்படுகிறது. முழுப்பொருளின் பாகங்களின் கூட்டுத் தொகை முழுப்பொருளுக்குச் சமம் என்று கணிதம் கூறுகின்றது. ஆனால் இது பண்பியலில் உண்மையல்ல; இரசாயன சாஸ்திரத்திலும் உண்மையல்ல. இந்த மாதிரியாகக் கணிதத்திற்கு மட்டுமே பொருந்தக்கூடிய கணித உண்மைகள் பலப்பல. ஆனால் கணித நூலார்கள் கணித உண்மைகள் கணிதத்திற்கு மட்டுமன்று, மற்ற துறைகளுக்கும் பொருந்தும் என்று பெருமையாகப் பேசிக் கொள்ளுகின்றனர்! உலகமும் அவர்கள் வாக்கைத் தெய்வ வாக்காக நம்புகின்றதே! ஆகவே அமைச்சர் வெறும் கணித நூல் வல்லவராக மட்டும் இருந்திருந்தால் போலிஸ் அதிகாரி எனக்குச் செக்கு எழுதிக்கொடுக்கவேண்டிய அவசியம் நேர்ந்திராது.

"அவர் கணித நூலார் மட்டுமல்ல; கவிஞருமாவார் என்பதை நான் நன்கு அறிவேன். அவர் திறமையையும் சூழ்நிலையையும் கருத்தில்கொண்டு தக்க நடவடிக்கையைக் கையாண்டேன். அவர் அரச அவையினர்; தைரியசாலி; கைதேர்ந்த சதியாலோசகர். அப்பேர்ப்பட்ட அமைச்சருக்கு போலிஸ் விவகாரங்கள் தெரியாமல் இருக்குமா? ஒளிந்திருந்து வழிச்சோதனை செய்வார்கள், விடுதியைச் சோதனை போடுவார்கள் என்பதெல்லாம் தெரியாமல் இருக்குமா? அவர் இரவு நேரங்களில் தம் விடுதியில் அடிக்கடி இல்லாமல் இருந்தது போலிஸ் அதிகாரியை ஏமாற்றுவதற்காகத்தான். போலிஸ் படையினர் விடுதியைச் சோதனை போட்டுப் போட்டுச் சலித்துக் கடிதம் அங்கில்லை என்ற முடிவுக்கு வரட்டுமே என்று அப்படிச் செய்திருப்பார். நடந்ததும் அப்படித்தானே.

"போலிஸ் படையினர் தங்கள் நடைமுறைக் கொள்கைகளைச் சந்தர்ப்பத்திற்கேற்ப மாற்றிக் கொள்ளுவதில்லை என்று நான் சொல்லிய கருத்து அவர் உள்ளத்

திலும் உதயமாயிருக்கும் என்பதில் ஐயமில்லை. இதை உத்தேசித்தே அவர் எல்லோரும் வழக்கமாக நாடும் மறைவிடங்களை நாடவில்லை. யாரும் எதிர்பார்க்காத சாதாரண இடத்தில் கடிதத்தை வைத்தார். போலிஸ் அதிகாரி நம்மை முதல் முறை சந்தித்தபோது அவரை வாட்டிய புதிர் சர்வ சாதாரணமானது என்று நான் சொன்னபோது அவர் சிரித்தது உங்களுக்கு நினைவிருக்கிறதல்லவா?''

"ஆமாம். அவர் சிரித்தது நன்றாக நினைவிருக்கிறது. குலுங்கக் குலுங்கச் சிரித்தாரே" என்றேன் நான்.

"லௌகிக உலகத்திற்கும் ஆன்மிக உலகத்திற்கும் பல ஒற்றுமைகள் உள்ளன. கடைப் பெயர்ப் பலகைகளில் எது கவர்ச்சிகரமானது என்று எப்போதாவது கவனித்திருக்கிறீரா?"

"இதைப் பற்றிக் கவனித்ததேயில்லை" என்று பதிலளித்தேன்.

"தேசப் படத்தை வைத்துக்கொண்டு ஆடக்கூடிய புதிர் விளையாட்டு ஒன்று உண்டு. நகரம், ஆறு, இராச்சியம் போன்ற ஏதாவதொன்றின் பெயரை ஒருவர் சொல்ல வேண்டியது. அடுத்தவர் படத்தில் அதைக் கண்டுபிடிக்க வேண்டியது. விளையாட்டுக்குப் புதியவர், போட்டியாளரைத் திகைக்க வைக்க மிக மிகச் சிறிய எழுத்துக்களால் எழுதப்பட்ட பெயரைச் சொல்லுவார். ஆனால் ஆட்டத்தில் கைதேர்ந்தவர் பெரிய பெரிய எழுத்துக்களால் படத்தின் ஒரு கோடியிலிருந்து மற்றொரு கோடி வரையில் எழுதப்பட்ட சொல்லைத் தேர்ந்தெடுப்பார். இச்சொல் காட்சியளவைக் கடந்த காரணத்தால்—பெரிய பெரிய எழுத்துக்களால் எழுதப்பட்ட பெயர்ப் பலகைகளைப்போல்—பார்வைக்குத் தப்ப நேரிடும். அதேபோல் மிகமிகத் தெளிவான, வெளிப்படையான விஷயங்கள் அறிவாளியின் கருத்துக்குப் படாமல் போவதும் உண்டு. இவ்வுண்மையைப்

போலிஸ் அதிகாரி ஜீ.—உணரவில்லை. அமைச்சர், கடிதத்தை எல்லோருக்கும் தெரியக்கூடிய வெளிப்படையான இடத்தில் வைத்திருந்தாலும் வைத்திருக்கலாமே என்று எண்ணிப் பார்க்கவே யில்லை.

"அமைச்சரின் ஆற்றலையும் துணிச்சலையும் ஊக்கத்தையும், கடிதத்தைக் கையிலேயே வைத்திருக்க வேண்டிய அவசியத்தையும், நல்ல காரியத்திற்காக அதைக் கையாள வைத்துள்ளார் என்பதையும், வழக்கமான சோதனைகளுக்கு அகப்படும்படியாக அது வைக்கப்படவில்லை என்று ஆதாரத்தோடு அதிகாரி கூறியதையும் எண்ணிப் பார்த்ததில் எனக்கு ஒன்று புலனாயிற்று. அமைச்சர் அதை ஒளித்து வைத்திருக்கமாட்டார் என்ற முடிவுக்கு வந்தேன்

"இந்த முடிவோடு கண்களுக்குப் பச்சைக் கண்ணாடிகள் அணிந்துகொண்டு ஒரு நாள் காலையில் அமைச்சருடைய விடுதிக்குச் சென்றேன். அமைச்சர் வழக்கம்போல் கொட்டாவி விட்டுச் சோம்பல் முறித்துக் கொண்டிருந்தார். அவருக்குச் சந்தேகம் ஏற்படாமல் இருப்பதற்காக கண் பார்வை சற்று மங்கலாய் விட்டதென்றும் கண்ணாடி அணிய வேண்டியதாயிற்று என்றும் சொல்லி வைத்தேன். என் வாய்மட்டும் அவரிடம் பேசிக்கொண்டிருந்தது. கண்கள் அறைக்குள் இருந்த பொருள்களை ஆராய்ந்தன. அவர் அமர்ந்திருந்த இடத்திற்குப் பக்கத்திலிருந்த மேஜையின்மேல் பலவகையான கடிதங்களும் காகிதங்களும் புத்தகங்களும் 'கன்னா பின்னா' என்று பரப்பிக் கிடந்தன. ஒன்று இரண்டு இசைக் கருவிகளும் கிடந்தன. நீண்ட நேரம் உற்றுக் கவனித்ததின்பேரில் சந்தேகப்படும்படியாக அதில் ஒன்றுமே இல்லை என்பதைக் கண்டேன். கடைசியில் தண்டயப் பலகையின் (Mantle piece) அடியில் பதிக்கப்பட்டிருந்த பித்தளைக் கொக்கியில் அழுக்குப் படிந்த நீலநிற நாடாவில் தொங்க விடப்பட்டிருந்த சரிகைச் சித்திர அட்டைப் பெட்டி என் கண்களுக்குப்பட்டது. அத்

பெட்டியில் மூன்று, நான்கு அறைகள் இருந்தன. அவைகளில் ஐந்தாறு 'விசிட்டிங் கார்டு'களும் ஒரே ஒரு **கடிதமும்** காணப்பட்டன. கடிதம் அழுக்குப் படிந்து கசங்கிக் கிடந்தது; இரண்டாகக் கிழிந்திருந்தது. வேண்டாத தென்று கிழிக்க முற்பட்டுக் கடைசியில் கொஞ்சம் கிழியாமல் விடப்பட்ட கடிதமாகத் தோன்றியது. அதில் அமைச்சர் டி—யின் இலச்சினை முத்திரை தெளிவாகத் தெரிந்தது. அதில் அமைச்சரின் விலாசம் எழுதப்பட்டிருந்தது. எழுத்து பெண் ஒருத்தியின் கையெழுத்தாகக் காணப்பட்டது. பெட்டியின் மேலறையில் அநாவசியமாக வேண்டா வெறுப்போடு திணிக்கப் பட்டிருந்தது போல் வைக்கப்பட்டிருந்தது.

" இதுவே **காணமல் போன கடிதம்** என்று முடிவு செய்தேன். ஆனல் இக்கடிதத்திற்கும் போலிஸ் அதிகாரி விவரித்த கடிதத்திற்கும் வேறுபாடுகள் பல இருந்தன. இக்கடிதத்திலிருந்த முத்திரை கருப்பு நிறம்; டி.—யினுடை இலச்சினையின் முத்திரை. போலிஸ் அதிகாரி விவரித்த அக் கடித முத்திரை சிவப்பு நிறம்; எஸ்.—குடும்ப இலச்சினை முத்திரை. இக்கடித முகவரி பெண் ஒருத்தி எழுதியது. அக்கடிதம் அரச குடும்பத்தார் ஒருவருக்கு எழுதப்பட்டது. அளவில் மட்டும் இரண்டும் ஒத்திருந்தன. ஆனல் இவ்வேறுபாடுகளும் கடிதம் அழுக்குப் படிந்து, கசங்கிக் கிழிந்து கிடந்ததும் அமைச்சரின் உண்மையான பழக்கங்களுக்கு முரண்பட்டவை. கடிதம் இருந்த நிலையானது பார்ப்பவர்கள் அதைப் பயனற்ற கடிதம் என்று கருதும் படியாக அமைச்சர் செய்த திட்டத்தைக் காட்டியது. மற்றும் அக்கடிதம் வேண்டுமென்றே எல்லோர் பார்வைக்கும் படும்படியாக வைக்கப்பட்டிருந்ததானது என் சந்தேகத்தை ஊர்ஜிதப்படுத்தியது.

" உரையாடலை வளர்த்திக் கொண்டே சென்றேன். அவர் விரும்பிக் கேட்கக் கூடிய விஷயத்தைப் பற்றியே

பேசினேன். ஆனால் கவனம் மட்டும் கடிதத்தை விட்டு அகலவில்லை. உற்றுக் கவனித்தபின் பேரில் அதன் வெளித் தோற்றம் தெளிவாகத் தெரிந்தது. கடிதத்தின் ஓரம் நெரிந்ததுபோல் தோன்றியது ; ஏற்கனவே மடிக்கப்பட்ட கெட்டியான காகிதம் அதே மடிப்பில் திருப்பி மடிக்கப் பட்டால் எப்படி யிருக்குமோ அப்படித் தோன்றியது. இதி லிருந்து உண்மையைப் புரிந்து கொண்டேன். கடிதம் திருப்பி மடிக்கப்பட்டு மீண்டும் முத்திரை இடப்பட்டிருக்க வேண்டும் எனப்பட்டது. காணாமல் போன கடிதத்தை— மூன்று மாதங்கள் பலபேர் சேர்ந்து தேடியும் அகப்படாத கடிதத்தைக் கண்டு விட்டேன். வந்த காரியம் முடிந்தது. விடைபெற்று வந்து விட்டேன். வரும்போது வேண்டு மென்றே என் தங்க மூக்குத்தூள் சிமிழியை மேஜையின் மேல் விட்டுவிட்டு வந்து சேர்ந்தேன்.

"அடுத்தநாட் காலையில், அங்கு விட்டுவிட்டு வந்த சிமிழியை எடுத்து வருவதை சாக்காக வைத்துக்கொண்டு அமைச்சர் விடுதிக்கு மீண்டும் சென்றேன். முந்திய நாள் பேசிய விஷயத்தைப்பற்றியே தொடர்ந்து பேசினோம். பேசிக்கொண்டிருக்கும்போது விடுதிக்கு வெளியே துப்பாக் கிக் குண்டு வெடித்த சப்தம் கேட்டது. அதைத் தொடர்ந்து ஆரவாரமும் அழுகைக் குரலும் வந்தன. அமைச்சர் இருக்கையை விட்டு எழுந்து சென்று ஜன்னலைத் திறந்து வெளியே என்ன நடந்தது என்பதைக் கவனித்துக்கொண் டிருந்தார். இதுதான் சமயமென்று அட்டைப் பெட்டியி லிருந்த கடிதத்தை எடுத்துச் சட்டைப் பையில் வைத்து விட்டு தயாராகக் கொண்டு வந்திருந்த போலிக் கடிதத்தை அந்தக் கடிதம் இருந்த இடத்தில் வைத்துவிட்டேன். ஒன்று மறியாதவன்போல் நானும் ஜன்னலண்டை சென்று தெரு வில் நடந்ததைக் கவனித்தேன்.

"தெருவில் ஒரே கலவரம். எவனோ ஒரு மூர்க்கன் மிருகத்தனமாக நடந்துகொண்டான். பெண்களும் குழந்தை

களும் கூடியிருந்த கும்பலில் துப்பாக்கியால் சுட்டான். நல்லவேளை அது போலி வேட்டு. கூடியிருந்தவர்கள் அவனை ஒரு பித்துப் பிடித்தவன் என்று எண்ணி ஒன்றும் செய்யாமல் விட்டு விட்டனர். அவன் அப்பால் நகர்ந்ததும் அமைச்சரும் ஜன்னலைவிட்டுத் திரும்பினார். நானும் விடைபெற்றுக் கொண்டு வந்துவிட்டேன். தெருவிலே நடந்த குழப்பம் நான் செய்த ஏற்பாடுதான். பைத்தியக்காரனாக நடித்தவன் நான் வைத்த ஆள். இவ்வேற்பாடு ஏன் செய்யப்பட்டது என்பதை நீங்கள் யூகித்து அறிந்துகொள்ளலாம்."

"உங்கள் மூளையே மூளை. உங்கள் திறமையைப் பாராட்டுகிறேன். போலிஸ் அதிகாரியைத் துப்பறியும் நிபுணர் என்று சொல்லுவதற்குப் பதிலாக உங்களைத்தான் சொல்ல வேண்டும். உங்கள் அறிவுக் கூர்மைக்கு இணையே கிடையாது. ஆமாம்; எனக்கு ஒரு சந்தேகம். அக் கடிதத்திற்குப் பதிலாகப் போலிக் கடிதத்தை ஏன் வைத்தீர்? முதல் தடவை சென்றபோதே வெளிப்படையாக அக்கடிதத்தைக் கைப்பற்றிக் கொண்டு வந்திருக்கக்கூடாதா?" என்று நான் வினவினேன்.

"அமைச்சர் அசகாய சூரர். அவர் விடுதியில் அவர் நலத்தில் அக்கறையுள்ள ஆட்கள் பலர் உளர். பலாத்கார முயற்சியை நான் கையாண்டிருந்தால் உயிரோடு திரும்பி இருக்க முடியாது. என்னுடைய அரசியல் அந்தஸ்தைத் தாங்கள் அறிவீர். இவ்விஷயத்தில் நான் அக்கடிதத்திற்குச் சம்பந்தப்பட்ட பெண்மணியின் கட்சியைச் சார்ந்தவன். 18 மாதங்களாக அமைச்சர் அவளைப் படாதபாடு படுத்தி விட்டார். இப்போது அவர் ஆதிக்கம் ஆட்டங்கொண்டு விட்டது. அக்கடிதம் இன்னும் தம்மிடத்தில்தான் இருக்கிறது என்ற நம்பிக்கையின்பேரில் தம் அதிகாரத்தைத் தொடர்ந்து செலுத்தப் பார்ப்பார்; அதனால் தம் அரசியல் அந்தஸ்தையே அழித்துக் கொள்ளுவார். அவர் வீழ்ச்சி நெருங்கிவிட்டது. அதைக்குறித்து நான் கவலைப்படவில்லை.

அவர் அறிவாளியாக இருந்தாலும் கொள்கையற்ற மனிதர் தாமே! அந்த அம்மையார் அவரை எதிர்க்கும்போது காணு மல்போன கடிதத்தைக் காட்டி அவரை அடக்க முற்படு வார்; போலிக் கடிதத்தைப் பிரித்துப் பார்த்து ஏமாற்றம் அடைவார். இதற்காகவே போலிக் கடிதத்தை வைத்துள் ளேன்" என்று பதிலளித்தார் டியூப்பின்.

"அது எப்படி? போலிக் கடிதத்திற்குள் ஏதாவது வைத்திருக்கிறீரா?"

"காலிக் கவரை வைக்கலாமா? அது அமைச்சரை அவமதிப்பதாகும். அமைச்சர் டி.—ஒரு சமயம் வியன்னுவில் எனக்குத் தீங்கிழைத்துவிட்டார். அப்போது நான் வேடிக்கைக்காகச் சொன்னேன், பழிக்குப்பழி வாங்கியே தீருவேன் என்று. ஆகவே இக்கடித விஷயத்தில் தம்மை ஏமாற்றியவர் யார் என்று தெரிந்துகொள்ள அவருக்கு ஆவலாக இருக்கும். ஏமாற்றியவர் யார் என்பதை அறிந்து கொள்ள 'நுழவு' கொடுக்காமல் இருக்க மனம் கேட்க வில்லை. அவருக்கு என் கையெழுத்து நன்கு தெரியும். ஆகவே ஒரு நூலிலிருந்து பின்வரும் வாக்கியத்தைத் தேர்ந் தெடுத்து அப் போலிக் கடிதத்தில் எழுதியிருந்தேன் :

'யானைக்கும் அடி சறுக்கும்'—."

## கோரக் கொலைகள்

உள நூலாளர்கள் சில மனவியல்களை பகுப்பியல் மனவியல்புகள் என்று சொல்லுகின்றனர். அவ்வாறு பகுப்பியல் மனவியல்புகள் என்று சொல்லப்படுபவைகள் உண்மையில் எளிதாகப் பாகுப்படுத்திப் பார்க்க இடம் அளிக்காதவைகளேயாகும். அம் மனவியல்புகளைப் பாகு படுத்திப் பார்த்து அறிந்துகொள்ள முடியாது. அவைகளின் பயன்களைக் கொண்டுதான் அவைகளை அறிந்துகொள்ள முடியும். அத்தகைய மனவியல்புகள் சிலரிடையே மட்டு மிஞ்சிய அளவிற்கு மண்டிக் கிடக்கும். அவைகள் அவர் களுக்கு எப்போதுமே பேரானந்தம் அளிக்கும் இன்ப ஊற்றுக்களாகத் திகழ்வதை நாம் அறிவோம். பயில்வான் தன் கட்டுமஸ்தான உடலைக் கண்டு--தனக்குள்ள மிருக பலத்தைக் கண்டு—பெருமையடைகின்றான்; தசைகளின் செயல்களைக் காட்டும் அப்பியாசங்களைச் செய்வதில் ஆனந் தம் அடைகிறான். ஆகவே பயில்வானுக்கு உடல் கட்டும், பலமும், அதைப் பெருக்குவதற்குரிய பயிற்சியுமே பெருமையின் பெட்டகமாகவும், இன்பத்தின் பிறப்பிட மாகவும் திகழ்கின்றன. அதேபோல் புதிர்விடுவிப்போன் சிக்கல்களை விடுவிப்பதில் தனக்குள்ள அரிய ஆற்றலைக் கண்டு பெருமை அடைகின்றான்; தன் திறமையைக் காட்டு வதற்குச் சிறுதிற வாய்ப்புக்கள் கிடைத்தாலும் போதும், அவன் மட்டற்ற மகிழ்ச்சியடைவான். அவனுக்குப் புதிர் கள் என்றால் புதையல் கிடைத்தமாதிரி; விடுகதைகள் என்றால் விளையாட்டுமாதிரி; புரியாக் குறியெழுத்துக்கள் என்றால் கற்கண்டு மாதிரி. புதிர்களை விடுவிப்பதிலும், விடுகதைகளை விடுவிப்பதிலும், புரியாக் குறியெழுத்துக் களை விளக்குவதிலும் அவனுடைய அறிவுக்கூர்மை புல னாகும். அவ்வறிவுக்கூர்மை சாதாரண மக்களுக்கு அசாதா

ரண அறிவாகத் தோன்றும். புதிர்விடுவிக்கும் திறமைக்கும் கணித அறிவு பேராதரவாக இருக்கிறது. கணித அறிவிலும் குறிப்பாகப் பின் நோக்கிச்செல்லும் வழிமுறையையுடைய மேல்நிலைக் கணித அறிவு முதல் தரமான பகுப்பியல் என்று சொல்லப்படுகிறது. அவ்வாறு சொல்லுவது முற்றிலும் பொருந்தாது. ஏனெனில் வெறும் கணிப்பதுமட்டும் பாகுபாடாகாது. உதாரணமாக சதுரங்க் ஆட்டக்காரன் எந்தவிதமான முயற்சியுமின்றி அடுத்தவனின் படையை வெட்டிவிடுகின்றான். இதன் காரணமாக சதுரங்க ஆட்டத்திற்குக் கூரிய அறிதிறனே தேவையில்லை என்று சொல்ல வேண்டியிருக்கின்றது. அறிதிறனைப் பற்றியும் பாகுபாட்டைப்பற்றியும் நான் ஒரு பெரும் நூல் எழுதத் தொடங்கிவிட்டதாக எண்ணிவிடாதீர்கள். நான் நூல் எழுதத் தொடங்கவில்லை; பின் வரும் கதைக்கு முன்னுரையாகச் சில கூற முன்வந்தேன். ஆகவே இச் சந்தர்ப்பத்தில் சதுரங்க ஆட்டத்தின் உண்மை இயல்பைத் திட்டமாக எடுத்துக்கூறப் பயன்படுத்திக் கொள்கின்றேன். சதுரங்க ஆட்டத்திற்கும் சதுரங்கம் ஆடும் கட்டப் பலகையிலேயே ஆடக்கூடிய டிராட்ஸ் ஆட்டத்திற்கும் அறிதிறனைப் பொருத்தவரையில் எவ்வளவோ வேறுபாடு உண்டு. சதுரங்க ஆட்டம் பகட்டானது; ஆனால் டிராட்ஸ் ஆட்டம் பகட்டல்லாதது. எனினும் டிராட்ஸ் ஆட்டத்திற்குத் தேவைப்படும் ஆழ்ந்த அறிவு ஆடம்பரமான சதுரங்க ஆட்டத்திற்குத் தேவையில்லை. இது மறுக்க முடியாத உண்மை. சதுரங்க ஆட்டத்தில் ஒவ்வொருவகைப் படையையும் குறிக்கும் காயையும் ஒவ்வொருவிதமாக நகர்த்த வேண்டும்; ஒவ்வொன்றுக்கும் ஒவ்வொருவகையான மதிப்பு. ஆகவே வெறும் சிக்கலான கட்டத்தை ஆழ்ந்த அறிவைச் சார்ந்த கட்டம் என்று தவறாக எண்ணிவிடுகிறார்கள். இத் தவறு சர்வ சாதாரணமாக நிகழ்கிறது. சதுரங்க ஆட்டத்தில் அறிவுக்கு இருக்

கும் வேலையைவிட கவனிப்புச் சக்திக்கே வேலை அதிகம். ஆட்டத்தின் போக்கை அசராமல் உற்றுக் கவனித்துக் கொண்டே இருக்கவேண்டும்; சிறிது அசட்டையாகவோ அசதியாகவோ இருந்துவிட்டாலும் ஆட்டம் கெட்டுவிடும்; தோல்வியில் முடியும். கணநேர அசதியால் முதலிலிருந்து கவனமாக ஆடிவந்தது அவ்வளவும் வீணுகிவிடும். காய்களை எண்ணற்ற தடவைகள் சிக்கலான வழிகளில் நகர்த்த வேண்டியிருப்பதால் கவனக்குறைவான அசதி ஏற்படத்தான் செய்யும். சிக்கல் அதிகமாக அதிகமாக தவறும் அதிகமாகும். ஆகவே பெரும்பாலும் அறிவுக் கூர்மையுள்ள ஆட்டக்காரனைவிட ஆட்டத்திலேயே கண்ணும் கருத்துமாக இருக்கும்— ஆட்டத்தில் கருத்தை ஒருமுகமாக நிலைநிறுத்தும்—ஆட்டக்காரனே வெற்றியடைகிருன். டிராட்ஸ் ஆட்டம் இதற்கு நேர்மாருனது. டிராட்ஸில் காய்களெல்லாம் ஒரே மாதிரியாக நகர்த்தப் படுகின்றன; மாறுபாடு கிடையாது; சிக்கல் இல்லை. ஆகவே கைத்தவறு ஏற்படுவதற்குச் சந்தர்ப்பமே இல்லை. வெறும் கவனத்தால் மட்டும் ஆட்டத்தைத் திறமையோடு ஆடிவிட முடியாது. கூரிய அறிவு வேண்டும். ஆழ்ந்த அறிவால்தான் அடுத்தவனை மடக்கமுடியும். எவன் மற்றவனை விடக் கூரிய அறிவுள்ளவனுக இருக்கின்ருனே அவனே ஆட்டத்தில் வெற்றி பெறுவான். உதாரணமாக, டிராட்ஸ் ஆட்டத்தில் ஒரு கட்டத்தில் இருவர் பக்கத்திலும் நான்கு, நான்கு காய்கள் மட்டுமே இருப்பதாக வைத்துக் கொள்ளுவோம். நான்கு காய்கள் இருக்கும் போது கவனக்குறைவு ஏற்படுவதற்கு நியாயமே இல்லை. ஆகவேவெற்றிதோல்வி என்பது காய்களை நகர்த்தும் முறையைப் பொருத்ததாகும். எவன் ஆழ்ந்த அறிவைச் செலுத்தி சாமர்த்தியத்தோடு காய்களை நகர்த்துகிருனே அவனே வெற்றி பெறுவான். பாகுபாட்டில் வல்லவன் முதலில் சாதாரண வழிகளிலேயே மாற்ருனை மடக்கப் பார்ப்பான்.

சாதாரண வழிகளில் முடியாது என்று தெரிந்ததும் மாற்ருனின் மனநிலையை அறிவதில் ஈடுபட்டு விடுவான். மாற்ருனின் மனநிலையைக் கொண்டு அவன் தவறும் சந்தர்ப்பங்களையும் அவசரப்பட்டுத் தப்பான முடிவுகளுக்கு வரக்கூடிய மார்க்கங்களையும் அறிந்து கொள்ளுவான்; பின் மாற்ருன் தப்புச் செய்யும்படியான சந்தர்ப்பங்கள் நேரும்படியாக ஆட்டத்தைச் செலுத்தி, இறுதியில் வெற்றியைத் தமதாக்கிக் கொள்ளுவான். மாற்ருன் தவறும் சந்தர்ப்பங்கள் சில சமயங்களில் சர்வ சாதாரணமானவைகளாகக் கூட இருக்கலாம்.

நான்குபேர்கள் சேர்ந்து ஆடக்கூடிய விஸ்ட் (Whist) என்ற சீட்டாட்டம் ஒன்று உண்டு. விஸ்ட் ஆட்டம் கணிக்கும் திறனை வளர்க்கக்கூடிய ஆட்டம் என்று பெயர் பெற்றது. உயர்ந்த அறிவுள்ள மேதைகள் விஸ்ட் ஆட்டத்தை மட்டற்ற மகிழ்ச்சியோடு ஆடியுள்ளனர். அதே சமயத்தில் அவர்கள் சதுரங்க விளையாட்டை அற்ப விளையாட்டாகக் கருதிப் புறக்கணித்துள்ளனர். பகுப்பியல் திறனுக்கு வேலை கொடுப்பதில் விஸ்ட் ஆட்டத்திற்கு இணையான ஆட்டம் வேறெதுவுமே இல்லை. இதில் எள்ளவும் சந்தேகம் இல்லை. கிறிஸ்துவ நாடுகளின் சிறந்த சதுரங்க ஆட்டக்காரன் சதுரங்க ஆட்டத்தில் கெட்டிக்காரனைவிடச் சற்று உயர்ந்தவனுக இருக்கலாம். ஆனுல் விஸ்ட் ஆட்டத்தில் வல்லவன் மனத்தோடு மனம் போராடும் முக்கியமான எல்லாக் காரியங்களிலும் வெற்றி பெறுவதற்குரிய திறமைசாலியாக இருப்பான். ஆமாம்! வல்லவன் என்று குறிப்பிட்டேன். வல்லவன் என்ருல் ஆட்டத்தில் முழுத் தேர்ச்சி பெற்றவன் என்றுதான் பொருள் கொள்ளவேண்டும். முழுத்தேர்ச்சி யென்ருல் சாமான்யமா? ஆட்டத்தைத் தனக்குச் சாதகமாக நடத்திச் செல்லுவதற்குரிய வழி வகைகளை யெல்லாம் தெரிந்திருப்பதே முழுத் தேர்ச்சியாகும். அந்த வழிவகைகள் என்ன

கொஞ்சமா? எத்தனை யெத்தனையோ! அவைகளெல்லாம்
சாதாரண அறிவுக்கு எட்டாதவை. அவைகளைச் சாதா
ரண ஆட்கள் புரிந்து கொள்ள முடியாது. உற்றுக்கவ
னித்து ஆடுபவனே சதுரங்கத்தில் வெற்றிபெறுவான்
என்று சொன்னேன், அல்லவா? அவ்வாறு உற்றுக் கவனிப்
பது என்பது என்ன? திட்டமாக ஞாபகத்தில் இருத்திக்
கொள்ளுவதே உற்றுக் கவனிப்பதாகும். ஆகவே உற்றுக்
கவனித்து ஆடக்கூடிய சதுரங்க ஆட்டக்காரன் விஸ்ட்
ஆட்டத்தில் வல்லவனாக இருக்க முடியும். மேலும்
ஹாயில்ஸ் விதிகள் (rules of Hoyle) ஆட்டத்தை முறைப்
படி ஆடுவதற்குப் போதுமானவை. அவைகளில் எல்லா
நுட்பங்களும் அடங்கியுள்ளன. அவ்விதிகள் ஆட்டத்
தின் நுட்பத்தை அடிப்படையாகக் கொண்டவைகளே.
ஆகவே நல்ல ஞாபகசக்தியும் ஆட்ட விதிகளின் ஞானமும்
நல்ல ஆட்டத்திற்குரிய அம்சங்களாகும். ஆனால் ஆட்ட
விதிகளுக்கு அப்பாற்பட்ட விஷயங்களில்தான் பகுப்பியலா
ளன் தன் திறமையைக் காட்டமுடியும். அவன் அமைதி
யாகக் கணக்கற்ற விஷயங்களைக் கவனிக்கின்றான். அவ்
வாறு கவனித்த விஷயங்களை வைத்துக்கொண்டு சில முடி
வுகளுக்கு வருகின்றான். அதேபோல் ஒரு வேளை மற்ற
வர்களும் செய்யக்கூடும். அவனுக்கும் மற்றவர்களுக்கு
முள்ள வேறுபாடு கண்டறிந்த முடிவுகளைப் பொருத்த
தல்ல; கவனிப்பின் தரத்தையே பொருத்ததாகும். பகுப்
பியலாளன் மற்றவர்களைவிட ஆட்டத்தைச் சரியான
முறையில் கவனிப்பதினாலேயே அவன் அவர்களைவிட
உயர்ந்தவனாகின்றான். எதைக் கவனிப்பது என்பதை
அறிந்து கொள்ளுவதே முக்கியம். பகுப்பியலாளன்
தானுண்டு தன் காரியம் உண்டு என்றிருக்கமாட்டான்;
ஆட்டமே குறி என்பதற்காக ஆட்டத்திற்குப் புறம்பான
விஷயங்களிலிருந்து உண்மைகளை அறிந்துகொள்ளுவதை
ஒதுக்கி வைக்கமாட்டான். அவன் தனக்கு விழுந்த சீட்

டுக்களைப் பார்த்துக் கொண்டே வாளா இருந்து விடமாட்டான் ; தன் கூட்டாளியின் முகபாவத்தைக் கவனிப்பான் ; அவன் முகத்தில் மலர்ச்சி காணப்படுகிறதா இல்லையா என்பதைப் பார்த்து அவனுக்குத் துருப்புக்கள் விழுந்திருக்கின்றனவா, இல்லையா என்பதை யூகித்து அறிந்து கொள்ளுவான் ; அவன் தன் கூட்டாளியின் முகபாவத்தை எதிராளிகள் ஒவ்வொருவனின் முகபாவத்தோடு ஒத்திட்டுப் பார்ப்பான் ; அவர்கள் ஒவ்வொருவனும் தன் கைச்சீட்டுக்களை இன இனமாகப் பிரித்து ஒழுங்குபடுத்தும் வகையை நன்கு கவனிப்பான். அவர்கள் தம் சீட்டுக்களின் மேல் செலுத்தும் கடைக்கண் நோக்குகளை உற்று நோக்குவான் ; அந்நோக்கால் அவர்களுடைய கைகளில் உள்ள சீட்டுக்களில் அடங்கிய துருப்புக்களையும் ஹானர்ஸ்களையும் ஒன்றன்பின் ஒன்றாக எண்ணி விடுவான் ; ஆட்டம் நடந்து கொண்டிருக்கும்போது அவர்களின் முகங்களில் ஏற்படும் மாறுதல்களை-சோர்வு, கிளர்ச்சி, ஆச்சரியம், மலர்ச்சி, ஏமாற்றம் முதலிய பாவங்களைக்-கவனித்து எவ்வளவோ விஷயங்களை அறிந்து கொள்ளுவான். எதிராளி தந்திரத்தைக் கையாள முயன்றால் அதைக் கையாளும் முறையை அவன் கவனித்து அதிலிருந்து எதிராளி மீண்டும் தந்திரத்தைக் கையாளுவானா என்பதை அறிந்து கொள்ளுவான். அவன் எதிராளியின் பாசாங்குகளின் உட்கருத்தையும் சீட்டை மேஜை மேல் விட்டெறியும் தோரணையிலிருந்து அதன் தன்மையையும் புரிந்து கொள்ளுவான். ஆட்டக்காரர்கள் தற்செயலாகவோ கவனக்குறைவாகவோ பேசும் சொற்கள், சீட்டைத் தற்செயலாகக் கீழே போட்டு விடுவது அல்லது திருப்புவது-பின், 'ஐயோ! சீட்டைத் தெரியாமல் காட்டி விட்டேனே' என்று கவலைப்படுவது அல்லது 'அது மற்றவர்களுக்குத் தெரிந்தால் என்னவாம்' என்று அசட்டையாக இருப்பது, வெற்றிபெற்ற சீட்டுக்களை எண்ணுவது, அவைகளை ஒழுங்குபடுத்துவது, மலைப்பு, திகைப்பு, தயக்

கம், ஆவல், நடுக்கம்-இவையெல்லாம் அவனுடைய உள்ளுணர்வுக்கு ஆட்டத்தின் உண்மை நிலையைக் காட்டிவிடும். இரண்டு, மூன்று 'ரவுண்டுகள்' (Rounds) முடிந்தவுடன் அவன் ஒவ்வொருவனுடைய கையிலும் உள்ள சீட்டுக்கள் என்னென்ன என்பதைத் திட்டமாக அறிந்து கொள்ளுவான்; ஆட்டம் எப்படி முடியும் என்பதை முன்கூட்டியே முடிவு செய்து கொண்டு தன் சீட்டுக்களைக் கீழே போட்டு விடுவான்.

இத்தகைய பகுப்பியல்த் திறனும் சாதாரணத் திறமையும் ஒன்று என்று எண்ணிவிடக் கூடாது. பகுப்பியலாளன் அவசியம் திறமைசாலியாக இருப்பான். ஆனால் திறமைசாலி (Ingenious) பாகுபாட்டுத்திறன் என்பதே சிறிதும் இல்லாதவனாக இருக்கக்கூடும். ஆக்கம் அல்லது கூட்டுச் சக்தியில்தான் வழக்கமாக திறமை தெரியவரும். அவ்வாறு திறமையை வெளிப்படுத்தும் ஆக்கம் அல்லது கூட்டுச் சக்தியை மண்டை அமைப்பாய்வாளர்கள் ஆதித் திறன் என்று எண்ணி அதற்குத் தனி அங்கம் வழங்கியுள்ளனர். அச்சக்தி ஒழுக்கவியலைப் பற்றி எழுதும் எழுத்தாளர்களின் கவனத்தைக் கவரும் அளவிற்கு ஏதும் அறியாத அப்பாவிகளிடத்தில் மிகுதியாகக் காணப்படுகிறது. புனைவுக்கும் கற்பனைக்கும் உள்ள வேறுபாட்டினும் திறமைக்கும் பாகுபாட்டுத் திறனுக்குமுள்ள வேறுபாடு பெரிது. எனினும் இவ்விரு வேறுபாடுகளும் ஒரே இயல்பின. உண்மையில் திறமைசாலி எப்பொழுதும் புனைவுடையவனாக இருப்பதைக் காணலாம். அதே போல் கற்பனை செய்பவன் பகுப்பியலாளனைத் தவிர வேறாக இருக்க முடியாது.

மேற்கூறிய கருத்துக்களுக்கு விளக்கவுரையாகக் காணப்படும் கீழ்க்கண்ட நிகழ்ச்சியுரை.

18-ஆம் ஆண்டில் இளவேனில் காலத்திலும் கோடைக் காலத்தின் ஒரு பகுதியிலும் பாரிஸ் மாநகரில் இருந்தேன்,

அங்கு இருக்கும்போது ஆகஸ்ட் டூப்பின் என்பவர் எனக்கு அறிமுகமானுர். டூப்பின் இளைஞர். உயர்ந்த குடும்பத்திலே-சிறப்பாக வாழ்ந்த குடும்பத்திலே-பிறந்தவர். ஆனுல் அவர் பல்வேறு தொல்லைகளுக்கு ஆளானதின் பேரில் வறியரிலும் வறியராய் விட்டார். அவருடைய ஏழ்மையை என்னென்று சொல்லுவது! கெட்டாலும் மேன்மக்கள் மேன்மக்களே என்ற பழமொழியின் எல்லையையும் கடக்கும் அளவிற்கு—ஏழ்மைக்கு ஒழுக்கம் இரையாகும் அளவிற்கு—ஏழைக்கு எதுவுமே இல்லை என்று சொல்லும் அளவிற்கு—அவர் ஏழையாகி விட்டார். அவர் உலகத்தைப் பற்றிய கவலையையே துறந்து விட்டார்; தம் சொத்துக்கள் தொலைந்தமையைக் குறித்து கவலைப்படுவதையும் விட்டு விட்டார். ஏதோ! அவருக்குக் கடன் கொடுத்தவர்கள் இரக்கம் காட்டியதின் பேரில் தந்தை வழிவந்த சொத்துக்களில் கொஞ்சம் எஞ்சியது. அவ்வாறு எஞ்சிய சொத்துக்களிலிருந்து கிடைத்த சிறிய வருமானத்தை வைத்துக் கொண்டு அவர் தம் வாழ்க்கையை நடத்திஞர்; ஆடம்பரத்தை அடியோடு தவிர்த்தார்; வரவுக்கேற்ற செலவு செய்ய வேண்டும் என்பதற்காகக் கடுமையான சிக்கனத்தைக் கையாண்டார்; இன்றியமையாத தேவைப் பொருள்களை மட்டும் வாங்கினுர்; புத்தகங்கள் மட்டுமே அவருடைய ஆடம்பரப் பொருளாக இருந்தன. புத்தகம் என்ருல் அவருக்குக் கற்கண்டு மாதிரி. புத்தகத்திற்குப் பஞ்சமேது பாரிஸ் மாநகரில்.

முதன் முதலாக அவரை ஒரு பழைய நூல் நிலையத்தில் சந்தித்தேன். எங்கள் சந்திப்பு ஒருவகையில் அலாதியானது. நான் எந்த அரிய புத்தகத்தைத் தேடிக்கொண்டிருந்தேனே அதே புத்தகத்தை அவரும் தேடிக்கொண்டிருந்தார். இருவரும் ஒரே புத்தகத்தைத் தேடிக்கொண்டிருந்ததினுல் அவர் என்னை அடிக்கடி பார்த்தார்; நானும் அவரைப் பார்த்தேன். முதலிலே கண்கள் பேசின. பின்

வாய்கள் பேசலாயின. அவரை இன்னாரென்று விசாரித்தேன். பிரெஞ்சுக்காரருக்கே இயல்பான கள்ளங்கபடற்ற முறையில் தம் வாழ்க்கை வரலாற்றைச் சுருக்கமாகக் கூறினார். அது சுருக்கமான வரலாறாயினும் சுவை மிக்கதாக இருந்தது. அவர் பேச்சில் அவருடைய பரந்த படிப்பு பிரதிபலித்தது. அதைக் கண்டு மலைத்தேன். என் உள்ளத்தில் ஆர்வம் பீறிட்டெழுந்தது. அவருடைய கற்பனையின் புதுமையைக் கண்டு வியந்தேன். பாரிஸ்மா நகருக்கு எதற்காகச் சென்றேனோ அந்த அலுவல்களைக் கவனித்துக் கொண்டிருக்கும் நிலையில் அவரோடு பழகும் வாய்ப்புக் கிடைத்ததை என் பாக்கியமாகவே கருதினேன். அவருடைய நட்பை விலை கொடுத்து வாங்கமுடியாத பெரும் பொக்கிஷமாகக் கருதினேன். என் உள்ளத்தில் எழுந்த எண்ணத்தை அவரிடம் மறைக்கவில்லை. அவருக்கும் என்னைப் பிடித்து விட்டது. கடைசியாக நான் பாரிஸில் இருக்கும் வரையில் அவர் வீட்டிலேயே தங்குவதாக ஏற்பாடாயிற்று. என்னுடைய சமூகச் சூழ்நிலைக்கு அவர் வீட்டின் எளிமை பொருந்தவில்லை. ஆகவே அவருடைய பழைய வீட்டை—கவனிப்பாரற்றுப் பாழடைந்து கிடந்த வீட்டைப்-பழுது பார்த்தேன்; வாடகைக்குத் தட்டு முட்டுச் சாமான்களைக் கொண்டு வந்து போட்டு ஒழுங்குபடுத்தினேன்.

நல்லவேளை, அந்த வீடு நகரத்தின் ஓர் ஒதுக்குப் புறத்தில் இருந்தது. இல்லையென்றால் எங்களுடைய அன்றாட வாழ்க்கை முறையைப் பார்ப்பவர்கள் எங்களைப் பைத்தியம் பிடித்தவர்கள் என்று கருத ஏதுவாகும். அப்படித்தான் நாங்கள் பைத்தியக்காரர்களாகத் தோன்றினாலும் எங்களால் யாருக்கு என்ன தொல்லை! தீங்கற்ற பைத்தியக்காரர்கள்தானே! ஆயினும் நாங்கள் ஓர் ஒதுக்குப்புறத்தில் தனியாகக் குடியிருந்தது நல்லதிற்கென்றே சொல்ல வேண்டும். எங்கள் வீட்டிற்கு யாரும் வரமாட்டார்கள்;

வரவழைத்தால் தானே வருவதற்கு. என் நண்பர்களுக்குக் கூட என் இருப்பிடத்தைப் பற்றிச் சொல்லாமல் மறைத்து வந்தேன். டூப்பின் சமூகத்தில் பழகி ஆண்டுகள் பலவாயின. ஆகவே பாரிஸ் மாநகரில் அவரை யாருக்கும் தெரியாது. நாங்கள் தனித்து வாழ்ந்தோம்.

என் நண்பர் விநோதமான பேர் வழி; இரவு நேரத்தை அவர் காதலித்தார். இரவைக் கண்டவுடனே சுறுசுறுப்பாகி விடுவார். இரவே அவருக்குப் பகல். அவருடைய இந்தப் பித்துக் கொள்ளித்தனத்திற்கும் நான் அடிமையானேன்; அவருடைய எல்லா இயல்புகளுக்கும் பணிந்தேன். என்னுடைய எண்ணம், விருப்பு, வெறுப்பு—என்ற எதுவுமே இல்லாத அளவிற்கு அவருடைய இயல்புகளில் ஐக்கியமானேன், இரவைப் பகலாக்கினேம்; ஆனல் பகலை இரவாக்க முடியுமா? பகலைக் கண்டவுடனே இரவு இருந்த இடம் தெரியாமல் ஓடிவிடுகிறது. என் நண்பருக்கு இதமளிக்கும் இன்ப இரவு நேரத்தை விரட்டியோட்டிவிடும் பகல் நேரத்தின் முகத்தில்கூட விழிக்க மாட்டோம். பொல்லாத பகலின் முகத்தில் விழிப்பதா? விடிகாலையிலேயே எங்கள் பழைய கட்டிடத்தின் பெரிய பெரிய ஜன்னல்களையும், கதவுகளையும் மூடிவிடுவோம். சூரிய வெளிச்சம் உள்ளே வராதபடிக்கு இரண்டு வாசனை மெழுகு வர்த்திகளைக் கொளுத்தி வைத்துக் கொள்ளுவோம். மெழுகுவர்த்திகள் நறுமணத்தை அள்ளிவீசும். அவைகளின் மங்கிய ஒளிக் கதிர்கள் இலேசான வெளிச்சத்தைத் தந்தன. அவைகளுக்கு மத்தியிலே எங்கள் ஆத்மாக்கள் சுறு சுறுப்பாக உழைத்தன. படிப்போம், எழுதுவோம், அல்லது உரையாடுவோம். பொழுது போவதே தெரியாது. கருமமே கண்ணுயினேர் கண் துஞ்சார் என்பது எவ்வளவு உண்மை. உண்மையான இரவு வந்துவிட்டதைக் கடிகார மணி அறிவிக்கும் வரையில் இவ்விதமாக ஏதாவது ஒரு வேலையைச் செய்த வண்ணமாய் இருப்போம்.

இரவு வந்து இருள் மேவியதும் வெளியே புறப்பட்டு விடுவோம். பாரிஸ் மாநகரின் வீதிகளை எங்கள் கால்கள் 'சர்வே' செய்யத் தொடங்கிவிடும். இருவரும் கை கோர்த்து கொண்டு ஜனநடமாட்டமற்ற தெருக்களின் வழியே விளக்குகளின் ஒளியிலும் கட்டிடங்களின் நிழலிலும் நடந்து சென்று சுற்றித் திரிவோம். பகல் நேரத்தில் தொடங்கி விட்ட விஷயத்தைப்பற்றி தொடர்ந்து பேசிக் கொண்டே செல்லுவோம்; இரவின் அமைதியான காட்சிகளைக் கண்டு எங்கள் உள்ளங்கள் துள்ளி விளையாடும். அமைதியிலே ஆனந்தம்! இரவிலே இன்பம்!

இவ்வாறு எந்தவிதமான நோக்கமும் காரியமுமில்லாமல் தெருக்களிலே சுற்றித் திரியும் வேளைகளில் டூப்பினுடைய புதுமையான பகுப்பியல் திறனைக் கண்டு வியந்துள்ளேன். அவருடைய வளமிக்கக் கருத்துக் களஞ்சியத்திலிருந்து அத்தகைய திறன் வெளிவருவது இயற்கையே. பாகுபாட்டியில் பயிற்சியில் திளைப்பதில் அவருக்கும் அளவுகடந்த ஆர்வம் இருப்பதாகத் தோன்றியது. அவ்வாறு திளைப்பதிலே இன்பம் பெற்றார். அதை அவர் மறைக்க முற்படவில்லை. அவர் என்னைப் பற்றி நன்கு அறிந்திருப்பதை நேரடியான ஆதாரங்களால் எடுத்துக் காட்டமுடியும் என்றும் மற்றவர்கள் அதைக் கண்டு மலைக்க வேண்டும் என்றும் பெருமையாகப் பேசினார். அவர் பேசும்போது அவருடைய முகத்தில் புன்சிரிப்புத் தவழ்ந்தது. அது அவர் உள்ளூற மகிழ்ந்ததைக் காட்டியது. இச்சமயங்களில் அவர் நடத்தை உணர்ச்சியற்றதாகவும் அருவமாகவும் இருந்தது. கண்களில் உணர்ச்சியில்லை. குரல் மும்மடங்குத் தெளிவாக இருந்தது. டூப்பினை இந்நிலைகளில் பார்க்கும்போது அவருடைய இரு இயல்புகளும் —ஆக்கம், பாகுபாடு—புலனாயின.

இப்போது நான் சொன்ன விஷயங்களிலிருந்து ஏதோ ஒரு மர்மத்தைப் பற்றி நான் கூறப்போவதாக எண்ணி

விடாதீர்கள். நான் டூப்பினைப் பற்றிக் கூறியது அவ்வள வும் பரபரப்பான அறிவின் பயன். அவர் பேசியதின் தன் மையை ஓர் உதாரணத்தால் விளக்குவதே நல்லது.

ஒரு நாள் இரவில் நானும் டூப்பினும் அரண்மனைக்குப் பக்கத்தில் அழுக்குப் படிந்த நீண்ட தெரு வழியாக நடந்து கொண்டிருந்தோம். இருவரும் சிந்தனையில் மூழ்கியிருந்த தால் 15 நிமிட நேரம் இருவரும் பேசவேயில்லை. இச்சம யத்தில் டூப்பின் திடீரென்று,

"அவன் சின்ன ஆள் என்பது உண்மையே. எனினும் அவன் கலையரங்கத்திற்கு நன்மை செய்யக்கூடும்." என்றார்.

"அதற்கென்ன சந்தேகம்" என்றேன். நான் என் னையும் அறியாமல், தொடர்ந்து பேசிக்கொண்டிருந்த பேச் சுக்குப் பதில் சொல்லுவது போல. சிந்தனையிலே ஆழ்ந் திருந்ததால் அவர் நான் சிந்தித்துக் கொண்டிருந்த விஷ யத்தை எப்படி அறிந்து அதற்குத் தக்கபடியாகப் பேசி னார் என்பதை நான் முதலில் கவனிக்கவில்லை. சற்று நேரத்தில் அதைக் கவனிக்க நேர்ந்ததும் வியந்தேன்! வியந் தேன்! விந்தையிலும் விந்தையான அவர் மதிநுட்பத்தைக் கண்டு ஆச்சரியப்பட்டேன்!

"டூப்பின்! இது என் அறிவுக்கு அப்பாற்பட்டது. நான் சிந்தித்துக் கொண்டிருந்த விஷயத்தை எப்படிக் கண் டறிந்தீர் என்பதை என்னால் எண்ணிக்கூடப் பார்க்க முடியவில்லையே. நான் அவனை(......?)ப்பற்றிச் சிந்தித்துக் கொண்டிருந்தது உங்களுக்கு எப்படித் தெரியும்?" என்று கேட்டேன். 'அவனை?' என்று மட்டும் சொன்னேனேயன் றிப் பெயரைக் குறிப்பிடவில்லை. நான் யாரைப்பற்றி எண்ணிக் கொண்டிருந்தேன் என்பதை அவர் சரியாக அறிவாரா என்பதைப் பரிசோதிக்க விரும்பினேன். ஆகவேதான் நான் எவனைப்பற்றி எண்ணிக் கொண்டிருந் தேனோ அவனுடைய பெயரைச் சொல்லவில்லை. அதைச் சொல்ல வாயெடுத்தும் சொல்லாமல் நிறுத்தினேன்."

''ஏன் தயங்குகிறீர்? 'சாந்திலி' என்பவனைப் பற்றித் தானே எண்ணிக் கொண்டிருந்தீர்? அவனுடைய சிறிய உடல் தோற்றம் சோக நாடகத்திற்குப் பொருந்தவில்லை என்று இப்போதுதானே மனதுக்குள் எண்ணிக் கொண்டிருந்தீர்'' என்றார் டுப்பின்.

உண்மையில் இவ்விஷயத்தைப்பற்றித்தான் நான் சிந்தித்துக் கொண்டிருந்தேன். சாந்திலி செயின்ட் டெனிஸ் தெருவில் செருப்புத் தைக்கும் வேலையில் இருந்தவன். அவன் நாடகப் பித்துப் பிடித்தவன். அந்தப் பித்து முற்றிப்போய் கடைசியில் அவன் தன் பழைய தொழிலை விட்டு விட்டு நாடகத்துறையில் ஈடுபட்டு நடிகனானான். கிரபெலான்[1] (Crebillon) எழுதிய சர்க்சீஸ்[2] (Xerxus) என்னும் சோக நாடகத்தில் வரும் 'சர்க்சீஸ்' ஆக நடிக்க முற்பட்டான்; பெரும் சிரமப்பட்டான். என்ன முயன்றும் வெற்றி பெறவில்லை. எல்லோருடைய கேலிக்கும் கிண்டலுக்கும் ஆளானான்.

---

1. கிரபெலான் (Crebillon 1674—1762) பிரெஞ்சுச் சோகக் கவிஞரும் நாடக ஆசிரியரும் ஆவார். இவர் பல நாடகங்களை இயற்றினார். அவைகளில் ஒன்று சர்க்சீஸ் (Xerxus) என்ற சோக நாடகம். இவருடைய நாடகங்கள் அரசவை அரங்கில் அடிக்கடி நடிக்கப் பெற்றன. ஆனால் 'சர்க்சீஸ்' நாடகம் ஒரே ஒரு தடவை மட்டும் நடிக்கப் பெற்றது. கிரபெலான் தன் மனைவியை இழந்ததும் வாழ்வில் விரக்தியுற்று மாடியறையில் நாய்கள், பூனைகள் முதலியவைகளோடு விளையாடித் துன்பத்தைத் துடைக்க முற்பட்டார். உணவையும் சுத்தத்தையும் பற்றிய கவலையை விட்டு விட்டார். துன்பத்தை மறக்க ஓயாது குடித்தார்.

2. சர்க்சீஸ் (கி. மு. 519-465) பாரசீக மன்னன். எகிப்தில் நடந்த கலகத்தை அடக்கியவன். கிரீஸ் நாட்டை வெல்ல மிகப்பெரிய படையைத் திரட்டினான். அப்படையில் ஐந்து லட்சம் வீரர்கள் இருந்தனர். அப் படையை ஏற்றிச் செல்ல மாபெரும் கப்பற் படையை நிறுவினான். நாகரிகமும் கலையும் ஓங்கிவந்த கிரீஸ் நாட்டில் சர்க்சீஸின் படைவீரர்கள் வந்து குவிந்தனர். மாபெரும் போர் மூண்டது. முதலில்

"என் உள்ளத்தை எப்படி ஊடுருவிப் பார்த்தீர்கள்? அதற்கு என்ன முறையைக் கையாண்டீர்கள்? அதைத் தயவுசெய்து சொல்லுங்கள்! சொல்லுங்கள்! தங்களுக்குக் கோடி புண்ணியம் உண்டு" என்று மன்றாடிக் கேட்டுக் கொண்டேன். எனக்கு ஒரே திகைப்பு; பரபரப்பு; வியப்பு. அவ்வளவு திகைப்பையும், பரபரப்பையும், வியப்பையும் முழுக்கக் காட்டவில்லை.

"சர்க்ஸிஸ் வேடத்தைத் தாங்கி நடிப்பதற்கு ஏற்ற உயரம் சாந்திலிக்கு இல்லை என்ற முடிவுக்குத் தங்களை வரும்படி செய்தவன் அந்தப் பழக்காரன்" என்று பதிலளித்தார் டூப்பின்.

"பழக்காரனு! நீர் என்னை வேண்டுமென்றே திகைக்கச் செய்தீர். எனக்கு எந்தப் பழக்காரனும் தெரியாதே!" என்று வியந்தேன் நான்.

"சுமார் 15 நிமிடங்களுக்கு முன்னால் நாம் இந்தத் தெருவுக்குள் நுழைந்தபோது உம்மைத் தாண்டிக் கொண்டு ஓடினனே ஒரு பழக்காரன், அவன் தான்."

இப்போது எனக்கு நினைவு வந்தது. நாங்கள் ச—தெருவிலிருந்து இந்தத் தெருவுக்குத் திரும்பியபோது ஒரு பழக்காரன் ஆப்பிள் பழக் கூடையைத் தலையில் சுமந்து கொண்டு என்னைக் கீழே தள்ளிவிடுபவன்போல் குறுக்கே

---

சர்க்சீஸின் வீரர்களுக்கு வெற்றி. ஆதென்ஸ் மாநகரைக் கைப்பற்றினர்; கோயில்களையும் வீடுகளையும் தீக்கிரையாக்கினர். ஆனால் கிரீஸ் நாட்டை அடுத்துள்ள சாலமிஸ் தீவுக் கடலில் நடந்த கடற்போரில் சர்க்சீஸின் கப்பற்படை தோற்றது. உணவு முதலியன கொண்டு வருவதற்குக் கப்பல்கள் இல்லாததால் சர்க்சிஸின் போர்வீரர்களும் பின்னடைந்தனர்; படுதோல்வியுற்றனர். சர்க்சீஸின் மனக்கோட்டை இடிந்தது. கிரீஸ் நாட்டையும் வென்று ஆளவேண்டுமென்ற அவனுடைய ஆசை நிராசையாயிற்று.

சர்க்சிஸைக் கதாநாயகனுகக் கொண்டு எழுதப் பெற்றதே 'சர்க்சீஸ்' என்ற நாடகம்.

ஓடினான். அவன் திடீரென்று வந்து மோதிய வேகத்தில் நான் கீழே விழுந்திருப்பேன். நல்ல வேலை, சமாளித்துக் கொண்டேன். ஆனால் இதற்கும் சாந்திலிக்கும் என்ன சம்பந்தம் என்றுதான் எனக்கு விளங்கவில்லை.

"நான் விளக்கிச் சொல்லுகின்றேன். எல்லாம் தங்களுக்குத் தெளிவாகத் தெரியும். நான் பேசத் தொடங்கியது முதல் பழக்கூடைக்காரன் தங்களை மோதினது வரையில் தாங்கள் என்னென்ன எண்ணினீர் என்பதை மீண்டும் கோர்வையாகப் பின்னோக்கி ஞாபகப்படுத்திப் பாருங்கள்.—சாந்திலி, ஓரைன், டாக்டர் நிக்கலஸ், ஸ்டெரியாட்டமி, கற்கள், பழக்காரன் ஆகியவர்கள் அச் சிந்தனைச் சங்கிலியின் கண்ணிகளாகக் காட்சியளிப்பார்கள்" என்றார் டூப்பின்.

ஒவ்வொருவரும் அவ்வப்போது குறிப்பிட்ட விஷயங்களைப்பற்றிக் குறிப்பிட்ட முடிவுக்கு வருவர். பின்னர் ஏதாவதொரு சமயத்தில் அம்முடிவுக்கு வந்த விதத்தை அவரே மீண்டும் நினைவுக்குக் கொண்டுவரும்போது அவர் மனத்திலே களிப்பு உண்டாகும். இவ்வாறு முன்னர் செய்த முடிவுகளைப்பற்றி பின்னர் மீண்டும் நினைவுப்படுத்திப் பார்க்கும்போது களிப்படையாதவர் யாரும் இருக்கமாட்டார்கள் என்றே சொல்ல வேண்டும். இச் செயல் சுவை மிக்கது. இதை முதற்தடவை முயற்சி செய்பவர் முடிவுக்கும் முடிவின் தொடக்கத்திற்கும் இடையேயுள்ள தொடர்பற்ற தன்மையையும் எல்லையற்ற தொலைவையும் கண்டு வியப்படைவார். விஷயத்தின் தொடக்கத்திற்கும் அதைப் பற்றிய முடிவுக்கும் சம்பந்தா சம்பந்தம் இல்லாத மாதிரித் தோன்றும் போதும், 'விஷயத்தின் தொடக்கம் எங்கே? அதன் முடிவு எங்கே? அப்பப்பா! அதற்கும் இதற்கும் எவ்வளவு தொலைவு!' என்று தோன்றும் போதும் வியப்பு ஏற்படுவது இயற்கைதானே! ஆகவே டூப்பின் சற்று நேரத்திற்கு முன்பு பேசியதை, மீண்டும் பேசியதைக்

கேட்டபோது—அதுவும் அவர் பேசியது அவ்வளவும் உண்மையே என்பதை மறுக்க முடியாத நிலையில் இருந்தபோது—நான் அடைந்த வியப்பை என்னென்று சொல்லுவது!

அவர் தொடர்ந்து பேசலானார்:

"ச.—தெருவிலிருந்து இந்தத் தெருவுக்குத் திரும்புவதற்கு முன்னர் நாம் இருவரும் குதிரைகளைப்பற்றிப் பேசிக்கொண்டிருந்தோம், அல்லவா? அவ்விஷயமே நாம் கடைசியாகப் பேசியது. இந்தத் தெருவுக்குத் திரும்பும்போது திடீரென்று குறுக்கே வந்த பழக்கூடைக்காரன் தங்கள்மேல் உராய, தாங்கள் பாதையைச் செப்பனிடுவதற்காக அங்குக் குவிக்கப்பட்டிருந்த கற்குவியலின் பேரில் சாய்ந்து கால் இடறிக் கீழே விழப் பார்த்தீர். நல்லவேளை, சமாளித்துக்கொண்டீர். எனினும் தங்களுக்கு முழங்காலில் அடிபட்டு விட்டது. அதன் காரணமாகத் தங்களுக்குக் கோபம் வந்து விட்டது. கோபத்தில் சில வார்த்தைகளை முணுமுணுத்தீர். பின்னர் திரும்பி அக்கற் குவியலைப் பார்த்தீர். அதன் பின்னர் இருவரும் பேசவில்லை. ஊமைகள் மாதிரி ஒன்றும் பேசாமல் மேல் நோக்கி நடந்தோம். நீங்கள் செய்த காரியங்களைக் கவனிக்க வேண்டும் என்று கவனிக்கவில்லை. கொஞ்ச காலமாக நான் என்னை யறியாமலேயே எதையும் இயல்பாகவே கவனிப்பவனாக ஆகிவிட்டேன். கவனிப்பதென்பது என்னுடைய இன்றியமையாத இயல்பாக ஆகிவிட்டது.

"நீங்கள் தரையை உற்றுக் கவனித்தீர். நடைபாதை மேடும் பள்ளமாகவும் இருந்ததைக் கண்டு முகத்தைச் சுழித்தீர். அதைக் கவனித்த நான் தாங்கள் இன்னும் கற்களைப்பற்றித்தான் நினைத்துக்கொண்டிருந்தீர் என்பதை அறிந்துகொண்டேன். அங்கிருந்து மேல் நோக்கி நடந்து லாமார்டன் சந்தினை அடைந்தோம். அச் சந்தின் நடைபாதையில் பரிசோதனைக்காகக் கற்களை அடுக்கிப் பொருத்தித் தளம்போட்டிருந்தனர். அதைக் கண்டவுடனே தங்

கள் முகத்திலே ஒரு மாறுதல். அருவருப்பு மறைந்து மகிழ்ச்சி மலர்ந்தது. உங்கள் உதடுகள் அசைந்தன. அவ் வசைவிலிருந்து நீங்கள் 'ஸ்டெரியாட்டமி' என்ற சொல் லைத்தான் முணுமுணுத்திருக்க வேண்டும் என்று முடிவு செய்துகொண்டேன். இத்தகைய நடைபாதைக்கு 'ஸ்டெரி யாட்டமி' என்றுதானே பெயர். 'ஸ்டெரியாட்டமி' என் பதை நினைக்கும்போது அணுக்களைப் (atomico) பற்றி நினைக்காமல் இருக்க முடியாது. அணுக்களைப்பற்றி எண் ணும்போது எபிக்யூரஸினுடைய தத்துவங்களைப்பற்றி நாம் பேசிக்கொண்டிருந்தது தங்களுக்கு நினைவிருக்கும் என்று எண்ணுகின்றேன். எபிக்யூரஸ் யூகித்தவைகள் சரியென்று பிற்காலத்து நெபுலார் பிரபஞ்சத் தோற்ற வியல் (Nebular Cosmogony) ஆராய்ச்சிகள் நிரூபித்துக் காட்டியுள்ளனவென்று நான் அப்போது குறிப்பிட் டேனே, அதுகூடத் தங்களுக்கு நினைவிருக்கலாம். 'நெபு லார்' என்ற சொல் ஓரையன்[1] என்னும் நட்சத்திர மண்ட லத்தைத் தங்களுக்கு ஞாபகப்படுத்தியிருக்கும். ஆகவே தாங்கள் ஓரையன் மண்டலத்திலுள்ள பெரிய நெபுலாவை நோக்கித் தங்கள் பார்வையைச் செலுத்தாமல் இருந் திருக்க முடியாது. அண்ணாந்து நெபுலாவைப் பார்ப்பீர் கள் என்று எதிர்பார்த்தேன். நான் எதிர்பார்த்தது பொய் யாகவில்லை. உண்மையாகவே தாங்கள் அண்ணாந்து வானத்

---

1. ஓரையன் (Orion) வட வானில் உச்ச ஒளியுள்ள நட்சத்திர மண்டலம். கிரேக்க புராணம் கூறும் ஓரையன் என்னும் வேடனே இது என்பர். ஓரையன் மண்டலம் செவ்வக வடிவானது. இதில் பிரகாசமான பல நட்சத்திரங்கள் உள்ளன. அவைகளில் ஒன்றாகிய திருவாதிரை (Betelgeuse) நட்சத்திரம் மஞ்சட் சிவப்பு நிறத்துடன் எளிதில் புலப்படும். நடுவிலுள்ள மூன்று நட்சத்திரங்களுள் நடுவி லுள்ளதைச் சுற்றி ஒரு பெரிய நெபுலா (ஒளிமுகில்) உள்ளது. இதன் தொலைவு 1,200 ஒளியாண்டுகள் என மதிப்பிடப்பட்டுள்ளது. இந்திர வான வியலில் இதைப் பிரஜாபதி என்று கூறுவர்.

திலுள்ள நட்சத்திரமண்டலத்தைப் பார்த்தீர். நான் எதிர் பார்த்தபடி நீங்கள் அண்ணாந்து பார்த்ததினால் உங்களுடைய எண்ணச் சங்கிலியை நான் சரியாகவே பின்பற்றி வருகிறேன் என்பது திண்ணமாயிற்று. ஆனால் எள்ளித் திருத்தும் இலக்கிய (Satirist) மூசிப் பத்திரிகையின் நேற்றைய இதழில் சாந்திலியைக் கடுமையாகத் தாக்கியுள்ளார் அல்லவா? அதில் அவர் செருப்புத் தைத்துக்கொண்டிருந்த சாதாரண ஆள் நடிகனாக மாறிய பின் தன் பெயரைச் சாந்திலி என்று மாற்றிக் கொண்டதை எவ்வளவு மோசமாகக் குத்திக் காட்டியுள்ளார். அவர் அதில் லத்தீன் வாக்கியம் ஒன்றை எடுத்துக் கையாண்டுள்ளார். அந்த வாக்கியத்தைப் பற்றி நாம் அடிக்கடி பேசியுள்ளோம். அதாவது, '**பண்டைய ஒலியை முதல் எழுத்துக் கெடுத்து விட்டது**' என்ற வாக்கியந்தான். முன்னர் ஊரையன் என்று எழுதப்பட்ட ஓரையனைப்பற்றிப் பேசும்போதுதான் இந்த வாக்கியத்தை நான் தங்களுக்குச் சொன்னது. அதை விளக்குவதற்காக நான் காரசாரமான விஷயங்களைக்கூடச் சொன்னேன், அல்லவா? ஆகவே அதைத் தாங்கள் மறந்திருக்க முடியாது என்று எனக்குத் தெரியும். எனவே ஓரையனைப்பற்றிய கருத்துக்களையும் சாந்திலி விஷயத்தையும் அவசியம் ஒன்று சேர்த்துப் பார்த்திருப்பீர். தங்கள் முகத்தில் தவழ்ந்த புன்சிரிப்பின் தோரணையிலிருந்து நீங்கள் அவ்விரு கருத்துக்களையும் ஒன்று சேர்த்து எண்ணினீர் என்பதைத் தெரிந்து கொண்டேன். பேராசையால் தன்னையே அழித்துக்கொண்ட ஏழைச் செருப்புத்தைப்பவனின் ஏமாற்றத்தை எண்ணி உள்ளூர மகிழ்ந்தீர். அந்த மகிழ்ச்சியிலே உடல் கூனியது. பின் நிமிர்ந்து நடந்தீர். அப்போது சாந்திலியின் குட்டையான உருவத்தைப்பற்றி எண்ணினீர் என்பதை அறிந்து கொண்டேன். இந்தக் கட்டத்தில்தான் நான் தங்கள் சிந்தனையைக் கலைத்தேன் 'அவன்—சாந்திலி சின்ன ஆள் என்பது உண்மையே

எனினும் அவன் கலையரங்கத்திற்கு நன்மை செய்யக்கூடும்'
என்று சொல்ல.''

இது நடந்த சில நாளைக்கெல்லாம் தினசரிப் பத்திரிகை ஒன்றின் மாலைப் பதிப்பில் பின்வரும் திடுக்கிடும் செய்தி வெளியாகியிருந்தது :

அதிசயக் கொலைகள்

'' இன்று காலையில் சுமார் மூன்று மணிக்கு செயின்ட் ரோச் வட்டாரத்தில் எதிர்பாராத குழப்பம். மார்க்கு தெருவில் உள்ள ஒரு வீட்டின் நான்காவது மாடியிலிருந்து ஐயோ! ஐயோ! என்ற கொடிய கூக்குரல் எழுந்தது. ஆட்டின் கழுத்தை வெட்டும்போது அது எப்படி ஓலமிடுமோ அப்படியிருந்தது அந்தக் கூக்குரல். அதைக் கேட்ட அந்த வட்டார மக்கள் தூக்கத்திலிருந்து திடுக்கிட்டு எழுந்தனர். சப்தம் வந்த வீட்டை நோக்கி ஓடினர். சப்தம் வந்த வீடு எஸ்பனுய் என்ற அம்மையாருடைய வீடு என்பதைக் கண்டனர். அந்த வீட்டில் வயதான அந்த அம்மாவும் அவருடைய மகள் காமீ என்பவரும் இருந்து வந்தனர். அவர்கள் இருவருமே அவ்வீட்டின் ஏகபோக வாசிகளாக இருந்து வந்தனர். காமீக்கு இன்னும் திருமணம் ஆகவில்லை. அவர்களுடைய வீட்டின் மாடியிலிருந்து வந்த அபல ஓசையால் தூக்கம் கலைந்தெழுந்து ஓடி வந்த அண்டை வீட்டுக்காரர்கள் தலைவாயில் கதவைத் திறந்து உள்ளே நுழைய முனைந்தனர். தலைவாயில் கதவின் உட்புறம் தாழிடப்பட்டிருந்ததால் அதைத் திறக்க முடியவில்லை. ஒருவர் ஓடிச் சென்று கடப்பாரை ஒன்றைக் கொண்டு வந்தார். கொண்டு வந்த கடப்பாரையால் தாழிடப்பட்டிருந்த கதவை நெம்பித் திறந்தனர். உடனே ஏழு, எட்டுப் பேர் உள்ளே நுழைந்தனர். இரு போலீஸ்காரர்களும் உள்ளே சென்றனர். அதற்குள் மாடி யறையிலிருந்து வந்த அபல ஓசை நின்று விட்டது. ஆனால் அவர்

கள் முதற்படிக்கட்டில் ஏறிச் செல்லும்போது மேலறையிலிருந்து இருவர் அல்லது இருவருக்கு மேற்பட்டவர்கள் காரசாரமாகப் பேசிக் கொள்ளும் குரல் கேட்டது. அவர்கள் இரண்டாவது படிக்கட்டை அடையும்போது அந்தக் குரலும் நின்று விட்டது. ஒரே நிசப்தம் நிலவியது. அவர்கள் ஆளுக்கொரு பக்கமாகப் பிரிந்து சென்று ஒவ்வொரு அறையாகத் தேடினர். கடைசியாக நான்காவது மாடியில் பின்னால் இருந்த பெரிய அறையை அடைந்தனர். அந்த அறையும் உட்புறமாகத் தாழிடப்பட்டிருந்தது. அதனால் சாதாரணமாகத் திறக்க முடியவில்லை. கதவை உடைத்தனர். கதவு உடைந்து கீழே விழுந்ததும் அறையின் உள்ளே நோக்கினர். அவர்கள் கண்ட காட்சியை என்னென்று சொல்லுவது. அங்குக் குழுமியிருந்த அனைவரும் திடுக்கிட்டுத் திகைத்தனர். அதே சமயத்தில் அச்சத்தால் குலையெல்லாம் நடுங்கினர்.

"அறை ஒரே அலங்கோலமாகக் காட்சியளித்தது சாமான்களெல்லாம் கன்னா பின்னாவென்று சிதறிக் கிடந்தன. தட்டுமுட்டுச் சாமான்களெல்லாம் உடைந்து கிடந்தன அவைகள் நாலாபுறமும் வீசி எறியப்பட்டிருந்தன. அறைக்குள் ஒரே ஒரு கட்டில் மட்டும் இருந்தது. அந்தக் கட்டிலின்மேல் இருந்த படுக்கை அகற்றப்பட்டுஅறையின் யின் மத்தியிலே வீசி எறியப்பட்டுக் கிடந்தது. ஒரு நாற்காலியின்மேல் கத்தியொன்று கிடந்தது. அதில் இரத்தம் தோய்ந்திருந்தது. அடுக்களையில் நீண்ட அடர்ந்த தலைமயிர்கள் கிடந்தன. அவைகள் தலையிலிருந்து வேரோடு பிடுங்கியெறியப்பட்டவையாகத் தோன்றின. அவைகளும் இரத்தத்தில் தோய்ந்திருந்தன. தரையில் நான்கு பொற்காசுகள் கிடந்தன. அவை ஒவ்வொன்றும் 20 ஃபிராங்கு மதிப்புள்ள நாணயமாகும். அவைகளன்றி கடுக்கன் ஒன்றும், மூன்று பெரிய வெள்ளிக் கரண்டிகளும், மூன்று சிறிய கரண்டிகளும், இரண்டு பைகளும் கிடந்தன. அப்பைகளில்

சுமார் 4000 பொற் காசுகள் இருந்தன. அறையின் ஒரு மூலையில் பீரோ ஒன்று நிறுத்தப்பட்டிருந்தது. அதன் டிராயர்கள் திறந்து கிடந்தன. அதிலிருந்த பொருள்கள் களவாடப்பட்டிருந்தன. எனினும் எல்லாப் பொருள்களும் களவு போகவில்லை. இன்னும் ஒரு சில பொருள்கள் டிராயர்களில் இருந்தன. அறையின் நடுவில் கிடந்த படுக்கையின் கீழ் ஒரு சிறிய இரும்புப் பெட்டி கிடந்தது. அது திறந்திருந்தது. சாவி பூட்டிலேயே இருந்தது. அதில் சில பழைய கடிதங்களும் வேறு உபயோகமற்ற கடிதாசிகளும் கிடந்தன. வேறு பொருள்கள் ஒன்றும் இல்லை.

"எஸ்பனுய் அங்கு இல்லை. எங்குத் தேடியும் அந்த அம்மாவைப்பற்றிய அறிகுறிகளைக்கூட காண முடியவில்லை; ஆனால் அடுப்பங்கரையில் அளவுக்கு மீறிய புகைக் கரி படிந்திருப்பது தெரிந்தது. அதன்பேரில் புகைப் போக்கிக்குள் தேடினர். அதனுள் கோரக் காட்சியைக் கண்டனர். வீட்டுக்காரக் கிழவியினுடைய மகளை அந்தப் புகை போக்கிக்குள் தலைகீழாகத் திணிக்கப்பட்டிருந்ததைக் கண்டனர். வெகு சிரமப்பட்டு சவத்தை இழுத்து வெளியே கொண்டு வந்தனர். சவம் சூடாக இருந்தது. சவத்தைப் பரிசீலனை செய்தனர். உடலில் பல காயங்கள் இருந்தன. அவைகள் உடலைச் சிறிய புகைப் போக்கிக்குள் திணித்த போது உடல் சுவரோடு சுவராய் உராய்ந்த காரணத்தால் ஏற்பட்டவைகள். முகத்தில் கீரல்கள் பல இருந்தன. குரல்வளை கன்றிப்போய்கிடந்தது. குரல்வளையில் நகக் கீரல்கள் ஆழமாகப் பதிந்திருந்தன. யாரோ அந்தப் பெண்ணின் கழுத்தைப் பிடித்து நெறித்துக் கொன்றிருக்கவேண்டும் என்று தோன்றியது. அப்படிக் கொல்லும்போது அந்தப் பெண்மணி கதறிய அபல ஓசையே அண்டை வீட்டுக்காரர்களின் தூக்கத்தைத் திடுமெனக் கலைத்தது.

"வீட்டின் மூலை முடுக்குகளை யெல்லாம் துருவித் துருவி ஆராய்ந்தனர். வேறெதுவும் கண்ணுக்குத் தென்

படவில்லை. கடைசியாக வீட்டின் சுற்றுப்புறத்தைச் சோதனை போட்டனர். வீட்டின் பின்புறத்தில் இருந்த தளம் போடப்பட்டிருந்த சிறிய முற்றத்தில் வீட்டுக்காரக் கிழவியின் சவம் கிடந்ததைக் கண்டனர். கழுத்து துண் டிக்கப்பட்டிருந்தது. பிணத்தைத் தூக்கிப் பார்த்தார்கள். தலை தனியாகப் பிரிந்து விழுந்து விட்டது. உடலும் தலை யும் உருத் தெரியாத அளவிற்குச் சின்னபின்னமாகச் சித்திரவதை செய்யப்பட்டிருந்தன.

"இந்தக் கோரக் கொலைகள் புரியாத புதிராக இருக் கின்றன. கொலைகளைச் செய்தவர் யாரென்பது இன்னும் தெரியவில்லை. எந்த விதமான ருசுக்களும் கிடைக்க வில்லை."

இந்த விஷயத்தைப் பற்றி அடுத்த நாள் பத்திரிகை யில் கீழ்க்கண்ட செய்திகள் வெளியாயிருந்தன.

"**மார்க்கியூத்தெருவில் நடந்த கோரக்கொலைகள்:** தீவிர மான புலன் விசாரணை நடைபெற்றது. பல பேர்களை விசாரித்தனர். என்ன விசாரித்தும் எத்தகைய துப்பும் தெரியவில்லை. புலன் விசாரணையின்போது சேகரித்த சாட்சியங்கள் பின்வருமாறு :

பாலின் தூபரோ என்ற வண்ணாத்தி, கொலையுண்ட இருவரையும் கடந்த மூன்று ஆண்டுகளாகத் தனக்கு நன்கு தெரியும் என்று சொன்னாள். அவள் மூன்று ஆண்டுகளாக அவர்கள் இருவருக்கும் துணி வெளுத்து வருகின்றாளாம். கிழவியும் மகளும் சண்டை சச்சரவில்லாமல் நேசமாகவே இருந்தனராம். அவர்கள் இருவரும் ஒருவருக்கொருவர் வெகு பிரியமாய் இருந்தனராம். அவர்களுக்கு நல்ல வரு மானம் இருந்தது. அவர்கள் தங்களுடைய வாழ்க்கை வழியைப் பற்றியோ வாழ்க்கை வசதிகளைப் பற்றியோ பேசவே மாட்டார்கள். கிழவி குறி சொல்லிப் பிழைத்து வந்தாள் என்று சொல்லுவர், வசதியோடு வாழ்வதற் கேற்ற சொத்து அந்தக் கிழவிக்கு இருந்தது. அந்த அம்மா

பணம் சேர்த்து வைத்திருப்பதாகப் பிரக்யாதி. வண்ணாத்தி அந்த வீட்டில் அழுக்கு எடுக்க வரும்போதாவது அல்லது வெளுத்த துணிகளைக் கொண்டு வந்து கொடுக்கும் போதாவது அந்த வீட்டில் அவர்கள் இருவரைத் தவிர வேறு எவரையும் கண்டதே கிடையாதாம். அவர்கள் வீட்டில் பணியாளே கிடையாதென்பது திட்டமாகத் தெரியுமாம். அந்தக் கட்டடத்தில் நான்காவது மாடியைத் தவிர பிற பகுதிகளில் நாற்காலி, மேஜை, கட்டில் முதலிய தட்டுமுட்டுச் சாமான்களே கிடையாதாம். நான்காவது மாடியில் மட்டும் தட்டுமுட்டுச் சாமான்கள் இருந்தனவாம்.

"பியரி மோரியா என்ற புகையிலை வியாபாரி கூறிய சாட்சியம் : 'நான் வீட்டுக்காரக் கிழவிக்குக் கடந்த நான்கு ஆண்டுகளாக புகையிலையும் மூக்குத்தூளும் விநியோகம் செய்து வருகின்றேன். நான் பிறந்ததே இந்த வட்டாரத்தில்தான். பிறந்தது முதல் இந்த வட்டாரத்திலேதான் இருந்து வருகின்றேன். இறந்துபோன அந்த அம்மாளும் அவருடைய மகளும் அவர்களுடைய சவங்கள் காணப்பட்ட வீட்டில் கடந்த ஆறு ஆண்டுகளுக்கு முன்பிருந்தே குடியிருந்து வந்தனர். அந்த வீட்டிற்கு அவர்கள் குடி வருவதற்கு முன் நகை வியாபாரி ஒருவர் அங்குக் குடியிருந்தார். அந்த நகை வியாபாரி மேல் மாடி அறைகளைப் பலபேருக்கு வாடகைக்கு (குடிக்கூலிக்கு) விட்டிருந்தார். அந்த வீடு இறந்துபோன கிழவிக்குச் சொந்தமானது. குடிக்கூலிக்காரர் வீட்டைப் பாழாக்குவதைக் கண்டு பொறுமல் குடிக்கூலிக்காரர்களை ஒருவர்பின் ஒருவராக வெளியேற்றிவிட்டுத் தாமே வந்து குடியிருக்கலாயினர். தாம் வந்து குடியேறின பின் வேறு யாருக்கும் எந்தப் பகுதியையும் விடவேயில்லை. கிழவிக்கு வயதாய் விட்டதேயல்லாமல் இயல்பில் குழந்தையே. கடந்த ஆறு ஆண்டுகளில் அந்த அம்மாவின் மகளை ஆறு, ஏழு தடவைதான் பார்த்திருப்பேன். கிழவியும் மகளும் எந்த விதமான பிடுங்கலும் தொல்லையும் இல்

லாமல் நிம்மதியாக வாழ்ந்து வந்தனர். கிழவி பெரிய பணக்காரி என்று எல்லோரும் சொல்லுவார்கள். கிழவி குறி சொல்லிப் பிழைத்தாள் என்று அண்டை அயலார்கள் பேசுவதைக் கேள்விப்பட்டதுண்டு. ஆனால் அதை நான் நம்பவில்லை. கிழவியையும் அவளுடைய மகளையும் தவிர வேறு யாரும் அந்த வீட்டில் நுழைந்ததை நான் பார்த்ததே கிடையாது. இரண்டொரு சமயம் கூலிக்காரனும், ஏழு எட்டுத் தடவை மருத்துவனும் அங்குச் சென்றதைப் பார்த்திருக்கின்றேன். மற்றபடி வேறு யாரும் அங்கு சென்றது கிடையாது

"மற்றும் பல அண்டை வீட்டுக்காரர்களும் இந்த விதமாகவே சாட்சியம் கூறினர். அந்த வீட்டுக்கு அடிக்கடி வந்தவர் ஒருவர்கூடக் கிடையாதென்றுதான் எல்லோரும் கூறுகின்றனர். கிழவிக்கும் மகளுக்கும் வாழ்க்கைத் தொடர்புகள் ஏதேனும் உண்டா, இல்லையா என்பது தெரியவில்லை. வீட்டின் முன்பக்கச் சன்னல்களின் கதவுகள் என்றுமே திறந்திருந்தது கிடையாது. பின்பக்கச் சன்னல் கதவுகளும் திறந்திருந்தது கிடையாது. நான்காம் மாடியின் பின்பக்கப் பெரிய அறைச் சன்னல் கதவுகள் மட்டுமே திறந்திருப்பதுண்டு. வீடு நல்ல வீடு—மிகப் பழைய வீடும் அல்ல.

"இசிட்டோர் மூசே என்ற போலீஸ்காரரின் சாட்சியம் பின்வருமாறு: 'நான் சுமார் காலை மூன்று மணிக்கு வீட்டிற்கு வரவழைக்கப்பட்டேன். அப்போது வாயில் கதவில் 20 அல்லது 30 பேர்கள் இருந்தனர். அவர்கள் உள்ளே நுழைவதற்கு முயற்சித்துக் கொண்டிருந்தனர். வலுக்கட்டாயத்தில் கதவைத் திறந்தனர். துப்பாக்கிக் கட்டையால் கதவை நெம்பித் திறந்தனர். கடப்பாரையாலன்று. இரட்டைக் கதவுகள் பூட்டியிருந்தமையால் கதவைத் திறப்பதற்கு அதிக சிரமம் ஏற்படவில்லை. மேல் பக்கத்திலும் தாழிடப்படவில்லை; அடியிலும் தாழிடப்

படவில்லை. ஆகவே துப்பாக்கிக் கட்டையால் கதவைத் தள்ளினமாத்திரத்தில் கதவு திறந்து விட்டது. கதவு திறந்துவிட்டது. கதவு திறக்கப்படும் வரையில் கூக்குரல் கேட்டது. பின்னர் திடீரென்று ஓசை நின்று விட்டது. அது கொலை செய்யப்படுவர் வீறிட்டு அலறுவது போன்றிருந்தது. நான்தான் எல்லோருக்கும் முன்னால் சென்று படியேறினேன். அப்போது இருவருடைய பேச்சுக்குரல் கேட்டது. ஒரு குரல் வெடுவெடுப்பாகவும் கடுமையாகவும் இருந்தது. மற்றொன்று கீச்சுக் குரலாக இருந்தது; புதுமையாகவும் இருந்தது. குரலிலிருந்து முதலாவது ஆள் பிரெஞ்சுக்காரன் என்று தோன்றியது; அவன் பேச்சில் சைத்தான் (diable) போன்ற இரண்டொரு சொற்கள் தெளிவாகக் காதில் விழுந்தன. இரண்டாவது குரல் வெளி நாட்டுக்காரருடைய குரலாகத் தோன்றியது. எனினும் அது ஆணின் குரலா? பெண்ணின் குரலா என்பது திட்டமாகத் தெரியவில்லை. அது ஸ்பானிய மொழியாகப் பட்டது. ஆனால் அந்த இரண்டாவது ஆள் என்ன பேசினான் என்பதை அறிந்து கொள்ள முடியவில்லை.

(அறையின் நிலையைப் பற்றியும் சவங்களின் நிலையைப் பற்றியும் நேற்றைய இதழில் வெளியான விவரங்களையே போலீஸ்காரரும் தம் சாட்சியத்தில் கூறினர்.)

“ஹென்ரி தூவல் என்ற அண்டை வீட்டுக்காரர்-தட்டார்-சொல்லுகிறார்: ‘அண்டை வீட்டில் திடுமென எழுந்த கூக்குரலைக் கேட்டுத் திடுக்கிட்டெழுந்து ஓடிவந்து அந்த வீட்டுக்குள் நுழைந்தவர்களில் நானும் ஒருவன். நாங்கள் பலாத்காரமாகத் தலைவாயில் கதவைத் திறந்து உள்ளே நுழைந்ததும், மேலும் மேலும் கூட்டம் வருவதைத் தடுக்கக் கதவை மூடிவிட்டோம். அந்த நேரத்திலும் பெரும் கூட்டம் கூடிவிட்டது! கூட்டம் பெரிதாகிக் கொண்டே வந்தது. நாங்கள் படியேறும்போது காதில் விழுந்த கீச்சுக்குரல் இத்தாலியரின் குரல் என்று கருது

கிறேன். எனினும் அது பிரெஞ்சுக்காரரின் குரல் அன்று என்பது திண்ணம். அது ஆண் குரல் என்று நிச்சயமாகச் சொல்ல முடியாது. அது பெண் குரலாக இருக்கக்கூடும். எனக்கு இத்தாலிய மொழி தெரியாது. வார்த்தைகள் தெளிவாகக் கேட்கவில்லை. ஆனால் குரலின் இனிமையிலிருந்து இத்தாலியரின் குரல் என்பது தெளிவாகிறது. கொலையுண்ட கிழவியும் மகளும் எனக்குத் தெரிந்தவர்கள். அவர்கள் இருவரோடும் அடிக்கடி உரையாடி இருக்கின்றேன். ஆகவே அவர்களுடைய குரல் எனக்கு நன்றாகப் பழக்கப்பட்டது. நாங்கள் மாடிப்படியில் ஏறும்போது கேட்ட கீச்சுக்குரல் அவர்கள் இருவருடைய குரலோசையுமல்ல.'

"ஓடனீமர் என்ற ஓட்டல்காரர் தாமாகவே முன் வந்து சாட்சியம் கூறினார். அவருக்குப் பிரெஞ்சு மொழி தெரியாது. ஆகவே அவர் ஒரு மொழி பெயர்ப்பாளர் மூலம் விசாரிக்கப்பட்டார். அவர் ஆம்ஸ்டர்டாம்காரராம். கூக்குரல் எழுந்தபோது அந்தத் தெருவழியாகப் போய்க் கொண்டிருந்தாராம். கூக்குரல் வெகுநேரம்-சுமார் 10 நிமிடங்கள்-வரையில் கேட்டதாம். கூக்குரலோசை பயங்கரமாகவும் கொடுமையாகவும் இருந்ததாம். கட்டடத்தில் நுழைந்தவர்களில் இவரும் ஒருவராம். இவருடைய சாட்சிக் கூற்றும் முன்னர்க் கூறியவர்களின் சாட்சிக் கூற்றுக்களை ஒத்திருந்தது. ஒரே ஒரு விஷயத்தில் மட்டும் வேறுபாடு இருந்தது. சப்தம் கேட்டு ஓடி வந்தவர்கள் கட்டடத்தில் நுழைந்து மாடிப்படியில் ஏறும்போது அவர்கள் காதில் விழுந்த கீச்சுக்குரல் ஒரு பிரெஞ்சுக்காரருடைய குரல் என்கின்றார் இச் சாட்சிக்காரர். பேச்சின் சொற்கள் தெளிவாகத் தெரியவில்லையாம். குரல் உரத்த குரலாக இருந்தது. பேச்சில் அவசரமும் அச்சமும் கோபமும் தொனித்தன. குரல் கடுமையாகவும் இருந்தது. அதைக் கீச்சுக் குரல் என்று சொல்லுவது பொருந்தாதாம். கடுமையான குரலோசையில் 'சைத்தான்' என்ற சொல் திரும்பத்

திரும்பக் கேட்டனவாம். அட கடவுளே (Mon Dicu) என்ற சொல் ஒரே ஒரு முறை மட்டும் காதில் விழுந்ததாம்.

டெலோரைன் என்ற தெருவிலுள்ள மிக்ஞடு பாங்கியின் சொந்தக்காரரான ஜூல்ஸ் மிக்ஞடு என்பவர் கூறிய சாட்சியம் பின்வருமாறு :

"எஸ்பஞயுக்குக் கொஞ்சம் சொத்து உண்டு. எட்டு வருடங்களுக்கு முன்ஞல் என் பாங்கியில் கணக்கு வைக்கத் தொடங்கினுர். அடிக்கடி சிறு சிறு தொகைகளை டிபாசிட் செய்வார். கணக்கைத் தணிக்கை செய்து பார்த்ததே கிடையாது. சாவதற்கு மூன்று நாட்களுக்கு முன்புதான் தம் கணக்கிலிருந்து 4000 பிராங்குகளைத் தாமாகவே நேரில் வந்து வாங்கிச் சென்ருர். அவ்வளவும் பொற்காசுகள். பணத்தைக் கொடுத்தனுப்பும்போது அவரோடுகூட துணைக்கு என் கணக்கரையும் அனுப்பி வைத்தேன்.

மிக்ஞடு பாங்கியின் கணக்கர் அடோல்ப் லாபோன் என்பவர் கூறுவதாவது :

எஸ்பஞய் என்பவர் பாங்கிக்குப் பணம் வாங்க வந்திருந்த அன்று சுமார் பகல் பனிரண்டு மணிக்கு அவரோடு அவர் வீட்டு வரையில் சென்றுவிட்டு வந்தேன். 4000 பிராங்குகளை இரண்டு பைகளில் போட்டு எடுத்துச் சென்றேன். வீட்டை அடைந்தோம்; கதவைத் தட்டினேம். அவருடைய மகள் உள்ளிருந்து வந்து கதவைத் திறந்தார்; அவர் என்னுடைய கையிலிருந்த பைகளில் ஒன்றை வாங்கிக் கொண்டார். மற்ருென்றைக் கிழவி வாங்கிக் கொண்டார். நான் தலை வணங்கி விடைபெற்றுத் திரும்பி வந்துவிட்டேன். அந்தச் சமயத்தில் தெருவில் யாரும் தென்படவில்லை. அது கிளைத் தெருவு. ஆகவே அதில் ஜனநடமாட்டம் இல்லை.'

"வில்லியம் பேர்டு என்ற தையல்காரர் கூறிய சாட்சியம் வருமாறு :

வீட்டில் நுழைந்தவர்களில் நானும் ஒருவன். நான்

ஆங்கிலேயன். கடந்த இரண்டு ஆண்டுகளாகப் பாரிஸில் இருந்து வருகின்றேன். படிக்கட்டை ஏறியவர்கள் வரிசையில் முன்னால் சென்றவர்களில் நானும் ஒருவன். இருவகைக் குரல்கள் எனக்கும் கேட்டன. கடுமையான குரல் பிரெஞ்சுக்காரரின் குரல். பல சொற்கள் தெளிவாகக் காதில் விழுந்தன. எனினும் எல்லாச் சொற்களும் இப்போது நினைவில்லை. சைத்தான், அட கடவுளே (Mon Dicu) என்ற சொற்கள் மட்டும் நினைவிருக்கின்றன. அந்தச் சமயத்தில் பலர் ஒருவரோடொருவர் சண்டை போடுவது போன்ற சப்தம் கேட்டது. கீச்சுக்குரல் உரத்த குரலாக-கடுமையான குரலினும் உரத்த குரலாக-இருந்தது. அது ஒரு ஆங்கிலேயனுடைய குரலாக இருக்க முடியாது என்பது திண்ணம். ஜெர்மானிய மொழியைப் போன்றிருந்தது. ஒரு பெண் குரலாக இருக்கலாம். எனக்கு ஜெர்மானிய மொழி தெரியாது.'

"மேற்கூறிய சாட்சிகளில் நால்வரை மீண்டும் அழைத்து விசாரித்தபோது அவர்கள் கூறியதாவது :

'நாங்கள் எல்லோரும் நான்காம் மாடியை அடைந்தபோது, காமியின் சவம் கண்டெடுக்கப்பட்ட அறையானது உட்புறம் தாழிடப்பட்டிருந்ததைக் கண்டோம். அப்போது அங்கே எந்தவிதமான ஓசையும் கேட்கவில்லை. நிசப்தம் நிலவியது. கதவைப் பலாத்காரமாகத் திறந்து உள்ளே நுழைந்தோம். உள்ளே ஒருவரையும் காணோம். முன் அறை, பின் அறை ஆகிய இரண்டு அறைகளுடைய சன்னல்களும் இறுக மூடப்பட்டிருந்தன. இரண்டு அறைகளுக்கும் இடையில் இருந்த கதவும் மூடப்பட்டிருந்தது. ஆனால் அது தாழிடப்படவில்லை. முன்னறையிலிருந்து படிக்கட்டுக்குச் செல்லும் வழியில் உள்ள கதவு உட்புறம் தாழிடப்பட்டிருந்தது. நான்காவது மாடியில் முன்புறம் வழியின் தலைப்பில் இருந்த சிறிய அறை திறக்கப்பட்டிருந்தது. இந்த அறையில் பழைய படுக்கைகளும் பெட்டி

களும் பிறவும் போட்டு வைக்கப்பட்டிருந்தன. அவைகளை யெல்லாம் கவனமாக அப்புறப்படுத்திச் சோதனை போட்டோம். வீட்டின் எல்லாப் பகுதிகளையும் சோதனை போட்டோம். ஒரு அங்குல இடங்கூட எங்கள் சோதனைக்குத் தப்பியிருக்க முடியாது. புகைப் போக்கிகளுக்குள் மேலும் கீழுமாகத் துடப்பங்களை விட்டுச் சோதனை போட்டோம். கட்டடம் நான்கடுக்கு மாடி. அதில் மச்சறையும் இருந்தது. கூரையில் கண்ணிக் கதவு (trap-door) ஒன்று உறுதியாக அறையப்பட்டிருந்தது. வெகு ஆண்டுகளாக அது திறக்கப்படவே யில்லை என்று தோன்றியது.''

''கூக்குரலைக் கேட்டு ஓடிவந்த அண்டை அயலார்கள் மாடிப் படியில் ஏறும்போது மாடியிலிருந்து பேசும் குரல் கேட்டதற்கும் மாடிக் கதவை வலுக்கட்டாயத்தில் திறந்ததற்கும் இடையேயுள்ள நேரத்தைப்பற்றி சாட்சிகளிடையே கருத்து வேறுபாடு காணப்படுகிறது. சிலர் அது மூன்று நிமிட நேரமாக இருக்கலாம் என்றும் வேறு சிலர் அது ஐந்து நிமிட நேரமாக இருக்கலாம் என்றும் கூறினர். கதவைத் திறக்க வெகு சிரமப்பட்டார்களாம்.

''ஆல்பன்ஜோ கார்சியோ என்பவர் சொல்லுகிறார் :

'நான் இதே தெருவில்தான் வசிக்கின்றேன். என்னுடைய சொந்த நாடு ஸ்பெயின். வீட்டில் நுழைந்தவர்களில் நானும் ஒருவன். ஆனால் நான் மேலே ஏறிச் செல்லவில்லை. நான் பயந்துபோய் விட்டேன். தயங்குவதினால் ஏற்படும் பலாபலன்களை அறிவேன். எனினும் பயம் என்னைத் தடுத்து நிறுத்தியது. மேலே செல்லவில்லையென்றாலும் பேச்சுக் குரல் எனக்கும் கேட்டது. கடுமையான குரல் பிரெஞ்சுக்காரனுடைய குரல். ஆனால் பேச்சு விளங்கவில்லை. ' கீச்சுக் குரல் ஆங்கிலேயனுடைய குரல். எனக்கு ஆங்கிலம் தெரியாது. எனினும் குரலினுடைய தன்மையிலிருந்து அவ்வாறு முடிவு செய்தேன்.'

"ஆல்பர்டு மாண்டனி என்ற ரொட்டிக்கடைக்காரர் சொல்லுகிறார் :

'மாடிப்படியில் ஏறிச் சென்றவர்களில் நானும் ஒருவன். அந்தக் குரல்கள் எனக்கும் கேட்டன. கடுமையான குரல் பிரெஞ்சுக்காரனுடைய குரல். பல வார்த்தைகள் காதில் விழுந்தன. அந்த ஆள் குறுக்கிட்டுக் குறுக்கிட்டுப் பேசினார். இரண்டாவது ஆள் பேசியது என்ன என்று தெரியவில்லை. அந்த ஆள் அவசர அவசரமாகப் பேசினான். குரலை உயர்த்தியும் தாழ்த்தியும் பேசினான். அவன் ரஷியனாக இருக்க வேண்டுமென்று நான் நினைக்கின்றேன். நான் இத்தாலியன்; ரஷியனோடு நான் என்றுமே பேசியது கிடையாது.'

"பல சாட்சிகள் மீண்டும் வரவழைக்கப்பட்டு விசாரிக்கப்பட்டனர். நான்காம் மாடி அறைகளிலிருந்து புகை போக்கிகள் யாவும் ஆள் உள்ளே செல்ல முடியாத அளவிற்குக் குறுகியவை. புகைப் போக்கிகளைச் சோதனைப் போடப் பயன்படுத்திய விளக்குமாறுகள் வழக்கமாக அக்காரியத்திற்குப் பயன்படுத்தப்படும் உருண்டையான விளக்குமாறுகள்தாளும். ஒவ்வொரு புகைப்போக்கிக் குழாயையும் விளக்குமாற்றை மேலும் கீழுமாகச் செலுத்திச் சோதனை செய்தார்களாம். அவர்கள் மாடிப் படியில் ஏறிச் செல்லும்போது மேலிருந்தவர்கள் கீழே இறங்கிச் செல்லும்படியான பின் வழி எதுவுமே கிடையாதாம். காமியின் உடல் புகைப் போக்கிக்குள் ஆப்பு வைத்து அடித்தாற்போல் திணிக்கப்பட்டிருந்ததால் நான்கைந்துபேர் தங்கள் வலிமைகளையெல்லாம் ஒன்று கூட்டி அதை இழுத்த தின்பேரில்தான் அதை வெளியே எடுக்க முடிந்ததாம்.

"பால்டுமோஸ் என்ற மருத்துவர் கூறிய சாட்சியம் பின் வருமாறு :

'சவங்களைப் பார்வையிட வருமாறு என்னை விடியற் காலையில் வந்து அழைத்தனர். காமியின் உடல் காணப்

பட்ட அறைக்குள் இருந்த கட்டிலின்மேல் இரு பிணங்கள் கிடத்தப்பட்டிருந்தன. காமியின் உடலில் கீரல்களும் சார் காயங்களும் இருந்தன. புகைப் போக்கிக்குள் திணிக்கப் பட்டதே இதற்குப் போதுமான காரணமாகும். கழுத்து நெறிக்கப்பட்டிருந்தது. தாடையின் அடியில் ஆழமான பல கீரல்களும் விரல்களின் பதிவும் காணப்பட்டன. முகத்தில் இரத்தம் தோய்ந்து இருந்தது. கண்விழிகள் பிதுங்கிக் கிடந்தன. நாக்கு வெளியே நீண்டு கிடந்தது. தொப்புள் கந்திக்கிடந்தது. அதன்மேல் முழங்காலை வைத்து அமுத்தியதினுல் அது அவ்வாறு கந்திப்போயிருக்க வேண்டும். ஒருவரோ அல்லது பலரோ காமியின் கழுத்தைப் பிடித்து நசுக்கிக் காமியைக் கொன்றிருக்க வேண்டும். கிழவியின் உடல் சின்னுபின்னமாக்கப்பட்டுக் கிடந்தது. வலது காலினுடைய எலும்புகளும் வலதுகை எலும்புகளும் நொறுங்கிக்கிடந்தன. கீழ்க்கால் உள்ளெலும்பு சிராய் சிராயாகப் பிளந்துகிடந்தது. இடது பக்க விலா எலும்புகளும் அவ்வாறே இருந்தன. உடல் முழுதும் கீரல்களும் இரத்தக் கறைகளும் படிந்திருந்தன. எதைக் கொண்டு இவ்வுடலை இந்த விதமாகச் சின்னு பின்னமாகச் சித்திரவதை செய்திருப்பார்கள் என்று திட்டமாகச் சொல்ல முடியாது. மரக்கட்டையாலோ, இரும்புத் துண்டாலோ அல்லது நாற்காலியாலோ கிழவியைத் தாக்கி எலும்புகளை நொறுக்கியிருப்பார்கள்போல் தோன்றுகிறது. இந்தக் காரியத்தை எந்தப் பெண்ணுலும் செய்திருக்க முடியாது. ஆண்பிள்ளைதான் அதுவும் வலிமையுள்ள திடமான ஆண் பிள்ளைதான் இதைச் செய்திருக்கவேண்டும். நான் வந்து பார்க்கும்போது கிழவியின் சவம் தலைவேறு முண்டம் வேருகப் பிரிந்து கிடந்தது. தலைநொறுங்கிக் கிடந்தது. கழுத்து கத்தியால் வெட்டப்பட்டதாகக் காணப்பட்டது.

"அலெக்சாந்தர் எட்டினு என்ற மற்ருெரு மருத்துவரும் அழைக்கப்பட்டார், பிணங்களைப் பரிசோதிக்க.

இவருடைய கருத்துக்களும் டுமோஸினுடைய கருத்துக்களை ஒத்திருந்தன.

"மற்றும் பலரும் விசாரிக்கப்பட்டனர். வேறு முக்கியமான தகவல் ஒன்றும் கிடைக்கவில்லை. இத்தகைய கொலை—மர்மக் கொலை—துப்புத் துறவு கிடைக்காத கொலை—இதற்கு முன்னால் பாரிஸ்மா நகரில் நடந்ததே கிடையாது. கொலைபோன்ற விஷயங்களில் சூராக இருக்கும் போலீஸ்காரர்கள் இக்கொலை பற்றிய துப்புக்களைக் கண்டுபிடிப்பதில் முற்றிலும் தவறி விட்டனர். எந்த விதமான ருசுவும் கிடைக்கவில்லை"

மாலைப் பதிப்பில் செயின்ட் ரோச் வட்டாரத்தில் தொடர்ந்து பரபரப்பு நீடித்ததென்றும், கொலையுண்ட எஸ்பனுய் வீட்டை மறுபடியும் சோதனை செய்தார்கள் என்றும், புதிய சாட்சிகள் விசாரிக்கப்பட்டனர் என்றும், ஆனால் எந்தவிதமான பயனும் ஏற்படவில்லையென்றும் செய்திகள் வெளியாயிருந்தன. எனினும் அடோலப் லா போன் என்பவர் கைது செய்யப்பட்டு ரிமாண்டில் வைக்கப்பட்டிருப்பதாகப் பிற்சேர்க்கைச் செய்தி ஒன்று கூறியது.

டூப்பின் இந்த மர்மக் கொலை வழக்கைப் பற்றி ஏதும் வெளிப்படையாகச் சொல்லவில்லை யென்றாலும் அவர் நடத்தையிலிருந்து வழக்கின் போக்கைக் கவனித்து வருவதில் அவர் அதிக சிரத்தை காட்டினர் என்பது புலனாயிற்று. அடோலப் லா போன் சிறையில் இடப்பட்டார் என்ற செய்தி வெளியான பின்னர்தான் கொலையைப்பற்றி என் அபிப்பிராயத்தைத் தெரிவிக்குமாறு கேட்டார்.

இக்கொலை புரியாத புதிர்—விளங்காத மர்மம்—என்று எல்லோரும் சொல்லுவதையேதான் நானும் சொல்ல முடியும். வேறு என்ன இருக்கின்றது. அந்தக் கொலையைப் பற்றிய உண்மையைக் கண்டுபிடிக்கும் வகை ஏதும் இருப்பதாக எனக்குத் தெரியவில்லை.

"போலீஸாரின் விசாரணையால் உண்மை ஏதும் புல

னுகமல் போன தினலேயே கொலையின் மர்மத்தைக் கண்டறியும் மார்க்கமே கிடையாது என்று முடிவு செய்யக் கூடாது. பாரிஸ்மா நகரப் போலீஸ்காரர்கள் திறமைசாலிகள் என்று புகழ்ந்து போற்றப்படுகின்றனர். ஆனல் அவர்களிடத்தில் சூழ்ச்சி இருக்கின்றதே யல்லாமல் வேறொன்றும் இல்லை. அவர்கள் தடபுடலான ஏற்பாடு செய்வதில் வல்லவர்கள். ஆனல் அவர்கள் செய்யும் ஏற்பாடுகள் பெரும்பாலும் சந்தர்ப்பத்திற்கு ஏற்றவைகளாக இருக்கமாட்டா. அந்த ஏற்பாடுகளின் பலா பலன்கள் பெரும்பாலும் வியக்கத்தக்கவைகளாக இருக்கும். ஆனல் அத்தகைய பயன்கள் சாதாரண அறிவாலும் செயலாலுமே ஏற்படுகின்றன. இவைகள் இல்லாதபோது அவர்களுடைய திட்டங்கள் வெற்றி யளிப்பதில்லை. உதாரணமாக விடோக் என்பவர் யூகிப்பதில் வல்லவர்; விடா முயற்சியும் உடையவர். ஆனல் அறிவைச் செலுத்தி ஆராயமாட்டார். அதனல் அவர் செய்யும் தீவிரமான பரிசீலனைகள் அனைத்தும் வீணகின்றன. ஒரு பொருளைக் கண்களுக்கு வெகு அருகாமையில் வைத்துப் பார்த்தால் அது கண்களுக்குப் புலனகுமா? ஆகாது. அதுபோலிருக்கின்றன அவருடைய பரிசிலனைகள். அவருக்கு ஓரிரண்டு குறிப்புக்கள் தெளிவாகத் தெரியலாம். ஆனல் விஷயம் முழுமையும் தெரியாது. உண்மை எப்போதுமே ஆழத்திலேயே இருக்காது, உண்மையில் முக்கியமான அறிவு மேலெழுந்தவாருகவே இருக்கும். மலையின் உச்சி மேலுள்ளதை மடுவின் அடியில் தேடினல் காணப்படுமா? இத்தகைய தவறு விண்ணுலகக் கோள்களை உற்று நோக்கும்போது ஏற்படுவதைக் காணலாம். ஒரு நட்சத்திரத்தைக் கடைக் கண்ணல் பார்க்கும்போது ஒளியின் நிழல் கண் திரையின் வெளிப் பகுதியில் விழும். மங்கிய ஒளிகூட உட்பகுதியில் விழுவதைவிட வெளிப்பகுதியில் தெளிவாகப் பதியும், ஆகவே கடைக் கண் பார்வைக்கு நட்சத்திரம் தெற்றெனப்

புலனுகும். அதனுடைய ஒளியும் பிரகாசமாகத் தோன்றும். கண் பார்வையை நேராகத் திருப்பத் திருப்ப நட்சத்திர ஒளியின் பிரகாசம் மங்கிக் கொண்டே வரும். நேராக நோக்கும்போது மிக அதிகமான ஒளிக்கதிர்கள் வந்து பாய்கின்றன, ஆனுல் கடைக்கண் பார்வையில்தான் உருவம் தெளிவாகத் தெரியும் ஆற்றல் அதிகம். அதுபோல் வெட்ட வெளிச்சமான விஷயத்தில்தான் நாம் திகைக்கின்ருேம்; சிந்தனையை இழந்து விடுகின்ருேம். நன்கு தெரியும் வெள்ளி மீன்கூட நேர் முகமாக மிகவும் உற்றுக் கவனித்தால்—வைத்த கண் மாருமல் பார்த்துக்கொண்டே இருந்தால்—இருந்த இடம் தெரியாமல் மறைந்து விடும். ஏனெனில் அது நம் பார்வையோடு இரண்டறக் கலந்து விடுகிறது.'' என்ருர் டூப்பின்.

'' இக்கோரக் கொலையைப் பொருத்த வரையில் நாமே நேரில் விசாரித்துப் பார்க்காமல் எந்த விதமான முடிவுக்கும் வருவது சரியன்று. விசாரணை நமக்கு ஒரு பொழுது போக்காகவும் இருக்கும். லே போன் ஒரு சமயம் எனக்கு ஓர் உதவி செய்தவர். அதை நான் மறந்துவிட முடியுமா? நாம் கொலை நடந்த வீட்டிற்குச் சென்று நேரில் பார்த்து வருவோம். போலீஸ் தலைவர் எனக்குத் தெரிந்தவர். ஆகவே வீட்டை நேரில் சென்று பார்ப்பதற்கு நமக்கு உத்தரவு கிடைத்து விடும்.'' என்ருர் டூப்பின் தொடர்ந்து.

டூப்பின் போலீஸ் தலைவரைக் கண்டு உத்தரவு பெற்று விட்டார். உடனே இருவரும் மார்க்கியூத் தெருவுக்குப் புறப்பட்டோம். செயின்ட் ரோச் தெருவுக்கும் ரிச்லீத் தெருவுக்கும் இடையேயுள்ள பொல்லாத தெருக்களில் மார்க்கியூத் தெருவும் ஒன்று. நாங்கள் அங்கு சேர்ந்த போது பிற்பகல் வெகு நேரமாகிவிட்டது. நாங்கள் இருந்த இடத்திற்கும் மார்க்கியூத் தெருவுக்கும் வெகு தொலைவு. அதனுல்தான் அங்கு செல்வதற்கு அவ்வளவு நேரமாயிற்று. நாங்கள் சென்றபோதுகூட பல பேர் அந்த

வீட்டின் எதிர்புறத்தில் நின்றுகொண்டு மூடிய சன்னல் களையே உற்றுக் கவனித்துக் கொண்டிருந்தனர். அதனால் அந்த வீட்டைக் கண்டு பிடிப்பது எளிதாகப் போயிற்று. சாதாரண வீடுதான். தலைவாயில் இருந்தது. தலைவாயிலின் ஒரு பக்கத்தில் காவற்கூடு இருந்தது. உள்ளே நுழை வதற்கு முன்னால் தெருவில் கொஞ்ச தூரம் நடந்துசென்று சிறு சந்து வழியாகத் திரும்பி, அதன் பின்னர் மறுபடியும் திரும்பி, வீட்டின் பின்புறத்தை அடைந்தோம். அதற்குள் டூப்பின் வீட்டின் சுற்றுப்புறத்தை யெல்லாம் நன்கு கவ னித்து விட்டார் தம் நுண்ணோக்கால். ஏன் அப்படிக் கவ னிக்க வேண்டும் என்று எனக்கு ஒன்றும் புலனாகவில்லை மீண்டும் அதே வழியாகத் திரும்பி வீட்டின் தலைவாயிலை அடைந்தோம். உத்தரவைக் காட்டி உள்ளே நுழைந் தோம். மாடிக்குச் சென்று சவங்கள் வைக்கப்பட்டிருந்த அறைக்குள் நுழைந்தோம். செய்தித்தாளில் கண்டபடி சாமான்கள் எல்லாம் கன்னாபின்னாவென்று சிதறிக் கிடந் தன. சவங்களைத் தவிர பிற பொருள்களை யெல்லாம் நன்கு பரிசீலனை செய்தார் டூப்பின். மற்ற அறைகளுக்கும் சென்றோம்; வெளி முற்றத்திற்கும் சென்றோம். நாங்கள் சென்ற இடத்திற்கெல்லாம் ஆயுதம் தாங்கிய போலீசார் ஒருவர் எங்களைப் பின்தொடர்ந்து வந்துகொண்டே இருந் தார். எல்லாவற்றையும் பார்த்து முடிக்கும்போது இருட்டி விட்டது. பின் எங்கள் இருப்பிடத்திற்குத் திரும்பினோம். வழியில் டூப்பின் செய்தித்தாள் அலுவலகத்தில் சற்று நேரம் நின்றார்.

என் நண்பர் வேடிக்கையான பேர்வழி என்று ஏற் கெனவே சொல்லியுள்ளேனே! அடுத்த நாள் நடுப்பகல் வரையில் கொலையைப்பற்றிப் பேசுவதில்லை என்று சொன் னவர் திடீரென்று அந்தப் பேச்சையே தொடங்கினார். கொலை நடந்த இடத்தில் புதுமையான தேதேனும் கண் ணுக்குத் தென்பட்டதா என்று வினவினார். 'புதுமை'

என்ற சொல்லை அழுத்தம் திருத்தமாகச் சொன்னதைக் கேட்டு என் உடலெல்லாம் நடுங்கியது. ஏன் என்று தெரியவில்லை. 'புதுமையொன்றும் காணப்படவில்லையே. செய்தித்தாளில் போட்டிருந்ததைவிட அதிகமாக ஒன்றும் அங்குக் காணப்படவில்லையே' என்று நான் பதிலளித்தேன்.

"செய்தித்தாள் கொலையின் அசாதாரணக் கொடுமையைப் புலப்படுத்தத் தவறிவிட்டதென்றே சொல்லவேண்டும். செய்தித்தாளின் சாரமற்ற செய்தி ஒருபுறம் இருக்கட்டும். எந்தக் காரணத்தைக் கொண்டு கொலையின் மர்மம் எளிதில் விடுவிக்கக் கூடியதோ அதே காரணத்தால் அம்மர்மம் விடுவிக்க முடியாததென்று கருதுகின்றனர். சம்பவத்தின் வெளிப்படையான இயல்பே நான் குறிப்பிட்ட காரணம். கிழவியையும் அவளுடைய மகளையும் சித்திரவதை செய்யும்படியான காரணம் ஏதும் இல்லாமல் இருப்பது போலீசாருக்குப் புரியாத புதிராக இருக்கிறது. மற்றும் அண்டை அயலார் வீட்டின் படிக்கட்டில் ஏறிச் செல்லும்போது மாடியிலிருந்து பேச்சரவம் கேட்டதென்று சொன்னார்கள் அல்லவா? ஆனால் அவர்கள் மேலே சென்று பார்த்தபோது கொலையுண்ட காமியைத் தவிர வேறு யாரும் அங்குக் காணப்படவில்லையே. ஆகவே இதுவும் போலீசாரைத் திகைக்க வைக்கின்றது. கொலையாளிகள் மற்றவர்கள் ஓடிவருவதைக் கண்டு அவர்களுக்குத் தெரியாமல் பின்புறமாக இறங்கித் தப்பி ஓடியிருக்கக் கூடும் என்று சொல்லலாம் என்றால், அதுவும் சாத்தியமில்லை. அப்படி இறங்கிச் செல்லும்படியான வழியேதும் கிடையாது. அறையின் அலங்கோல நிலை, காமியின் சவம் புகைப் போக்கியில் தலைகீழாகத் திணிக்கப்பட்டிருந்தது, கிழவியின் உடல் சின்னபின்னமாக்கப்பட்டிருந்தது ஆகியவையும் பிறவும் போலீசாரைத் திகைக்க வைக்கப் போதுமே. அவர்களும் எல்லோரும் செய்யக்கூடிய பொது

வான தவறையே செய்துள்ளனர். அதாவது எளிதில் புரிந்துகொள்ள முடியாத நிகழ்ச்சியை அசாதாரண நிகழ்ச்சி என்று தவறுக எண்ணி விட்டனர். நாம் இப் போது செய்துகொண்டிருப்பது போன்ற பரிசீலனைகளில் 'என்ன நேர்ந்தது' என்பதைவிட 'இதற்கு முன்னுல் நட வாதது இப்போது என்ன நடந்தது' என்றுதான் கேட்க வேண்டும். இந்த மர்மக் கொலை போலீசாருக்கு எவ்வள வுக்கெவ்வளவு புரிய முடியாத புதிராக இருந்து வரு கிறதோ அவ்வளவுக்கவ்வளவு சுலபமாக நான் அதற்கு விடை கண்டுபிடிப்பேன்."

இவ்வாறு சொன்ன டூப்பினைத் திகைப்போடு உற்று நோக்கினேன். அவர் பேச்சைக்கேட்டு மலைத்தேன்; வியந் தேன்.

டூப்பின் தொடர்ந்து பேசலானுர்:

"நான் ஒருவரின் வருகையை எதிர்நோக்கிக் கொண்டி ருக்கிறேன்; அவர் இந்தக் கீழ்த்தரமான செயல்களைச் செய்தவர் என்று சொல்ல முடியாதென்றுலும், அவர் இச் செயல்களுக்கு ஓரளவிலாவது சம்பந்தப்பட்டவராவர். அநேகமாகக் கோரக் கொலையைப் பொருத்த வரையில் அவர் ஓர் அப்பாவியாக இருக்கக்கூடும். இவ்வாறு நான் கருதுவது சரியாகவே இருக்கும். இதை அடிப்படையாகக் கொண்டே முழுப் புதிருக்கும் விடை காணப் போகின் றேன். அவர் இங்கு வருவாரென்று ஒவ்வொரு கணமும் எதிர்பார்க்கின்றேன். ஒருவேளை அவர் வராமலேயே இருக் கலாம். எனினும் அவர் வருவார் என்றே எண்ணுகின் றேன். அவர் வந்தால், அவரை இங்கேயே இருக்கும்படி செய்ய வேண்டும். இதோ, துப்பாக்கிகள். எந்தச் சமயத்தில் எப்படி அவைகளைப் பயன்படுத்த வேண்டும் என்பதை நாம் அறிவோம்."

நான் என்னையறியாமலேயே துப்பாக்கிகளைத் தூக்கி னேன். டூப்பின் தமக்குத் தானே பேசிக் கொள்பவர்போல்

தொடர்ந்து பேசிக் கொண்டே போனார். இத்தகைய சம யங்களில் அவர் எவ்வாறு நடந்து கொள்ளுவார் என்பதை நான் ஏற்கனவே கூறியுள்ளேன். அவர் என்னோடுதான் பேசினார். ஆனால் வெகு தொலைவில் இருப்பவரோடு பேசு வது போன்று பேசினார். கண்களில் பாவம் இல்லை; சுவ ரைத்தான் நோக்கின.

“அண்டை அயலார் மாடிப்படியில் ஏறியபோது மேலிருந்துவந்த பேச்சுக் குரல்கள் இறந்து போனவர்களு டைய பேச்சுக் குரல்கள் அல்ல என்பதைச் சாட்சிகள் நிரூபித்து விட்டனர். ஆகவே, கிழவி முதலில் தம் மகளைக் கொன்றுவிட்டுப் பின்னர் தற்கொலை செய்துகொண்டு இறந்திருக்க வேண்டும் என்ற கேள்விக்கு இடமேயில்லை. மகளின் உடலை புகைப் போக்கிக்குள் திணிக்கும் அளவுக் குக் கிழவிக்கு வலிமை கிடையாது. கிழவியின் உடலில் இருந்த காயங்களிலிருந்தும் அவள் தற்கொலை செய்திருக்க முடியாது என்பது தெளிவாகிறது. ஆகவே வேறு யாரா வதுதான் கொலை செய்திருக்க வேண்டும். மாடியிலிருந்து வந்த குரல்கள் கொலையாளிகளுடைய குரல்களே. அந்தக் குரல்களைப்பற்றிய முழுச் சாட்சியத்தையன்று, அந்தச் சாட்சியத்தின் புதுமையைக் கவனிப்போம். அந்தச் சாட் சியத்தில் ஏதேனும் புதுமை யிருந்ததைத் தாங்கள் கவனித் தீரா?” என்றார் டூப்பின்.

“கடுமையான குரல் பிரெஞ்சுக்காரருடைய குரல் என்று எல்லாச் சாட்சிகளுமே கூறியுள்ளனர். ஆனால் கீச்சுக்குரலைப்பற்றிச் சாட்சிகளிடையே கருத்து வேறுபாடு கள் மிகுதியாகக் காணப்படுகின்றன,” என்றேன் நான்.

“அது சாட்சியமேயன்றி சாட்சியத்தின் புதுமையன்று. ஆகவே நீர் எதையும் குறிப்பாகக் கவனிக்கவில்லை என்று தோன்றுகிறது. கவனிக்க வேண்டியது இருந்துள்ளது. நீங்கள் சொல்லியபடி கடுமையான குரலைப் பொருத்த மட்டில் சாட்சிகளிடையே கருத்து ஒற்றுமை நிலவுகிறது.

ஆனால் கீச்சுக் குரலைப்பற்றி அவர்களிடையே கருத்து ஒற்றுமை இல்லை. அவ்வாறு கருத்து ஒற்றுமை காணப் படாதது புதுமையன்று. சாட்சிகள் ஒவ்வொருவரும் அதை வேற்று மொழிக்குரல் என்று குறிப்பிட்டதுதான் புதுமை. ஒவ்வொருவருக்கும் அது தம் தாய் மொழிக் குரல் அல்ல வென்பது திட்டமாகத் தெரியும். பிரெஞ்சுக்காரர் அது ஸ்பானிய மொழியாகக் இருக்குமெனக் கருதினார்; ஸ்பா னிய மொழி தெரிந்திருந்தால் சில சொற்களாவது விளங்கியிருக்கக்கூடும் என்றார். டச்சுக்காரர் அது பிரெஞ்சு மொழியாக இருக்கக்கூடும் என்று கூறினார். ஆனால் அவருக்குப் பிரெஞ்சு மொழி தெரியாது. ஆங்கி லேயர் அது ஜெர்மானியரின் குரல் என்றார். ஆனால் அவ ருக்கு ஜெர்மானிய மொழி தெரியாது. ஸ்பானியர் அது ஆங்கிலமாகத்தான் இருக்க வேண்டும் என்று சாதித்தார். ஆனால் அவர் ஆங்கிலத்தில் தற்குறி. இத்தாலியர் அது ரஷ்யருடைய குரல் என்று நம்புகின்றார். ஆனால் அவர் ரஷ்யரோடு என்றுமே பேசியது கிடையாதாம். இரண்டா வது பிரெஞ்சுக்காரருடைய சாட்சியம் முதல் பிரெஞ்சுக் காரருடைய சாட்சியத்திற்கு வேறாக உள்ளது. அவர் அது இத்தாலியருடைய குரலாகத்தான் இருக்க வேண்டும் என்று திட்டமாகச் சொல்லுகிறார். ஆனால் அவருக்கு இத் தாலி தெரியாது. ஆகவே அந்தக் குரல் எவ்வளவு அசாதா ரணமானது என்பது புலனாகவில்லையா? ஐந்து பெரும் ஐரோப்பிய மொழியினருக்கே அது என்ன மொழியென்று திட்டமாகத்தெரியவில்லையே! அது ஐரோப்பிய மொழியாக இல்லையென்றால் ஆப்பிரிக்க மொழியாகவோ அல்லது ஆசிய மொழியாகவோ இருக்கக்கூடும் என்று நீர் நினைக்கலாம். பாரிஸ் மாநகரில் ஆசியரோ அல்லது ஆப்பிரிக்கரோ மிகுதி யாக இல்லை. அது ஒரு பக்கம் இருக்கட்டும். மூன்று முக்கிய விஷயங்களை நீங்கள் கவனிக்க வேண்டும். ஒரு சாட்சி சொன்னார்: 'அந்தக் குரலைக் கீச்சுக்குரல் என்று சொல்லு

வதைவிட கடுமையான குரல் என்றே சொல்ல வேண்டும்.' அது அவசரமானதாகவும் சமமில்லாததாகவும் இருந்தது என்று வேறு இருவர் கூறினர். ஒருவருக்கேனும் ஒரு வார்த்தையேனும்-வார்த்தையென்று சொல்லும்படியான ஒலியேனும்-புலனாகவில்லை." என்றார் டூப்பின்.

டூப்பின் தொடர்ந்து பேசலானார் :

"நான் சொன்ன விளக்கங்களை நீர் எவ்வளவுக்குப் புரிந்துள்ளீர் என்று என்னால் திட்டமாகச் சொல்ல முடியாது. ஆனால் ஒன்று. குரல்களைப்பற்றிய சாட்சியத்தின் இந்தப் பகுதியே புதிரை விடுவிப்பதற்குரிய வழிக்கு அழைத்துச் செல்லும் சந்தேகத்தை தோற்றுவிக்கக் கூடியதாக உள்ளது. அந்தச் சந்தேகம் ஒன்றே புதிரை விடுவிக்கக்கூடிய மார்க்கத்தைக் காட்டக் கூடியதாகும். அந்தச் சந்தேகந்தான் என்ன என்று நீங்கள் கேட்கலாம். ஆனால் அதை நான் இப்போது சொல்லமாட்டேன். அறையில் நான் செய்யப்போகும் பரிசிலனைக்குத் தக்க உருவம் கொடுக்க வல்லது அச் சந்தேகம் என்பதை மட்டும் தாங்கள் மனதில் வைத்துக்கொண்டால் போதும்.

"கொலை நடந்த அறையில் நாம் இப்போது இருப்பதாக வைத்துக்கொள்ளுவோம். முதலில் நாம் எதை ஆராய்வோம்? கொலையாளிகள் எப்படித் தப்பியோடினார்கள் என்பதுதான் நமது முதல் கேள்வியாக இருக்கும். பேய் பிசாசுகளைப்பற்றி நம் இருவருக்குமே நம்பிக்கை இல்லை யென்பதைச் சொல்லத் தேவையில்லை. கிழவியும் அவளுடைய மகளும் பேயறைந்து சாகவில்லை. கொலை செய்தவர்கள் உலகில் நடமாடும் உயிரிகளே. அவர்கள் வெளியேறியதும் பருப்பொருள் உருவத்துடனேயே என்பதில் ஐயமில்லை. எப்படி வெளியேறினார்கள்? அதிர்ஷ்டவசமாக இதை ஆராய்வதற்கு ஒரு வழி உள்ளது. அந்த வழியால் திட்டமான முடிவைக் காணமுடியும். வெளியேறுவதற்குரிய வழி வகைகளை ஒன்றன் பின் ஒன்றாக ஆராய்

வோம். அன்டை அயலார் படிக்கட்டில் ஏறும்போது கொலையாளிகள் கிழவியின் மகளுடைய சவம் இருந்த அறையிலோ அல்லது அதை யடுத்த அறையிலோதான் இருந்திருக்க வேண்டும் என்பது திண்ணம். ஆகவே அந்த இரண்டு அறைகளைக் கொண்டுதான் நம் கேள்விக்கு விடை காண வேண்டும். போலீசார் தரை, மேற்றளம், சுவர்கள் முதலியவைகளை யெல்லாம் ஒன்று விடாமல் பரி சீலனை செய்துள்ளனர். அவர்கள் பரிசீலனைக்குப் புலப் படாதது ஏதும் இருக்க முடியாது. எனினும் அவர்கள் பரிசீலனையை முழுக்க நம்பாமல் நானும் அவ்வறைகளை நுணுக்கமாகப் பரிசீலனை செய்தேன். அப்போது எனக்கும் எத்தகைய மறைபொருளும் புலனாகவில்லை. அறைகளி லிருந்து படிக்கட்டுக்குச் செல்லவுள்ள கதவுகள் இரண் டுமே உட்புறம் உறுதியாகத் தாழிடப்பட்டிருந்தன. இப் போது புகைப்போக்கிகளைக் கவனிப்போம். அவைகளில் பெரிய பூனையைக்கூட உள்ளே நுழைக்க முடியாது. ஆகவே கொலையாளி புகைப்போக்கியின் வழியாகவும் வெளி யேறி இருக்க முடியாது. இனி சன்னல்களைக் கவனிப்போம். முன்னறைச் சன்னல் வழியாகக் கொலையாளி தப்பிச் சென் றிருக்க முடியாது. ஏனெனில் அப்படி அவர் சென்றிருந் தால் தெருவில் கூடியிருந்தவர்களுடைய கண்களுக்குத் தப்பியிருக்க முடியாது. ஆகவே பின்னறைச் சன்னல்களின் வழியாகத்தான் அவர் தப்பிச் சென்றிருக்க வேண்டும்.

"அந்த அறையில் இரு சன்னல்கள் உள்ளன. ஒன்று தட்டுமுட்டுச் சாமான்களால் மறைக்கப்படவில்லை. அடுத்த சன்னலை யொட்டி கட்டில் போடப்பட்டுள்ளது. கட்டி லின் மேற்பாகம் அச் சன்னலைப் பாதியளவுக்கு மறைத் துள்ளது. முதல் சன்னலின் கதவு உட்புறமாக இறுகப் பொருத்தப்பட்டிருந்தது. அதைத் திறக்க யாராலும் முடிய வில்லை. அச்சன்னலின் இடது சட்டத்தில் துளை போடப் பட்டு அதில் பெரிய ஆணியொன்று அறையப்பட்டிருந்தது.

அடுத்த சன்னலிலும் அத்தகைய ஆணி அறையப்பட்டிருந்தது. ஆகவே இந்தச் சன்னல்களின் வழியாகவும் கொலையாளி தப்பிச் சென்றிருக்க முடியாதென்று போலிசார் தீர்மானித்து விட்டார்கள். ஆகையினால் ஆணிகளைப் பிடுங்கிக் கதவுகளைத் திறப்பது அவசியமற்ற வேலையென்று கருதி விட்டுவிட்டனர்.

"என்னுடைய பரிசீலனை தனிமையானது. இந்தச் சன்னல்களில் ஏதாவது ஒன்றின் வழியாகத்தான் கொலையாளி தப்பிச் சென்றிருக்கவேண்டும் என்று நான் நினைக்கின்றேன். அப்படியிருந்தால் அவர்கள் கதவுகளை உட்புறமாக மறுபடியும் ஆணியால் அறைந்து பொருத்தியிருக்க முடியாதல்லவா? இதை யுத்தேசித்தே போலிசார் அச்சன்னல் கதவுகளைப் பரிசீலனை செய்யவில்லை. எனினும் சன்னல் கதவுகள் பொருத்தப்பட்டிருந்தன. ஆகவே அவைகள் தாமாகவே மூடியிருக்கவேண்டும். இந்தமுடிவுக்கு வருவதைத் தவிர வேறு வழியில்லை. தட்டுமுட்டுச் சாமான்களால் மறைக்கப்படாதிருந்த சன்னலில் அறைந்திருந்த ஆணியைச் சிரமப்பட்டுப் பிடுங்கிக் கதவைத் திறக்க முயன்றேன். ஆனால் கதவை இழுக்க முடியவில்லை. ஆகவே அதில் வெளிக்குத் தெரியாத ஸ்பிரிங் இருக்கவேண்டும் என்று எண்ணினேன். இந்தக் கருத்துத் தோன்றியதும் கதவை நன்கு பரிசீலனை செய்தேன். நான் நினைத்தது வீண்போகவில்லை. ஸ்பிரிங் இருப்பது தெரிந்தது. அதை அழுத்தினேன். கதவு படீரென்று திறந்தது. ஆணியை மீண்டும் அறைந்துவிட்டு அதை உற்று நோக்கினேன். அதன் வழியாகத் தப்பிச் சென்றவன் கதவை மூடியிருக்கலாம். ஸ்பிரிங் இருப்பதை அவன் கண்டறிந்திருக்கலாம். ஆனால் ஆணியைத் திருப்பி அறைந்திருக்க முடியாதே. ஆகவே இந்தச் சன்னல் வழியாகக் கொலையாளி தப்பிச் சென்றிருக்க முடியாது; அடுத்த சன்னல் வழியாகத்தான் சென்றிருக்க வேண்டும். அப்படியிருந்தால் ஆணிகளைப்

பொருத்திய முறையில் அதற்கும் இதற்கும் ஏதாவது வேறுபாடு இருக்கவேண்டும். கட்டில்மேல் ஏறிச் சன்னலை ஆராய்ந்தேன். இதிலிருந்த ஸ்பிரிங்கும் முதல் சன்னல் ஸ்பிரிங்கைப் போலவே இருந்தது. ஆணியைக் கவனித்தேன். இதுவும் அந்த ஆணியைப்போலவே பருமனாக இருந்தது; அதைப்போலவே தலைவரையில் அறையப் பட்டிருந்தது. இது என்னைத் திகைக்க வைத்திருக்கும் என்று நீங்கள் நினைக்கலாம். அப்படி நீங்கள் நினைத்தால், அப்போது நீங்கள் என் பகுப்பியலின் தன்மையைப் புரிந்து கொள்ளவில்லை என்றுதான் அர்த்தம். நான் என்றும் தவறியதே கிடையாது. கருத்துக் கோர்வையை என்றும் இழந்ததே கிடையாது. இரகசியத்தைக் கடைசிவரை ஆராய்ந்துவிட்டேன். முடிவை அறிந்துவிட்டேன். ஆணி தான் முடிவு. இந்த ஆணி அந்த ஆணியை எல்லாவகை யிலும் ஒத்திருக்கிறது. இது என்னுடைய முடிவைப் பொய்ப்பிப்பதாகத் தோன்றலாம். எனினும் இந்த ஆணி யில் ஏதோ தவறு இருக்கவேண்டும் என்று தோன்றியது. ஆணியைத் தொட்டேன். அதன் குமிழ் கையோடு கையாக வந்துவிட்டது. முறிந்த பாகத்தில் துருப்பி இருந்தது. ஆகவே அது முறிந்து வெகு நாட்களாகி இருக்கவேண்டும். சுத்தியால் அடித்து முறிக்கப்பட்டிருக்கவேண்டும். சுத்தி யின் தாரை பலகையில் பதிந்திருந்தது. குமிழை மீண்டும் அதில் வைத்துப் பொருத்தினேன். முறிவு தெரியாதபடிக் குப் பொருந்திவிட்டது. ஸ்பிரிங்கை அழுத்திக் கதவை இலேசாகத் திறந்தேன். திரும்பவும் கதவோடு கதவைமூடி னேன். ஆணியின் குமிழ் திரும்பவும் பழையபடிக்கு முறிவு தெரியாமல் பொருந்திவிட்டது. எப்படியும் புதிரை விடுவித் தாய் விட்டதல்லவா? ஆகவே கொலையாளி கட்டிலின் நேர் உள்ள சன்னல் வழியாகத்தான் தப்பித்து ஓடிவிட்டான். அவன் அச்சன்னல் கதவைத் திறந்து வெளியே போனதும் கதவு தானாகவே மூடிக்கொண்டது. ஆணியின் குமிழும்

பழைய படிக்குப் பொருந்திவிட்டது. இது போலீசாரை ஏமாற்றி விட்டது.

"அடுத்த கேள்வி அவன் எப்படி இறங்கியிருப்பான் என்பது. இதற்கும் நான் விடை கண்டுபிடித்துவிட்டேன். தங்களோடு வீட்டின் பின்புறம் சென்று பார்த்தேன் அல்லவா? அப்போது பின்புற அமைப்பை நன்கு கவனிக்க முடிந்தது. பிரஸ்தாபச் சன்னலுக்கு அப்பால் சுமார் $5\frac{1}{2}$ அடி தூரத்தில் இடிதாங்கிக் கம்பி செல்லுகின்றது. அங்கிருந்து சன்னலை எந்த மனிதனாலும் எட்டிப் பிடிக்க முடியாது. எட்டியே பிடிக்க முடியாதென்றால் அங்கிருந்து சன்னல் வழியாக உள்ளே நுழைந்திருக்கவும் முடியாதல்லவா? எனினும் நான்காம் மாடிச் சன்னல் கதவுகள் புதுவகையானவை என்பதை நான் கவனிக்க முடிந்தது. கதவுகளெல்லாம் ஒற்றைக் கதவுகளே யன்றி இரட்டைக் கதவுகளன்று. மேற்பாதிமட்டும் திறந்திராதியாக இருந்தது. ஆகவே அது கைப்பிடிக்கு ஏற்றதாக இருந்தது. சன்னல் கதவின் அகலம் $3\frac{1}{2}$ அடி இருக்கும். நாம் வீட்டின் பின்புறத்திலிருந்து அவைகளைப் பார்க்கும்போது அவை திறந்திருந்தன. நாம் அவைகளைக் கவனித்ததுபோன்றே போலீசாருந்தான் கவனத்திருப்பர். ஆனால் அவைகளின் அகலத்தைப்பற்றி அவர்கள் சிந்தித்திருக்கமாட்டார்கள். சன்னல் வழியாகக் கொலையாளி தப்பிச் சென்றிருக்க முடியாது என்று கருதிய அவர்கள் அதைப்பற்றிச் சிந்தித்திருக்க நியாயம் இல்லை. சன்னல் கதவை முழுக்கத் திறந்து வைத்தால் அதற்கும் இடிதாங்கிக் கம்பிக்குமிடையேயுள்ள தூரம் இரண்டு அடிதான் இருக்கும். மற்றும் அசாதாரண பலமிருந்தால் அந்தக் கம்பியிலிருந்து சன்னல் கதவை எட்டிப்பிடித்து அதன் வழியாக உள்ளே நுழையக்கூடும். கொலையாளி கம்பியின் வழியாக ஏறியிருப்பான். ஏறிச் சன்னல் வரையில் சென்று, சன்னல் கதவை எட்டிப் பிடித்திருப்பான். அதைக் கெட்டி

யாகப் பிடித்துக்கொண்டு கால்களைச் சுவற்றில் ஊன்றி வேகமாகத் தாவி உள்ளே குதித்திருப்பான்.

"இத்தகைய காரியத்தை வெற்றிகரமாகச் சாதிக்க அசாதாரணத் திறமை வேண்டும் என்று சொன்னேன், அல்லவா ? அதை நீங்கள் குறிப்பாக ஞாபகம் வைத்துக் கொள்ளுங்கள். இப்போது என்னுடைய திட்டம் என்ன வென்றால், முதலில் அத்தகைய காரியம் நடைபெற்றிருக்கக் கூடும் என்றும் இரண்டாவதாக அக்காரியத்தைச் செய்த வனுக்கு மிகவும் அசாதாரணத் திறமை இருந்திருக்க வேண்டும் என்றும் காட்ட முற்படுகின்றேன்.

"என்னுடைய கருத்தைச் சாதிக்கச் செயலின் திறமை யின் முழு மதிப்பை வலியுறுத்துவதைவிட அதைக் குறைத்து மதிப்பிடவேண்டும் என்று நீர் சொல்லலாம். அவ்வாறு செய்வது சட்டத்துறைக்குப் பழக்கமானதாக இருக்கலாம். ஆனால் அது பகுத்தறிவுக்குப் பொருந்தாது. நான் வழக்கை விசாரிக்கும் நீதிபதி யல்லவே ! என்னு டையை நோக்கமெல்லாம் உண்மையைக் கண்டறிய முற் படுவதே. நான் இப்போதுதான் குறிப்பிட்ட மிகவும் அசா தாரணச் செயலையும் இன்ன மொழிக்குரல் என்று ஒருவ ராலும் அறிய முடியாதுபோன பிரஸ்தாப கீச்சுக்குரலையும் ஒன்றோடொன்று சம்பந்தப்படுத்திப் பாருங்கள்."

டூப்பின் இதுகாறும் சொன்னவைகளிலிருந்து உண்மை புலனுவதுபோல் தோன்றியது. ஆனால் அதைப் புரிந்து கொள்ளும் ஆற்றல் எனக்கில்லை. டூப்பின் தொடர்ந்து பேசலானார்.

"நான் இப்போது ஆராய்ச்சியை வேறு பக்கம் திருப்பி விட்டேன். கொலையாளி எப்படி வெளியேறினன் என் பதை ஆராய்வதை விட்டுவிட்டு அவன் உள்ளே சென்ற மார்க்கத்தை ஆராய்கின்றேன். இரண்டு மார்க்கங்களும் ஒரே மார்க்கந்தான் என்று நான் கருதுகின்றேன். இனி அறையின் உட்புறத்தைப் பற்றிக் கவனிப்போம். 'அறை

யின் உட்புறத்தைச் சர்வே செய்து பார்ப்போம். பீரோ வின் டிராய்களில் இருந்த பொருள்களில் சில கொள்ளை யடிக்கப் பட்டிருக்கக்கூடும் என்று சொன்னார்கள், அல் லவா? அது முழுப் பொய்; முட்டாள்தனமான முடிவு. அவைகளில் இருந்த பொருள்களில் சில எடுக்கப்பட்டிருக் கும் என்று எப்படி நிரூபிப்பது? எஸ்பனுயும் அவருடைய மகளும் தனித்து வாழ்ந்தவர்கள்; வேறு யாரும் அவர்கள் வீட்டிற்கு வந்தது கிடையாது; அவர்களும் வெளியே போனது கிடையாது ஆகவே பலவகையான உடைகளை வைத்திருக்க வேண்டிய அவசியம் அவர்களுக்குக் கிடை யாது. அவர்கள் வழக்கமாக அணியும் உடைகள் எவ்வ ளவு நல்லவையோ அவ்வளவு நல்லவையாய் இருக்கவேண் டும் பீரோவில் காணப்பட்ட உடைகளும். திருட வந்தவன் நல்ல உடைகளை ஏன் எடுத்துச் செல்லவில்லை? ஏன் எல்லா உடைகளையும் எடுத்துச் செல்லவில்லை? அதுதான் போகட்டும். நாலாயிரம் பொற்காசுகளை அவன் ஏன் விட்டுச் சென்முன்? நாலாயிரம் பொற்காசுகளும் பைகளில் இருந்தது இருந்தவாறு கிடந்தனவே! ஆகவே கொலையாளி திருட்டுக்காக வந்தவன் அல்ல என்பது தெளிவாகின்ற தல்லவா? இதை நீங்களாவது நம்புங்கள். பாங்கியிலி ருந்து பணம் கொண்டு வந்து கொடுத்தார்கள் என்பதை அடிப்படையாக வைத்துக் கொண்டு கொலையாளி திருட வந்தவன் என்று போலீசார் கருதினார்களே-என்னே! அவர்களுடைய அறியாமை! பணம் வீட்டிற்கு வந்து சேர்ந்ததற்கு மூன்று நாட்களுக்குள் கொலை நடந்தது என்பதற்காக இரண்டுக்கும் சம்பந்தம் இருப்பதாகக் கருது வதா? பனம்பழம் விழுவதற்கும் காகம் உட்காருவதற்கும் சரியாக இருந்தால் காகம் உட்கார்ந்ததினால்தான் பனம் பழம் விழுந்தது என்று சொல்லுவதா? பொற்காசுகள் திருட்டுப் போயிருந்தால், பணம் வந்து சேர்ந்ததற்கும் கொலைக்கும் சம்பந்தம் இருப்பதாகக் கருதலாம். கொலை

யாளி பணத்திற்காகவே கொலை செய்தான் என்று எண்ண லாம். பணம் திருட்டுப் போகாமல் இருக்கும்போது, பணமே கொலைக்குக் காரணம் என்று கருதுவதனால், கொலையாளி அவ்வளவு பணத்தையும் விட்டுச் செல்லும் அளவுக்கு முட்டாளாகத்தான் இருந்திருக்க வேண்டும்.

"புதுமையான குரல், அசாதாரணச் செயல், கொலைக்கு எந்தவிதமான நோக்கமும் இல்லாதிருப்பது ஆகிய குறிப்புக்களை மனதில் கொண்டு கொலையைப் பற் றியே ஆராய்ந்து பார்ப்போமாக. கிழவியின் மகள் வெறும் கைப் பலத்தாலேயே கொல்லப்பட்டுப் புகைப் போக்கிக் குள் தலைகீழாகத் திணிக்கப்பட்டுள்ளாள். சாதாரணக் கொலையாளிகள் இத்தகைய முறைகளைக் கையாளுவதில்லை. சபத்தை மறைப்பதற்கு இந்த வழியையா கையாளுவார் கள். புகைப் போக்கிக்குள் சபத்தைப் திணிப்பது மனிதன் செய்யக்கூடிய காரியமா? எத்தகைய பயில்வானால்கூட அக்காரியத்தைச் செய்ய முடியாதே. பெரிய எலிகூட உள்ளே நுழைய முடியாத அவ்வளவு சிறிய குழாயுக்குள் ஓர் உடலைத் திணிப்பதற்கு எவ்வளவு சக்தி இருந்திருக்க வேண்டும் என்பதை எண்ணிப் பாருங்கள். உடலை இழுத்து வெளியே எடுப்பதற்குப் பலபேர் ஒன்றுசேர்ந்து முயற்சிக்க வேண்டியாக இருந்ததே! அப்படியிருக்கும்போது அதை உள்ளே திணித்தவனுக்கு எவ்வளவு வலிமை இருந்திருக்க வேண்டும்! அப்பப்பா! அதை நினைத்துக்கூடப் பார்க்க முடியவில்லை. அவ்வலிமை மனிதனுக்கு அப்பாற்பட்ட தாகத்தான் இருக்க வேண்டும்.

இது மட்டுமா? அடுப்பங்கரை யண்டையில் கூந்தல் கள் கொத்துக் கொத்தாகக் கிடந்தனவே! அவைகளைப் பற்றி எண்ணிப் பாருங்கள். அவைகள் தலையிலிருந்து வேரோடு பிடுங்கி யெறியப் பட்டவை. பத்து, இருபது மயிரை ஒன்ருகப் பிடுங்குவதற்கே நம்மால் முடிவதில்லை. அப்படியிருக்கும்போது நூற்றுக் கணக்கான மயிர்களைக்

கொத்துக் கொத்தாகத் தோலோடு பிடுங்கி யெறிய எவ்வளவு பலம் இருக்கவேண்டும். அது மனிதனுல் கற்பனை கூட செய்து பார்க்க முடியாத அளவுக்கு அசாதாரணமானது என்பதில் எள்ளளவும் ஐயமே கிடையாது. கிழவியின் கழுத்து அப்படியே துண்டிக்கப் பட்டிருக்கிறது. தலை வேறு முண்டம் வேருகத் துண்டிக்கப் பட்டிருக்கிறது; இவ்வாறு துண்டிக்கப்பட்டது எதனுல்? வெறும் சவரக் கத்தியால். இதையும் நீங்கள் சிந்தித்துப் பார்க்க வேண்டும். கிழவியின் உடலிலிருந்த காயங்களைப் பற்றிச் சொல்லவே தேவையில்லை. கனமான கருவியில்தான் அத்தகைய காயங்களை ஏற்படுத்தி யிருக்க முடியும் என்று இரு டாக்டர்களும் சொன்னர்களே! அவர்கள் சொன்னது முற்றிலும் சரி. முற்றத்துக் கல்தளமே அத்தகைய கருவியாகும். மாடியறையின் கட்டிலோரச் சன்னலிலிருந்து கிழவியின் உடல் கீழே விழுந்ததினுல் எலும்புகள் நொறுங்கி விட்டன. இந்தக் கருத்து போலீசாருக்குப் புலப்படவில்லை. ஆணிகள் செய்த வேலை கதவுகள் திறக்கப்பட்டே இருக்கமாட்டாவென்று அவர்கள் முடிவு செய்யும்படி யாயிற்று. இதனுலேயே நான் சொன்ன கருத்து அவர்கள் பரிசிலனைக்கு எட்டவில்லை.

"இவைகளன்றி, அறையின் அலங்கோல நிலையைப் பற்றியும் எண்ணிப் பாருங்கள். இதுவரையிலும் வியக்கத் தக்க செயல், மனிதனுக்கு அப்பாற்பட்ட வலிமை, மூர்க்கத்தனமான கொடுமை, நோக்கமற்ற கொலை, எந்த நாட்டாரும் கேட்டறியாத, சொல்லமைப்பற்ற குரல் ஆகியவைகளைச் சம்பந்தப்படுத்தி விட்டோம். இதிலிருந்து நாம் என்ன தெரிந்து கொள்ள முடியும்? உங்கள் கற்பனைக்கு ஏதாவது எட்டியதா?" என்ருர் டூப்பின்.

டூப்பின் திடீரென்று புதிர் போடுவார் என்று நான் எதிர்பார்க்கவே யில்லை. "பக்கத்துப் பைத்தியக்கார ஆஸ்பத்திரியிலிருந்து தப்பித்து வந்த பைத்தியக்காரன் எவ

னுவது இக்கோரச் செயலைச் செய்திருப்பான்" என்றேன் நான்.

"நீங்கள் சொல்வதிலும் சிறிது உண்மை இருக்கிறது. ஆனால் பைத்தியக்காரனுடையகுரல் எவ்வளவுதான் மோசமாகப் போனாலும் பிரஸ்தாபக் கீச்சுக் குரல் மாதிரி இருக்கவே இருக்காதே. பைத்தியகாரன் ஏதாவதொரு நாட்டவனாகத்தான் இருக்க வேண்டும். அவன் பேச்சு அர்த்தமற்றதாக இருந்தாலும் அதில் சொல்லமைப்பு இல்லாமல் போகாதே. தவிரவும் பைத்தியக்காரனுடைய தலைமயிர் இந்த மயிர் (தம் கையிலிருந்த மயிரைக் காட்டி) மாதிரி இருக்காது. இந்த மயிர் கிழவியின் கைப்பிடியிலிருந்து விடுவிக்கப்பட்டது. இதிலிருந்து நீங்கள் என்ன தெரிந்து கொண்டீர்?" என்று கேட்டார் டூப்பின்.

டூப்பினின் ஆராய்ச்சியைக் கண்டு நான் மலைத்தேன். "இத்தகைய மயிரை நான் பார்த்ததே கிடையாது! இது மனிதருடைய மயிராக இருக்க முடியாது" என்றேன் நான்.

"இது மனிதருடைய மயிர் என்று நான் சாதிக்கவில்லையே. இதைப்பற்றி முடிவு செய்வதற்குமுன் இந்தக் காகிதத்தில் வரையப்பட்டுள்ள படத்தைப் பாருங்கள். இது காமியின் கழுத்தில் பதிந்திருந்த நகக்கீரல்களின் நேர்படி."

"இந்தப் படத்தை நன்றாக உற்றுக் கவனியுங்கள். இது மிக உறுதியான 'குரங்குப்' பிடியைக் காட்டவில்லையா? கழுத்தைப் பிடித்த பிடி நழுவவேயில்லை என்பது தெரிகின்றதல்லவா? ஒவ்வொரு விரலும் முதலில் எந்த இடத்தில் அழுத்தப்பட்டதோ அதே இடத்தில் மாறாமல் இருந்திருக்கின்றதல்லவா? அந்தந்த விரல் தாரைகளில் தங்களுடைய கைவிரல்களை வைத்துப் பாருங்கள். பொருந்துகின்றனவா என்று பாருங்கள்" என்றார் டூப்பின்.

நான் வைத்துப் பார்த்தேன். எள்ளளவேனும் பொருந்தவில்லை.

"நாம் இதை முழுக்கச் சோதிக்கவில்லையென்றே கருது கிறேன். சமதளத்தில் காகிதத்தை விரித்துச் சோதித்துப் பார்த்தோம். இது சரியன்று. கழுத்து சமதளமல்லவே! உருண்டையாகத்தானே இருக்கிறது. இதோ! இங்கே உருண்டையான மரக்கட்டை ஒன்று உள்ளது. இதனு டைய சுற்றளவும் கழுத்தினுடைய சுற்றளவும் ஏறக் குறைய சமமாக இருக்கும். காகிதத்தை இக் கட்டையில் சுற்றிச் சோதித்துப் பாரும்."

அப்படியே செய்து பார்த்தேன். என் கைவிரல்கள் படத்தில் வரையப்பட்டிருந்த தாரைகளில் பொருந்த வில்லை.

"இது மனிதக் கையினுடைய அடையாளம் அல்ல" என்றேன்.

"இதோ! இந்தப் புத்தகத்தில் இந்தப் பத்தியைப் படியுங்கள்" என்று கூவியர் (Cuvier) எழுதிய நூல் ஒன் றைக் கொடுத்தார்.

கிழக்கிந்தியத் தீவுகளில் காணப்படும் ஊராங் ஊட் டான் எனப்படும் மனிதக் குரங்கைப்பற்றி அந்நூலில் விளக்கிக் கூறப்பட்டிருந்தது. ஊராங் ஊட்டான் மிகப் பெரியது. பயங்கரமான தோற்றமுடையது; அசாதாரண வலிமை உடையது; மூர்க்கத்தனமானது. சிறு குழந்தை யைப் போல் கூச்சலிடக்கூடியது. மயிர் சிவப்பாயிருக்கும். இந்த விளக்கத்தைப் படித்தவுடன் கோரக் கொலையின் கொடுமைகளை உடனே புரிந்துகொண்டேன்.

"ஊராங் ஊட்டானுடைய விரல்களின் விவரணை பிரஸ்தாப படத்தை ஒத்திருக்கிறது. அந்தப் படத்தில் வரையப்பட்டுள்ள கைத்தாரைகள் ஊராங் ஊட்டான் போன்ற கொடிய மிருகத்தினுடைய கைத்தாரைகளாகத் தான் இருக்க முடியும். இந்த மயிர்கள் கூடக் கூவியர் வர் ணித்துள்ள ஊராங் ஊட்டானின் மயிரை ஒத்துள்ளன. ஆனல் கோர சம்பவத்தின் விஷயங்கள் இன்னும் சரியாக

விளங்கவில்லை. தவிரவும் இரு குரல்கள் கேட்டதாக அல்லவா சாட்சிகள் சொல்லியுள்ளனர். அவைகளில் ஒன்று பிரெஞ்சுக்காரருடைய குரல் என்றும் திண்ணமாகச் சொல்லியுள்ளனரே!" என்றேன் நான்.

"உண்மையே, அந்த குரலில் "அட கடவுளே!" என்ற சொல் புலனாயிற்றென்று சில சாட்சிகள் சொல்லியுள்ளனர். இந்த இரண்டு சொற்களைக் கொண்டே புதிரை விடுவித்து விடலாம் என்று நம்புகின்றேன். ஒரு பிரெஞ்சுக்காரனுக்குக் கொலை நடந்தது தெரியும். எனினும் கோரக் கொலை நிகழ்ச்சிகளில் அவன் எத்தகைய பங்கும் எடுத்துக் கொள்ளவில்லை என்று சொல்லலாம். கொலையின் பயங்கர நிகழ்ச்சிகளுக்குக் கர்த்தாவான ஊராங் ஊட்டான் அவனிடமிருந்து தப்பியிருக்கக்கூடும். கொலை நடந்த அறை வரையில் அவனும் அதன் பின்னாலேயே ஓடிவந்திருக்கலாம். ஆனால் அந்தச் சூழ்நிலையில் அவன் அதைத் திருப்பிப் பிடித்திருக்கமாட்டான். மேலும் மேலும் யூகிக்க விரும்பவில்லை. இந்த யூகங்களை மற்றவர்கள் புரிந்து கொள்ளும்படி செய்வதெப்படி? ஆகவே அவைகளை யூகங்கள் என்று சொல்லுவதோடு சரி. பிரஸ்தாப பிரெஞ்சுக்காரன் கோரச் செயல்களைப் பொருத்த வரையில் அப்பாவி என்பது உண்மையானால் நாம் நேற்று வீட்டிற்குத் திரும்பும் வழியில் "லே மாண்ந்து" (கப்பல் மாலுமிகள் விரும்பிப் படிக்கக்கூடிய பத்திரிகை) அலுவலகத்தில் கொடுத்து வந்த இந்த விளம்பரம் அந்தப் பிரெஞ்சுக்காரரை நிச்சயமாக நம் இருப்பிடத்திற்கு வரவழைக்கும்," என்றார் டூப்பின்.

அந்த விளம்பரத்தாளை நீட்டினார். அதில் பின்வரும் விளம்பரம் பிரசுரமாயிருந்தது.

"பிடிபட்டது—இன்று அதிகாலையில் (கொலை நடந்த நாள்) "பாயில் தே போலோ"த் தெருவில், பெரிய ஊராங் ஊட்டான் ஒன்று பிடிபட்டது. (மால்தீஸ் கப்பலைச் சார்ந்த

மாலுமி என்று கருதப்படும்) அதற்குரியவர்.........தெருவில்......எண் வீட்டிற்கு வந்து மிருகத்தை அடையாளம் கண்டு பிடித்துப் பெற்றுச் செல்லலாம்.''

''அந்த ஆள் மாலுமி என்றும் மால்தீஸ் கப்பலைச் சார்ந்தவர் என்றும் தங்களுக்கு எப்படித்தெரியும்?'' என்று கேட்டேன் நான்.

''அவரை நான் அறியேன். எனினும் இந்த ரிப்பன் துண்டு மாலுமிகள் பயன்படுத்தும் ரிப்பனாகும். மற்றும் இந்த முடிச்சு மால்தூஸுக்கே சிறப்பான முடிச்சாக உள்ளது. இந்த ரிப்பன் துண்டு இடிதாங்கிக் கம்பியின் அடியில் கிடந்தது. இது கொலையுண்டவர்களுடையதாக இருக்கமுடியாது. இந்த ரிப்பன் துண்டிலிருந்தே பிரஸ்தாப பிரெஞ்சுக்காரர் மால்தூஸ் கப்பலைச் சார்ந்த மாலுமி என்ற முடிவுக்கு வந்தேன். இந்த முடிவு தப்பாகவே இருந்தாலும் என் விளம்பரத்தால் தீங்கு ஒன்றும் நேராது. எனது யூகம் தப்பாக இருந்தால் சந்தர்ப்பம் என்னைத் தவறான முடிவுக்கு வரும்படி செய்தது என்று அவர் எண்ணிக் கொள்ளுவார். நான் செய்த முடிவு சரியாக இருந்தால் கொலையின் மர்மத்தை அறிவதில் வெற்றி பெறுவோம். அப் பிரெஞ்சுக்காரர் என் விளம்பரத்துக்குப் பதில்போடத் தயங்குவார். எனினும் ''நானோ ஏழை; கொலைக்குச் சம்பந்தமல்லாத அப்பாவி; ஊராங் ஊட்டானைக் கை நழுவ விடக்கூடாது. அதை நல்ல விலைக்கு விற்கலாம். கொலையை எண்ணி அஞ்சி, கிடைத்த புதையலை விட்டு விடுவதா! ஊராங் ஊட்டான் பாயில் தே போலோத்தில் பிடிபட்டது. அதற்கும் கொலை நடந்த இடத்திற்கும் வெகு தொலைவு. அந்தக் கொடிய விலங்குதான் கொலையைச் செய்திருக்க வேண்டும் என்ற சந்தேகம் யாருக்கு எழப் போகின்றது? போலிசாரே தவறிவிட்டனர். மயிரிழை அளவு ருசுக்கூட அவர்களுக்குப் புலனாகவில்லை. ஊராங் ஊட்டான்தான் கொலை செய்தது என்று அவர்கள்

கண்டே பிடித்துவிட்டாலும் என்னைக் குற்றவாளியாகக் கருதுவதற்கு எந்தவிதமான காரணமும் கிடையாது. மேலும் என்னை அவர்கள் அறியாதவர்களா? அந்த ஊராங் ஊட்டானுக்கு உரியவர் நான் என்று விளம்பரதாரர் குறிப்பிட்டுள்ளார். நான் அதற்கு உரிமை கொண்டாடாமல் விட்டுவிட்டால் சந்தேகத்திற்கு ஆளாக நேரிடும். பிறருடைய கவனம் என்பாலோ அல்லது ஊராங் ஊட்டான்பாலோ விழும்படி செய்ய நான் விரும்பவில்லை. ஆகவே நான் விளம்பரத்துக்குப் பதில் போட்டு ஊராங் ஊட்டானை வாங்கிக் கொண்டு வந்து விடவேண்டும். எனினும் கொலை வழக்குத் தீரும் வரையில் இவ் விஷயத்தை வெளியிடக்கூடாது என்று அவர் தமக்குள் எண்ணுவார்'' என்ருர் டூப்பின்.

இந்தச் சமயத்தில் படிக்கட்டில் காலடியோசை கேட்டது.

"கைத் துப்பாக்கியுடன் தயாராக இருங்கள். ஆனல் சைகை செய்யும் வரையில் துப்பாக்கியைப் பயன்படுத்தவோ, காட்டவோ கூடாது'' என்ருர் டூப்பின்.

வீட்டின் முன் கதவு திறந்து வைக்கப்பட்டிருந்தது. நாங்கள் எதிர்பார்த்தவர் வந்துவிட்டார்; உள்ளே நுழைந்தார். மணியை அடிக்காமலேயே உள்ளே நுழைந்ததோடு படிக்கட்டில் ஏறிவந்தார். மேலும் ஏறிவரத் தயங்கினுர். திரும்பிக் கீழே இறங்கிச் சென்ருர். டூப்பின் கதவண்டை ஓடினுர். அதற்குள் அவர் மீண்டும் மேலேறி வருவது தெரிந்தது. மீண்டும் திரும்பிச் செல்லாமல் ஒரே முடிவாகப் படிக்கட்டைக் கடந்து மேலே வந்து எங்கள் அறையின் கதவைத் தட்டினுர்.

"வாருங்கள்'' என்று வரவேற்ருர் டூப்பின் புன்முறுவலோடு. அவர் மாலுமியேதான். நல்ல உயரம். உருண்டு திரண்ட உடல். கம்பீரமான தோற்றம். அவருடைய முகம் வெய்யிலால் கருக்கப்பட்டிருந்தது. மீசையும் தாடி

யும் பாதி முகத்தை மறைத்து விட்டன. கையில் தடி யொன்று வைத்திருந்தார். வேறு ஆயுதம் ஒன்றும் அவரி டம் இல்லை. வணங்கி, 'மாலை வணக்கம்' என்றார்.

"உட்காருங்கள். ஊராங் ஊட்டான் சம்பந்தமாக நீங்கள் வந்துள்ளீர் என்று எண்ணுகின்றேன். நீங்கள் அதை வைத்திருப்பது கண்டு பொறாமையாகக்கூட இருக் கிறது. ஒப்புயர்வற்ற விலைமதிப்புள்ள விலங்கு. அதற்கு என்ன வயதிருக்கும்?" என்று கேட்டார் டூப்பின் வந்த வரை நோக்கி.

மாலுமி பெரிய ப்ாரம் இறங்கியதுபோல் பெருமூச்சு விட்டார். "ஊராங் ஊட்டானுக்கு என்ன வய திருக்கும் என்று என்றால் திட்டமாகச் சொல்ல முடி யாது. எனினும் அதற்கு நான்கு அல்லது ஐந்து வய துக்கு மேலிருக்காது. அது இங்கே இருக்கின்றதா?" என் றார் மாலுமி.

"இல்லை. அதை இங்கே வைத்திருப்பதற்கேற்ற வசதியில்லை. அருகாமையிலுள்ள டூபரோத் தெருவில்தான் கூண்டில் அடைத்து வைத்துள்ளோம். நீங்கள் அதை அடையாளம் கண்டுபிடித்து விடுவீர் என்று எண்ணுகின் றேன்" என்றார் டூப்பின்.

"நிச்சயமாக !"

"அதைவிட்டுப் பிரியவே எனக்கு மனமில்லை" என்றார் டூப்பின்.

"நீங்கள் பட்ட சிரமமெல்லாம் வீண் சிரமமாகப் போகவேண்டும் என்று நான் எண்ணமாட்டேன். அதைக் கண்டு பிடித்தற்குத் தக்க வெகுமதி யளிக்கத் தயாராக உள்ளேன்."

"நல்லது; அது சரியே. என்ன வெகுமதி கேட்பது என்றுதான் யோசிக்கிறேன். ஓ! என்ன கேட்பது என்று புலனாகி விட்டது. மார்க்கியூத் தெருவில் நடந்த கொலை களைப்பற்றித் தங்களுக்குத் தெரிந்த தகவல்களை ஒளியா

மல் சொல்லுங்கள். இதுவே நான் தங்களிடம் எதிர்பார்க்கும் வெகுமதியாகும்" என்று மெதுவாகப் பேசினார் டூப்பின்.

பேசிக் கொண்டே எழுந்து சென்று, கதவைப் பூட்டி சாவியைத் தன் சேப்பில் போட்டுக் கொண்டார். உடனே தன் இடையில் செருகியிருந்த கைத் துப்பாக்கியை வெளியே எடுத்து மேஜைமேல் வைத்தார்.

மாலுமி திடுக்கிட்டார். எழுந்து தடியைக் கையில் எடுத்தார். ஆனால் உடனே உட்கார்ந்து கொண்டார்; நடுங்கினார். முகம் களையிழந்து விட்டது. அவரைப் பார்ப்பதற்குப் பரிதாபமாக இருந்தது.

டூப்பின் இனிய முகத்தினராய், "நண்பரே, பயப்படாதீர்கள்! பயப்படுவதற்கு என்ன இருக்கிறது. உங்களைத் துன்புறுத்தும் நோக்கம் எனக்கில்லை. உங்களுக்கு எத்தகைய தீங்கும் இழைக்க மாட்டேன். இது உறுதி. மார்க் கியூத் தெருவில் நடந்த கோரச் செயல்களுக்குத் தாங்கள் பொறுப்பாளியல்ல வென்பதை நான் நன்கு அறிவேன். எனினும் கொலைகளுக்கும் தங்களுக்கும் ஏதேனும் ஒரு வகையில் தொடர்பு இருக்கும். என் பேச்சிலிருந்தே இவ் விஷயத்தைப் பற்றிய தகவல்களை நான் அறிவேன் என்பது தங்களுக்குப் புலனாகும். நான் இவ்விஷயத்தை அறிவேன் என்று நீங்கள் எதிர் பார்த்திருக்க முடியாது. நீங்கள் எத்தகைய குற்றமும் புரியவில்லை. நீங்கள் திருடவில்லை; கொலை செய்யவில்லை. மறைக்கும்படியாக எதுவும் செய்யவில்லை. அப்படியிருக்க ஏன் பயப்படவேண்டும். தங்களுக்குத் தெரிந்த தகவல்களைத் தயங்காமல் சொல்லலாம். மேலும் உண்மையை உரைக்கத் தாங்கள் கடமைப் பட்டுள்ளீர். ஏதும் அறியாத ஒருவரைக் குற்றவாளியாக்கிச் சிறையில் வைத்துள்ளனர். உண்மையான குற்றவாளியைத் தாங்கள் காட்டமுடியும். காட்டினால் அநியாயமாகச் சிறைபட்டவர் விடுதலை பெறுவார். ஆகவே

உண்மையை உரைப்பதே உகந்ததாகும்" என்று மாலுமியை ஊக்குவித்தார்.

மாலுமிக்கு அச்சம் நீங்கிவிட்டது. கொஞ்சம் தைரியத்தோடு பேசலானார். "கடவுள்தான் என்னைக் காப்பாற்ற வேண்டும். உண்மையை உள்ளவாறு சொல்லி விடுகின்றேன். நான் அப்பாவி. இதை நீங்கள் நம்பினாலும் சரி; நம்பாவிட்டாலும் சரி. உயிரையே இழக்க நேர்ந்தாலும் சரி; உண்மையை உரைத்து விடுகின்றேன்."

அவர் சொல்லியதன் சாரம் வருமாறு: சமீபத்தில் அவர் கிழக்கிந்தியா போனாராம். அவரும் அவருடைய சகாக்களும் போர்னியோவில் இறங்கினராம். உல்லாசப் பொழுது போக்கத் தீவினுள் நுழைந்து சுற்றிப்பார்த்தனராம். அவரும் அவருடைய நண்பர் ஒருவரும் ஊராங் ஊட்டானைப் பிடித்தனர். அவருடைய நண்பர் இறக்கவே ஊராங் ஊட்டான் அவருக்கே உரியதாயிற்று. அதை பாரிஸுக்குக் கொண்டு வந்து சேர்ப்பதற்குள் படாத தொல்லைகளெல்லாம் பட்டாராம். பாரிஸுக்குக் கொண்டு வந்ததும் அவர் அதை தம்முடைய வீட்டிலேயே பாதுகாப்பாக அடைத்து வைத்தாராம். அதைக் கப்பலில் ஏற்றும் போது அதன் காலில் அடிபட்டுக் காயமாகிவிட்டது. அந்தக் காயம் ஆறும் வரையில் அதை யாருக்கும் காட்டக் கூடாதென்று ஒருவருக்கும் சொல்லாமல் மறைத்துவைத்து வந்தாராம். காயம் ஆறினபின் அதை நல்ல விலைக்கு விற்று விடவேண்டும் என்பதே அவருடைய நோக்கமாகும்.

கொலைகள் நடந்த இரவின்போது மாலுமி மற்ற மாலுமிகளுடன் கேளிக்கை-விளையாட்டுக்களில் கலந்து கொண்டு இரவு வெகுநேரம் கழித்துத்தான் வீட்டிற்குத் திரும்பினாராம். அச் சமயத்தில் ஊராங் ஊட்டான் மாலுமியினுடைய படுக்கை அறையில் இருந்ததாம். அது அடுத்த அறையிலிருந்த கூண்டை உடைத்துக் கொண்டு படுக்கை

அறைக்கு வந்துவிட்டதாம். கையில் சவரக் கத்தியுடன் காட்சியளித்தது. முன்னால் முகம் பார்க்கும் கண்ணாடி வைக்கப்பட்டிருந்தது. முகத்தில் சோப்பு நுரையோடிக் கிடந்தது. சவரம் செய்ய முயற்சி செய்துகொண்டிருந்தது. அதற்கு முன்னர் ஒருநாள் தன் எஜமான் சவரம் செய்வதைக் கூண்டின் இடுக்கு வழியாகப் பார்த்துவிட்டது போலும். மூர்க்கத்தனமான மிருகத்தின் கையில் சவரக் கத்தி இருப்பதைக்கண்ட மாலுமி செய்வதறியாது திகைத்தாராம். எனினும் அதைச் சாட்டையால் விரட்டுவதற்கு அவர் பழகியிருந்தாராம். ஆகவே இப்போதும் சாட்டையைக் கொண்டு அதை வழிக்குக் கொண்டுவர முயன்றார். சாட்டையை எடுத்தார். சாட்டையைக் கண்டவுடன் ஊராங் ஊட்டான் அறையைத் திறந்து கொண்டு படிக்கட்டில் கீழே இறங்கியது. திறந்திருந்த ஜன்னல் ஒன்றின் வழியாகத் தெருவில் குதித்து ஓடத் தொடங்கியது.

மாலுமி வேறு வழியின்றி அதைப் பின் தொடர்ந்து சென்றார். ஊராங் ஊட்டான் அவ்வப்போது நின்று பின்னால் திரும்பிப் பார்த்துக் கொண்டு சென்றது. கொஞ்ச நேரம் நிற்பது, எஜமான் அருகில் வந்துவிட்டார் என்று தெரிந்ததும் மீண்டும் ஓடுவது—இவ்விதமாக வெகுநேரம் வரையில் ஓடிக் கொண்டே இருந்தது. தெருக்களில் ஜன நடமாட்டம் இல்லை. அதிகாலை மூன்று மணி யிருக்கும். மார்க்கியூத் தெருவின் பின்புறச் சந்து வழியாக வந்ததும் எஸ்பனுயின் மாடியறையிலிருந்து திறந்திருந்த சன்னல் வழியாக வந்த வெளிச்சம் ஊராங் ஊட்டானின் கவனத்தைக் கவர்ந்தது. வெளிச்சத்தைக் கண்ட ஊராங் ஊட்டான் அக்கட்டத்தை நோக்கிச் சென்றது; எப்படி ஏறுவது என்று யோசித்தது. இடிதாங்கிக் கம்பியைக் கண்டது. உடனே அதைத் தொத்திக் கொண்டு விறுவிறு வென்று மேலே ஏறிச் சென்றது. நான்காம் மாடியறை

யின் திறந்திருந்த சன்னல் கதவை எட்டிப் பிடித்து ஒரே தாவில் அறைக்குள் இருந்த கட்டிலின்பேரில் குதித்தது.

மாலுமிக்கு ஒரு வகையில் சந்தோஷம்; மற்றொரு வகையில் சஞ்சலம். ஊராங் ஊட்டான் இனி யெங்கே தப்பிச் செல்ல முடியும். திரும்பியும் அதே கம்பி வழியாகத்தானே கீழே இறங்கியாக வேண்டும். அப்படி இறங்கி வரும்போது தடுத்து நிறுத்திப் பிடித்துக் கொள்ளலாம் என்று எண்ணி மகிழ்ந்தார். ஆனால் கத்தியுடன் அறைக்குள் குதித்த ஊராங் ஊட்டான் அங்கு யாருக்கு என்ன தீங்கிழைக்கப் போகின்றதோ என்ற கவலை மறு பக்கம். இந்த எண்ணம் தோன்றியதும் அதே கம்பி வழியாக மாலுமியும் மேலே ஏறிச் சென்றார். சன்னல் வரையில் வந்ததும் சன்னல் கதவை எட்டிப் பிடிக்க முயன்றார். ஆனால் அது அவருக்கு எட்டவில்லை. எனினும் அறைக்குள் நடந்ததை எட்டிப் பார்க்க முடிந்தது. அறைக்குள் அவர் கண்ட காட்சி அவரை உலுக்கி விட்டது. அப்போது தான் அறைக்குள் இருந்து பிரஸ்தாப அபலக்குரல் எழுந்தது. ஊராங் ஊட்டான் அறைக்குள் குதித்த சமயத்தில் எஸ்பனையும் அவள் மகள் காமியும் இரும்புப் பெட்டியிலிருந்த காகிதங்களை ஒழுங்கு படுத்திக் கொண்டிருந்தனர். பெட்டி திறந்திருந்தது; அதிலிருந்த சாமான்கள் கீழே வைக்கப்பட்டிருந்தன.

மாலுமி உள்ளே எட்டிப்பார்த்த சமயத்தில் ஊராங் ஊட்டான் எஸ்பனையின் கூந்தலைப் பிடித்துக் கொண்டு அவளுடைய முகத்தின் முன்னால் சவரம் செய்யும் நாவிதனைப் போன்று கத்தியை அப்படியும் இப்படியும் திருப்பியது. இதைக் கண்ட காமி மூர்ச்சித்துக் கீழே விழுந்தாள். ஊராங் ஊட்டான் எஸ்பனையின் கூந்தலைப் பிடித்து இழுத்ததை அவளால் தாங்க முடியவில்லை; கதறினாள்; போராடினாள். எஸ்பனையின் எதிர்ப்பு ஊராங் ஊட்டானின் கோபத்தைக் கிளப்பியது. அதுவரையில்

அமைதியாக இருந்த குரங்குக்கு வெறி கிளம்பியது. கொண்டது விடான் மூர்க்கன் என்பதுபோல் மூர்க்கவெறி கொண்ட ஊராங் ஊட்டான் கிழவியின் கூந்தலைக் கொத் துக் கொத்தாகப் பிய்த்து எறிந்துவிட்டு, கழுத்தைத் திருகிக் கொன்றது. இரத்தம் வெள்ளக் காடாகப் பெருகியது. இரத்தம் பெருகியோடுவதைக் கண்டதும் அதனுடைய மூர்க்கத்தனம் மேலும் அதிகரித்தது. பற்களை நறநற வென்று கடித்தது; கண்களில் தீப்பொறி பறந் தது. கோபாவேசத்துடன் மூர்ச்சித்துக் கிடந்த காமி யின் பேரில் தாவியது. அவளுடைய குரல் வளையைப் பிடித்து நசுக்கியது. அவளுடைய உயிர் போகும் வரையில் பிடித்த பிடியை விடவேயில்லை. அடங்கா வெறியுடன் அங்கிங்கும் அலைந்தது. சுற்றிலும் தன் கொடிய பார்வையைச் செலுத்தியது. ஜன்னலின் வெளிப் புறத்தை நோக்கியது. தம் எஜமானின் பயங்கர முகத் தைக் கண்டது. எஜமானின் சாட்டை நினைவுக்கு வரவே மூர்க்கவெறி பயமாக மாறியது. தான் செய்த காரியத் திற்குத் தக்க தண்டனை கிடைக்கும் என்பதை உணர்ந்து தான் செய்த கொடுஞ்செயல்களை மறைக்க முற்பட்டது. அறைக்குள் அங்குமிங்கும் ஓடியது. தட்டு முட்டுச் சாமான்களையெல்லாம் தூக்கி எறிந்தது. கட்டிலில் கிடந்த படுக்கையை இழுத்து அப்பால் போட்டது. கடை சியில் காமியின் உடலைக் கைப்பற்றி புகைக் குழாயுக்குள் திணித்தது; பின்னர் கிழவியின் உடலைத் தூக்கிச் சன்னல் வழியாக வெளியே எறிந்தது.

குரங்கு கிழவியின் உடலுடன் சன்னலை நெருங்கு வதைக் கண்ட மாலுமி பயந்து கம்பியில் சறுக்கிக் கீழே இறங்கி வேகமாக வீட்டை நோக்கி ஓடினர். ஒரே ஓட் டத்தில் வீட்டை அடைந்தார். கொலையின் விளைவைக் கருத்தில் கொண்டு ஊராங் ஊட்டானை மறந்தார். அன்டை அயலார்கள் படிக்கட்டில் ஏறும்போது

மேலிருந்து வந்த பேச்சரவம் மாலுமி அச்சத்தால் அலறிய ஓசையே யாகும்.

இதற்கு மேலும் சொல்ல வேண்டியது என்ன இருக்றது. அபலக்குரலைக் கேட்டு அபயம் அளிக்க ஓடி வந்த அண்டை அயலார் கதவை உடைத்துக் கொண்டு மேலே வருவதற்குள் பயங்கரக் கொலைகளைச் செய்து முடித்து விட்ட ஊராங் ஊட்டான் ஏறிச் சென்ற வழியாக இறங்கி வரும்போது சன்னல் கதவை மூடியிருக்கும். டூப்பின் செய்த விளம்பரம் வெறும் டூப்புத்தான். உண்மையை அறியவே இந்தத் தந்திரத்தைக் கையாண்டார். ஊராங் ஊட்டானை அவர் பிடிக்கவும் இல்லை; அண்டைத் தெருவில் அடைத்து வைக்கவும் இல்லை. சில நாட்களுக்குப் பின்னால் மாலுமியே அதைப் பிடித்து விட்டார்; பிடித்து நல்ல விலைக்கும் விற்று விட்டார். உண்மைத் தகவல்களை தந்திரத்தால் சேகரித்த டூப்பின் சிறையில் இருக்கும் நண்பரை விடுவிக்க விரைந்தோடினார். போலீசாருக்கு உண்மையை எடுத்துக் கூறி லேபோனின் விடுதலைக்கு வழி தேடினார். லே போன் டூப்பினுக்கு என்றோ ஒரு காலத்தில் செய்த சிறிய உதவியை டூப்பின் மறக்காமல் இருந்ததோடு, தக்க சமயத்தில் அவரை மரண தண்டனையிலிருந்து விடுவித்தார். புதிர் விடுவிக்கும் டூப்பின் மரண தண்டனையையே தடுத்து நிறுத்தி விட்டார். எனினும் போலிஸ் தலைவர் தம் நண்பர் டூப்பினிடம் தம் தோல்வியை மறைக்க முடியவில்லை. டூப்பின் இவ்விஷயத்தில் தலையிட்டதை அதிகப் பிரசங்கித்தனம் என்றுகூட எண்ணினார். தம்மால் கண்டறிய முடியாத உண்மையைக் கண்டுபிடித்தமைக்கு டூப்பினைப் பாராட்டக்கூட அவருக்கு மனம் வரவில்லை.

டூப்பின் அதைப் பற்றிக் கவலைப் படவில்லை. "அவரை அவருடைய துறையிலேயே தோற்கடித்து விட்டேன். இதற்குமேல் இனியென்ன இருக்கிறது. கொலையின் மர்மத்தை அவர் கண்டுபிடிக்க முடியாததில் ஆச்சரியம் ஒன்று

மில்லை. உண்மையில் அதைக் கண்டுபிடிக்கும் அளவுக்கு அவருக்கு அறிவுக் கூர்மை கிடையாது. எல்லாம் வீண் சம்பம்; பொய்க் குண்டு. ஆனால் அவர் மொத்தத்தில் கெட்டிக்காரர்தான். வெறும் பேச்சாலேயே பெரும் புகழ் அடைந்து விட்டார் அல்லவா?" என்றார்.

---

எட்கார் அல்லன் போவை தற்காலத் துப்பறியும் கதைகளின் தந்தையென்றே சொல்லலாம். அல்லன் போவின் கற்பனைத் திறனுக்கும் கிளர்ச்சியுணர்விற்கும், உணர்ச்சிப் பெருக்கிற்கும் இணையோ, ஈடோ இல்லை எனக் கூறுவது மிகையாகாது.